# நூல் விவர அட்டவணை


| | | | |
|---|---|---|---|
| 1. | நூலின் பெயர் | : | ஆச்சார்யப் பிரபாவம் |
| 2. | பொருள் | : | இலக்கியம் |
| 3. | ஆசிரியர் பெயர் | : | ரெங்கநாயகி கள்ளப்பிரான். |
| 4. | பதிப்பாண்டு | : | 1998 |
| 5. | பதிப்புரிமை | : | ஆசிரியருக்கே |
| 6. | மொழி | : | தமிழ் |
| 7. | நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| 8. | தாள் | : | சேஷாயி 16 kg |
| 9. | கட்டமைப்பு | : | செக்ஷன் |
| 10. | அச்சு எழுத்து | : | 11 pt. |
| 11. | மொத்தப் பக்கம் | : | 232 |
| 12. | விலை | : | 100 ரூபாய் |
| 13. | பதிப்பாளர் | : | பாபா பதிப்பகம் |
| 14. | அச்சகம் | : | சக்தி பிரிண்டர்ஸ் & எண்டர்பிரைசஸ் |
| 15. | கிடைக்குமிடம் | : | a) 3/116 சிதம்பரம் கார்டன்ஸ்<br>ஸ்டெர்லிங் ரோடு<br>சென்னை - 34.<br>போன் 8271373<br><br>b) சக்தி பிரிண்டர்ஸ் &<br>எண்டர்பிரைசஸ்<br>49. தாண்டவராயர் தெரு<br>தண்டையார்பேட்டை<br>சென்னை - 600 021.<br>போன் 5962867 |

## நன்றி உரை

இந்த நூல் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் மத சம்பந்தமான நூல்களை அச்சிட்டுப் பதிப்பிக்கும் பணிக்குப் பொருளுதவி செய்யும் திட்டத்தின் கீழ் நிதிஉதவி பெற்று பதிப்பிக்கப்பட்டது என்பதை நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ரெங்கநாயகிகள்ளப்பிரான்
ஆசிரியர்

## THANKS

We gratefully acknowledge grant of financial assistance from Tirumala Tirupathi Devasthanam in bringing this book.

Renganayaki Kallapiran
Author

Sri
Srimathe Ramanujaya Nama:



Phone : 50119 (04635)

# SRI VANAMAMALAI MUTT

**Nanguneri - 627 108.**

# ஆசிஉரை

## ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீ கலியின் வானமா மலை ராமானுஜ ஜீயர்ஸ்வாமி

### ஸ்ரீமதி ரெங்கநாயகி கள்ளபிரான்

அன்பார்ந்த சிறந்த ஸ்ரீ வைஷ்ணவி ஸ்ரீமதி ரெங்கநாயகி கள்ளபிரான் அவர்கட்கும், அவரது குடும்பத்தைச் சார்ந்தவர் அனைவர்க்கும் எமது மனமுவந்த மங்களாசாஸனங்கள். உங்களது ''ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரா பிரபாவம்'' நூலின் கையெழுத்துப்பிரதி நாம் நமது வடபுல யாத்திரைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த சமயம் நமக்கு வந்து சேர்ந்தது. பெரிய யாத்திரையாக பரிவாரம் புடைசூழப் புறப்பட்டுக்கொண்டிருந்த தவிர்க்க முடியாத சூழ் நிலை காரணமாக நூலினைப் படித்துப்பார்த்து நமது கருத்தினை எழுதி வழங்க அவகாசமே இல்லாமற்போயிற்று. யாத்திரைக்காலத்தில் படித்து மகிழ்ந்து எழுதுவதும் முற்றிலும் இயலாலொன்றாயிற்று. 6.6.97 புறப்பட்டுச்சென்ற யாம் 28.11.97 அன்றுதான் நம் வானமாமலைக்கு திரும்பி வந்து சேர்ந்தோம். ஓரிரு தினங்கட்கு முன்னர்தான் பழைய தபால்களது கோப்புகள் நம் பார்வைக்கு கொணரப்பட்ட போதே தங்களது ஞாபகமூட்டும் கடிதத்தினைக் காணமுடிந்தது. முன்னர் ''**ஆழ்வார்கள் அருளமுதம்** நூலினை நாட்டிற்கு - குறிப்பாக தமிழ்கூறும் நல்லுலகிற்கு அளித்து, அதற்கு தமிழக அரசின் பரிசைப் பெற்றுள்ளவர் நீவிர். அந்நூலின் தொடர் முயற்சியாக இந்த விரிவான குருபரம்பரை நூலினை இப்போது எழுதி முடித்து வெளியிடுகின்றீர்கள். இந்நூலின் சில முக்கியப் பகுதிகளைப் படித்துப் பார்த்துச் சுவைத்தின்புற இப்போது சிறிது அவகாசம் கிட்டியது. பானைச்சோற்றில் ஓரவிழ் பதம் பார்ப்பது

போல் (இதனை வடமொழியில் ஸ்தாலிபுலாக நியாயம் என்பர்) படித்து மகிழ்ந்துள்ளமையால் நூல் முழுதுமே இவ்வாறு மிகவரு மையாகவே அமைந்திருக்குமென்பதில் எமக்கு ஐயமேதுமில்லை. இந்நூலினை திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பொருளுதவி நல்கி வெளியிட்டிட வேணும் என்பது நமது பேரவா. எத்த னையோ நூல்களை இவ்வாறு வெளியிட்டு உலகிற்கு உபகரிக்கும் தேவஸ்தானத்தார் மனமுவந்து இதனையும் வெளியிடும் பணிபுரி வார்கள் என்றே யாம் நம்புகிறோம். அது தேவஸ்தானத்தோரும், படிக்கும் சான்றோரும் யாவருமே திருவேங்கடவனருளையும், பூருவாசாரியர்களது, திருவருளையும் பெற்றிடவும் வழிவகுக்கும் என்பதும் நமது எண்ணம். நூற்றாண்டுகட்கு முன்பேயே விரிவாக எழுதப்பட்டு விளங்கும். "**குரும்பரம்பராப்ரபாவம்**" (ஆறாயிரப் படி) "**யதீந்திரப் பிரணவப்பிரபாவம்**" முதலிய சீரிய நூல்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி எழுதப்பட்டுள்ள இந்நூல், மணிப்பிர வாள நடையின்றி நல்ல சீரிய தமிழிலேயே எளிதாக எழுதப்பட் டுள்ளமையால் ஆத்திக மக்கள் அனைவர்க்குமே பயன் விளைத்தி டும் பாங்கு படைத்து விளங்குகின்றது. நூலாசியர்க்கு நமது மனமார்ந்த மங்களாசாஸனங்கள். இன்னும் இதே போன்ற நூல்க ளைத் தொடர்ந்து படைத்து இவ்வம்மையார் மிகச்சீரிய பணி செய்திடவும் யாம் மனமார வாழ்த்துகிறோம்.

6.12.97 — ஸ்ரீ ராமானுஜன்

(ஸ்ரீ கலியின் வானமாமலை ராமானுஜ ஜீயர் ஸ்வாமி)

# அணிந்துரை

ஸ்ரீமதி ரங்கநாயகி கள்ளபிரான் அவர்கள் சமீபத்தில் ஸ்ரீவைஷ் ணவ குரு பரம்பரை வைபவம் பற்றிய உயர்ந்த விஷயங்களை ஆராய்ந்து, அவைகளை எல்லோரும் தெளிவாக அறிந்து கொள் ளும் வகையில் எழுதி, அந்த ப்ரசுரத்தின் நகல் ஒன்றை எனக்கு அளித்தார்கள். நான் இந்த ப்ரசுரத்தை படித்து, ஆச்சர்யமடைந் தேன். பரமாநந்தம் கொண்டேன்.

தமிழ்நாடு அரசாங்கத்தால் சமீபத்தில் கௌரவிக்கப்பட்டுள்ள ஸ்ரீமதி ரங்கநாயகி கள்ளபிரான் அவர்களின் ஆசார்ய பக்தியும், ஆராய்ச்சி திறமையும், ரத்ன சுருக்கமாக ஆசார்ய வைபவங்களை விவரிக்கும் சிறப்பும் மிகவும் மனதை தொட்டன. ஆசார்ய சம்பந்தம், பகவானின் அருள்பெற இன்றியமையாதது என்பது ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தின் அடிப்படை தத்துவம். நல்ல ஆசார் யர்களை அடைந்து, அவர்கள் பாதத்தாமரைகளை ஆஸ்ரயித்து, அந்த அவதார புருஷர்களின் மதிப்பிட முடியாத உபஹாரத்தால் போக, மோக்ஷபலனை ஒரு ஜீவன் சுலபமாக அடையக்கூடும் என்பது வைணவத்தின் ஆதார நம்பிக்கை. ஆசார்யர்கள் ஸர்வேஸ் வரனை ஸ்வாதீனமாக அடைந்தவர்கள் பரம தயாளுக்கள். ஜீவன் கள் ஸம்ஸாரத்தில் உழன்று, எல்லையிலா சோகங்களுக்கு உட்பட் டிருப்பதைக் கண்டு, மனது இரங்கி, ஸ்ரீமன் நாராயணனின் ஸம்பந்தத்தை நமக்கு உண்டு பண்ணி வைத்து, ஸத்ஸம்ப்ரதாயத் தில் நம்மை சேர்த்து வைத்து, ஸதா சார்யர்கள் சங்கிலித்தொடர் போல் செய்து வரும் உதவிகளுக்கு ஈடு, இணையானது இவ்வுல கில் ஏதும் இல்லை.

ஸ்ரீமதி ரங்கநாயகிகள்ளபிரான் எத்தனையோ சிரமங்கள் எடுத் துக்கொண்டு, ஆசார்ய சம்பந்த ப்ரபாவங்களையும் சுலபமாக ஸ்ரீரங்கப் பெரிய கோயில் பற்றியும் யாவரும் படித்து, அறிந்து, உய்யும் வகையில் எழுதி உதவி இருக்கும் தொண்டு, மிகவும் பாராட்டப்பட வேண்டிய விஷயம். அவர்கள் முன்னர் எழுதிய அரசாங்க கௌரவம் பெற்ற ''ஆழ்வார்கள் அருளமுதம்'' என்ற நூலிற்கு தொடராக இருக்குமாறு எழுதியுள்ள ''குரு பரம்பரை பிரபாவம்'' என்ற ஆராய்ச்சி நூல் சீக்கிரமாக ப்ரசுரிக்கப்பட்டு, பண்டிதர்களுக்கும், பாமரர்களுக்கும் உதவி புரியும் விசேஷ வெளி யீடாக இருந்துவர, ஸ்ரீ பூமிதேவி ஸமேத திருவிண்ணகரானின் திருவடிகளில் ப்ரார்த்திக்கிறேன்.

**Scarborough**
NY. 10510
Feb, 15, 1997

**Dr. Varadachari Sadagopan**
**ஸ்ரீ பகவத் ராமாநுஜ தர்ஸன**
**தாத்பர்ய சார்த்தூலம்,**
**ஒப்பிலியப்பன் கோயில் வரதாச்சாரி சடகோபன்**

# திருவரங்கப் பெரிய கோவிலும் ஆச்சார்ய ப்ரபாவமும்
# பரிந்துரை

நம் தமிழகத்தில் அடைமொழியின்றி கோயில் என்று சிறப்பு டன் வழங்கும் தலம் இரண்டு. ஒன்று திருவரங்கம். மற்றொன்று சிதம்பரம். இங்கே நம் கட்டுரை ஆசிரியர் திருமதி ரெங்கநாயகி கள்ளப்பிரான் அவர்கள் ஸ்ரீரங்கம் பெரிய கோவிலைப் பற்றிய இதுவரை நான் அறிந்திராத பல விபரங்களைக் கூறி வியக்க வைக்கின்றார்.

வரலாற்றுச் சிறப்புகளோடு கூடிய இவ்விபரங்கள்; அதன் வளர்ச்சி இடையில் பிற மதத்தினரால் ஏற்பட்ட தளர்ச்சி, பின் ஆச்சாரிய பெருமக்களின் அயராத தொண்டினால் இன்றுவரை சிறந்து நிற்கும். அதன் அருமை பெருமைகள் யாவையும் அணுகி; ஆராய்ந்து காரண காரியங்களோடு விளக்கும் பாங்கு மிகப்பாராட் டுக்குரியது.

இன்றைய இளைஞர்கள் எதற்கும் சான்றுகள் தேடும் காலம் இது. கல்லூரி ஆசிரியை ஆதலால் இளைய தலைமுறைகளும் விரும்பி புரிந்து கொள்ளும் வண்ணம், வரலாற்று கால நிலைக ளைக் குறிப்பிட்டு ஆற்றொழுக்காகச் செல்வதால் படிப்பதற்கு சுவை குன்றாது கீழே வைக்க மனமின்றித் தொடர்கிறோம்.

மாட மாளிகை சூழ்திரு வீதியும் மன்னுசேர் திருவிக்ரமன் வீதியும், ஆடல்மாறன் அகளங்கன் வீதியும் ஆலி நாடன் அமர்ந் துறை வீதியும் = கூடல்வாழ் குல சேகரன் வீதியும் குலவிராச மகேந்திரன் வீதியும் = தேடரிய தர்மவர்மன் வீதியும் தென்னரங்கர் திருவாவரணமே, என அரங்கப்பதியின் அழகிய வர்ணனை பண் டைய முன்னோர்களின் வாழ்க்கைக்கு நம்மை இட்டுச் செல்கின்றது.

திருவரங்கத்தின் முதல் சுற்றிலிருந்து, அடி அடியாக ஒவ் வொரு பகுதியையும் சுட்டிக் காட்டிக்கொண்டே அழைத்துச் சென்று பேரருளாளன் அரங்கன்முன் நிறுத்துகின்றார், இந்த அனுப வம் மிகுந்த Guide. நாள் பூசனை, விழா காலங்கள் அதன் சிறப்புகள், விழாவின் பொருள்கள் காரண காரியங்கள் இவை எல்லாமும் தெளிவாக விளக்கப்படுகின்றன. ஸ்ரீரங்கம் போனோம், பெருமாளைச் சேவித்தோம் என்று கூறுபவர்கள்தான் பெரும்பா லோர். ஆச்சாரியப் பெருமக்களின் குன்றாத பக்தியும் தியாகமுமே

இந்தப் பெருமைக்கு எல்லாம் அடிப்படை என்பதை உணரவைக் கின்றார்.

ஸ்ரீ ஆளவந்தாரின் விருப்பப்படி அவர் வாரிசானவர் ஸ்ரீ இராமானுஜர். எம்பெருமானாரின், தீர்க்க தரிசனமான நிர்வாகத்தி றன், அவர் திட்டமிட்டு வகைப்படுத்திய ஒழுங்கு மாறாது இன்றளவும் ஆலய நிர்வாகம் சிறப்புற இயங்கி வருவதும் மக்கள் நாளும் விழாக்கோலம் காண்பவராய் திரளாகச் சென்று அரங்க னைச் சேவித்து இன்பமுறுவதும் அரங்கனின் பேரருளும் ஆச்சாரி யர்களின் அருந்தொண்டுமேயாகும். என்கிறார் ஆசிரியர்.

அடுத்து (தமிழர்கள் படித்துப் பயனடைய வேண்டிய நூல்கள் இவை) ஸ்ரீ வைணவத்தின் அடிப்படைக் கொள்கை, பெருமாளை அடைய ஆச்சாரியனின் துணை இன்றியமையாதது, என்பது. இதை விளக்குகின்றது ஆச்சாரியப் பிரபாவம். ஸ்ரீ நாத முனிகள் துவங்கி ஸ்ரீ மணவாள மாமுனிகள் ஈறாக, வரலாற்று குறிப்புகள், காலநிர்ண யம், அவர்களது தியாகம் பெருமாளோடு கொண்ட இணக்கம் (தோழமை - தொண்டு) இதனால் பெற்ற மனோதிடம் சகிப்புத் தன்மை இவைகளை எல்லாம் அறிய மெய் சிலிர்க்கின்றோம். உதாரணமாக கூரத்தாழ்வான் வரலாறு, ஆச்சாரியனுக்காக அனைத் தையும் விட்டு தன் கண்ணையும் இழந்த மாபெரும் அடியார். அதுவே போல் திருக்கோட்டியூர் நம்பியிடம் தான் பெற்ற மந்திரப் பொருளை மக்கள் குலமெல்லாம் உய்ய வேண்டுமென்ற பெருங்க ருணையோடு நான் ஒருவன் நரகம் புகினும் மக்கள்குலம் உய்ய கூவி அழைத்து ஓதிய ஸ்ரீ எம்பெருமானார், ராமானுஜர். ஸ்ரீ வைணவத்தின் தூண்களாகிய ஆச்சாரியப் பெருமக்களின் பிரபா வங்களை கட்டுரை ஆசிரியர் நிதியமாக வாரி வழங்குகின்றார். நாமும் இன்பமாக சுவைத்து பயனடைகின்றோம்.

ஆசிரியர் திருமதி ரெங்கநாயகி அவர்கள் இப்படைப்பின் மூலம் வைணவத்திற்கு மட்டுமல்ல. மனித வாழ்க்கைக்கு இன்றிய மையாத பற்பல நற்கருத்துகளைத் திரட்டி வழங்கியுள்ளார். தான் பிறந்த வைணவ குலத்திற்கும், மக்கள் சமுதாயத்திற்கும் இதன் மூலம் பெரும் சேவை செய்த அவர் வாழ்க பல்லாண்டு. பல் லாண்டு. மேலும் பல எழுத்துகள் தொடர்ந்து வழங்கி தமிழ் மக்கள் பயனடைவார்களாக. அண்மையில் இவரது முந்தைய படைப்பான ஆழ்வார்கள் அருளமுதம் என்ற நூலிற்கு மாநிலப்பரிசு கிடைத்துள் ளது மகிழ்ச்சிக்குரியது.

நியூயார்க்
13.1.97

தொண்டர் துகள்
**து. ஜயகாந்தம்**

# முகவுரை

விஷ்ணுவை முழுமுதற் கடவுளாகக் காணும் வைணவ மதம் ரபஞ்ச உயிரினம் அனைத்தின் நலத்தையும் உட்கருத்தாகக் காண்டது என்பது, வைணவர் கொண்டுள்ள இறை நிலைக்கோட் ாட்டின் தத்துவமாகும். அநாதி மதமான இவ்வைணவ மதம்; ரபஞ்ச எல்லை நிலத்தை அளாவிய இக்கண்ணோட்டம்; அணு ாக வந்து அகிலமாகப் பெருகிய திருவிக்ரம அவதாரமானச் சயலினின்றும் புலப்படும். நாராயணன் அருள் அறிவிற்சிறந்தவர் ளுக்கு மட்டும்தான் என்றில்லாமல் பக்தி ஒன்றையே மூலதனமா க் கொண்ட அனைவருக்கும் என்பதை உணர்த்துகிறது இம்மதம்.

ஆழ்வார்களை அடிஒற்றி வந்த ஆச்சார்ய சீலர்களின் வாழ்க்கை ரலாறு; கொள்கையைத் தீர்மானித்துக்கொண்டு அதற்கு ஆதாரம் தடும் சில சமயவாதிகளைப் போலில்லாமல், ஆதாரங்களின் டிப்படையில் கொள்கையை நிறுவும் இந்த இராமானுஜ தர்ச ம்; பிரஹ்ம சூத்திரங்களையும் தமிழ் மறைகளாம் ஆழ்வார்கள் ருளிச்செயல்களையும் பிரமாணமாகக் கொண்டிருக்கிறது. எனது ந்தைய படைப்பான 'ஆழ்வார்கள் அருளமுதம்' என்ற நூலில் ழ்வார்களைப்பற்றியும் அவர்கள் அருளிச்செயல்களைப் பற்றி ம் எழுதிவிட்டபடியால், இந்நூல் ஆச்சார்யர்களைப் பற்றிய ரபாவமாக வந்துள்ளது.

ஸ்ரீமந் நாராயணனிடமிருந்து தொடங்கி, மணவாள மாமுனி ள் ஈராக உள்ள உபயவேதாந்த குரு பரம்பராவம்சாவளி, (ஆச் ார்ய பரம்பரை) நம்மாழ்வாரைப் பிரதானமாகக் கொண்ட ஆழ் ார்களுடையவும், அவர்கள் வழிவந்த ஆச்சார்யர்களுடையவும் ரம்பரையையும், வைபவத்தையும் பேசும் இயல்பின. இத்தகைய ூல்கள் பல மணிப்பிரவாள நடையில் (தமிழும் சமஸ்கிருதமும் லந்த நடை) உள்ளன. மாமுனிகள் அருளிய உபதேசரத்னமாலை ில் மிகச்சுருக்கமாக, ஆழ்வார்களையும் ஆச்சார்யர்களையும் பற் ிய குறிப்புகள் காணப்படுகின்றன. திவ்யப்பிரபந்த பராமான்ய மர்த்தனம் என்ற பகுதி குரு பரம்பராப்பிரபாவத்தின் இறுதியில் ில பிரதிகளில் மட்டுமே காணப்படுகின்றது. தவிரவும் அக்காலத் ில் வழக்காற்றில் இருந்த தமிழ்நடையும் மிகவும் வேறுபட்டுப் டித்துப்புரிந்து கொள்ளக் கடினமானதாகவே இருக்கிறது.

ஆழ்வார்களது அருளிச் செயல்களையெல்லாம் மேற்கோள் காட்டி இவ்வாழ்வார்கள் தம் பரமக்கிருபையால் இத்திவ்யப் பிரபந்தங்களை, உய்பவர்க்கு உய்யும் வண்ணமாக அருளிச்செய்து, உலகத்தை வாழ்வித்தருளித்தன்னுடைய சோதிக்கு எழுந்தருளினார் கள் என்று குறிக்கப்பட்டுள்ளது. பிரபந்நாம்ருதம், யதீந்திரப் ப்ரவணபிரபாவம், ராமானுஜார்யதிவ்ய சரிதை முதலான ஆச்சார் யர்களைப் பற்றின வரலாற்று நூல்களிலும், சரமோபாய நிர்ணயம், பெரிய திருமுடியடைவு, குருபரம்பரா விவரணம், பிரமாணத்தி ரட்டு முதலான நூல்களிலும் வரலாற்றுக்குறிப்புகள் காணப்படு கின்றன.

இவற்றையெல்லாம் துணை கொண்டு என் அறிவுக்கு எட்டிய படி, நாதமுனிகள் தொடக்கமாக மணவாள மாமுனிகள் ஈறாக உள்ள ஆச்சார்யப் பெருமக்களின் வரலாற்றைச் சுருக்கமாகத் தந்துள்ளேன். இறுதியில் 13-ம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்ரீமந் நிகமாந்த தேசிகரது வரலாற்றையும் அவரது அருளிச்செயல்களை யும் கொண்ட பகுதி, தேசிகப்பிரபந்தமாக அமைக்கப்பட்டுள்ளது.

ஆச்சார்யப் பிரபாவத்திற்குள் நுழையுமுன் முன்னுரையாக வைணவத்தின் அடிநிலைப்பண்புகள் என்ற ஒரு சிறு கட்டுரை அமைந்துள்ளது. அதில் வைணவத்தின் தொடக்கம், முக்கிய கொள்கைகள் முதலியன கூறப்பட்டுள்ளன. அதை அடுத்து ஆச்சார் யர்கள் இருந்து நிர்வாஹம் பண்ணின ஆச்சார்ய பீடமான திருவரங் கம் பெரிய கோயில் என்ற கட்டுரையில் திருவரங்கக்கோயில் வரலாறு, விழாக்கள், அவற்றின் தாத்பர்யங்கள், அரையர் சேவை பற்றிய தகவல்கள் யாவும் கூறப்பட்டுள்ளன. அடுத்து ஆச்சார்யப் பிரபாவம் கூறியபின் இறுதியில் முடிவுரையாக வைணவ தர்மம் என்ன என்பதை இறுதிக்கட்டுரை பேசுகிறது. கூடுமானவரை வடமொழிச் சொற்களைத் தவிர்த்து எல்லோருக்கும் புரியும்படி யாக இனிய எளிய தமிழில் எழுத வேண்டும் என்பதுதான் அடியேனுடைய அவா. ஆனால் விஷயமே வடமொழித் தொடர்பு டையதாக இருப்பதனால் அரும்பதவுரை என்று இறுதியில் ஒரு அட்டவணை அமைத்துள்ளேன். அதில் முக்கியமான வடமொழிச் சொற்களுக்கு உரை தந்துள்ளேன்.

அமெரிக்காவில் வைத்து எழுதப்பட்ட நூலாதலால் அமெரிக் கப் பிரமுகர்கள் ஸ்ரீமதி ஜயகாந்தம் துரைக்கண்ணு அவர்களும்,

ஸ்ரீ பகவத்ராமானுஜ தர்ஸன தாத்பர்ய சார்த்தூலம் ஸ்ரீமான் Dr. வரதாச்சாரி சடகோபன் அவர்களும், மனமுவந்து நூல்முழுவதும் ஆராய்ந்து அழகான பரிந்துரை வளங்கியுள்ளார்கள். குட்டுப்பட வேண்டிய மோதிரக்கையால், கிரீடமே அணிவித்ததை எண்ணி மகிழ்கிறேன். எந்த இடமாக இருந்தாலும், நல்லறிஞர்கள், நல்உள் ளமும் கொண்டவர்களாக இருந்து விட்டால் குவலயமே குதூகலத் தில் குலுங்கும். இந்நூலுக்கு ஆசியுரை வழங்கி வாழ்த்தியருளிய வானமாமலை ஜீயர் ஸ்வாமிகளுக்கு என் தலையாலல்லால் கைமாறு இல்லேன்.

இந்நூலை நல்லமுறையில் அச்சிட்டு வெளியிட்ட பதிப்பகத் தாருக்கும், அழகிய வர்ணப்படங்கள் வரைந்து நூலுக்குப் பொலி வூட்டிய ஓவியருக்கும் என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக. இந்நூ லைப் புரட்டிப் பார்க்கும் வைணவ சீலர்களுக்கும் என் வணக்கத் தையும் அன்பையும் சொல்லிக்கொள்கிறேன்.

'நீசனேன் நிறைவுன்றுமிலேன். என் கண்பாசம் வைத்த பரஞ்சு டர் ஜோதிக்கே இந்நூலை அர்ப்பணிக்கிறேன்.

அடியேன்
இராமானுஜதாசன்
ரெங்கநாயகி கள்ளப்பிரான்
200 Lake Side Ct
Hanson, Ky 42413, U.S.A.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# உள்ளுறை

# வைணவத்தின் அடிநிலைப் பண்புகள்

'மாயோன் மேய காடுறை உலகமும்' என்ற தொல்காப்பிய அடிகளிலிருந்து மிகப்பழங்காலத்திலேயே திருமால் முல்லை நிலக்கடவுளாக வழிபடப்பட்டு வந்தார் என்று தெரிகிறோம். பரிபாடல் பாடல் ஒன்று திருமாலின் முழு வர்ணனையும் கொண்டதாக அமைந்துள்ளது. கடுவன் இளவெயினனார் என்ற புலவர் எழுதிய பாடல் அடியில் தரப்பட்டுள்ளது.

'மாஅயோயே! மா அயோயே!
மறுபிறப்பு அறுக்கும் மாசுஇல் சேவடி
மணிதிகழ் உருவின் மாஅ யோயே (1-3 வரிகள்)
தீயினுள் தெறல்நீ; பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியும் நீ; சொல்லினுள் வாய்மைநீ
அறத்தினுள் அன்புநீ; மறத்தினுள் மைந்துநீ
வேதத்து மறைநீ; பூதத்து முதலும் நீ
வெஞ்சுடர் ஒளியும் நீ; திங்களுள் அளியும் நீ
அனைத்தும் நீ, அனைத்தின் உட்பொருளும் நீ, ஆதலின்
உறைவும் உறைவதும் இலையே; உண்மையும்
மறவியல் சிறப்பின் மாய மாரணையை
முதல்முறை இடைமுறை கடைமுறை தொழிலின்
பிறவாப் பிறப்பிலை; பிறப்பித் தோர்இலையே (63-72 வரிகள்)
அருள்கொடையாக - அறங்கோலாக
இருநிழல் படாஅமை மூவேழ் உலகமும்
ஒருநிழல் ஆக்கிய ஏமத்தை மாதோ (74-76 வரிகள்)

இந்தப் பரிபாடல் திருமாலின் உருவ எழிலிலிருந்து அவரது குணநலன்கள் அனைத்தும் அவரது பரம காருண்யம், சௌலப்யம், உள்ளும் புறமுமாய அவரிடத்துள்ள எல்லாப் பெருமைகளையும் தெளிவாக விளக்குகிறது. இத தவிர திருமால் வழிபாடு பழங்காலத்திலேயே தமிழ்நாட்டில் இருந்தது என்பதற்குச் சிலப்பதிகாரத்தில் காணப்படும் ஆய்ச்சியர் குரவைப்பாடல்களும் சான்று பகர்கின்றன.

பரிபாடல் அடிகள் 'அனைத்தும் நீ, அனைத்தின் உட்பொருளும் நீ, ஆதலின் உறைவும் உறைவதும் இலையே என்ற அபேதத்தை சொல்லி, அதற்குக் காரணமான அந்தர்யாமி தத்துவத்தை விளக்குவதன் மூலம், சங்க காலத்திலேயே விசிஷ்டாத்வைத

தத்துவம் வேறொன்றி இருந்தது எனத்தெரிகிறது. தவிரவும் சுபாலோ பநிஷத் உடலினுள் இதயக்குகையில் பிறப்பற்றவனாய், நித்யனாயி ருக்கும் எவனொருவனுக்கு, பூமியானது உடலாக இருக்கிறதோ, எவனொருவன் பூமியினுள்ளே உலவுகிறானோ, எவனைப் பூமி அறியவில்லையோ, எவனுக்குத் தண்ணீர் சரீரமோ, எவன் நீரினுள் வாழ்கிறானோ, ஆனால் எவனை நீர் அறியாதோ, எவனுக்கு ஆகாயம் சரீரமோ எவன் ஆகாயத்திலேயே உலாவுகிறானோ ஆனால் எவனை ஆகாயம் அறியவில்லையோ, எவனுக்கு மனம் உடலோ எவன் மனத்தினுள் உலாவுகிறானோ ஆனால் எவனை மனம் அறியவில்லையோ, எவனுக்குப் புத்தி சரீரமோ எவன் புத்தியினுள் உலாவுகிறானோ ஆனால் எவனைப்புத்தி அறியவில் லையோ, அவனே எல்லா உயிர்களுக்கும் அந்தராத்மாவாய், பாவமற்றவனாய், பரம பதத்தில் எழுந்தருளியிருப்பவனாய் ஒப் பற்றவனாகிய இந்த நாராயணன் என்னும் தேவதேவன் என்று கூறுகிறது.

எல்லாவற்றைக் காட்டிலும், மேலானவனும், நித்தியமானவ னும், எல்லாமாயிருப்பவனும் ஆகிய நாராயணன் என்னும் ஹரியே இவ்வுலகுக்கெல்லாம் தலைவன். ஆகையினாலேயே இந்தப்பிரபஞ்சம் வாழ்கிறது. உலகிற்கு நாயகனும் ஆத்மாக்க ளுக்கு ஸ்வாமியும், பிறப்பு இறப்பு அற்றவனும் மங்களகரமானவ னும், தன்னைச் சரணடைந்தவர்களை நழுவவிடாதவனும், முக்கி யமாக அறியத்தக்கவனும், உலகிற்கெல்லாம் ஆத்மாவும் மேலான உபாயமும் நாராயணனே என்றும் கூறுகிறது.

வைணவ லட்சணம் என்ன என்பதை மணவாள மாமுனிகள் சிஷ்யரான வானமாமலை ஜீயருக்கும், சின்னியம்மாள் என்ற பெண்ணுக்கும் நடந்த சம்பாஷணை (உரையாடல்) நன்கு விளக்கு கிறது. ஜீயர் சுவாமிகள் குளத்தில் நீராடிக்கொண்டிருக்கும்பொழுது அங்கு வந்த சின்னியம்மாள் என்ற பெண்ணிடம் உன் குலம், கோத்திரம், சூத்திரம், வேதம், புருஷன், தாய் தந்தையர், பந்துக் கள், தொழில், பிரார்த்தனை, கைங்கர்யம் எல்லாம் பற்றிக் கூறு மாறு வினவியபொழுது, அவள் விடையாக, என்குலம் பாகவத குலம், கோத்திரம் - இராமானுஜ கோத்திரம், சூத்திரம் - சடகோப சூத்திரம், வேதம் - தமிழ்வேதம், புருஷன் - புருஷோத்தமன், தாய், தந்தையர் - பெருமாள் பிராட்டியார்தான், பந்துக்கள் - பாகவதோத்தமர்கள், தொழில் - பாகவத கைங்கர்யம், பிரயோச

னம் - அதுவே பிரயோசனம், பிரார்த்தனை - கைங்கர்யமே என்று கூறினாள் என்பர்.

ஸ்ரீ வைஷ்ணவப்பண்பாடு என்ன? என்று அனந்தாழ்வான் என்ற ஸ்ரீ வைஷ்ணவனிடம் ஒரு பாகவதர் கேட்டபொழுது, அவர் பதிலாகக் கொக்குப் போலிருக்கும், கோழி போலிருக்கும், உப்புப் போலிருக்கும், உம்மைப்போல் இருக்கும் என்றாராம். இதன் தாத்பர்யம் என்ன என்றால், கொக்கு நீர்நிலைகளில் இருப்பது வைணவன் நீர்வண்ணன் உறையும் திருப்பதியில் வாழ்பவன். கொக்கு வெள்ளை நிறம். வைணவனும் வெள்ளை மனத்தன். கொக்கு ஓடு மீன்ஓட வுறுமீன் வருமளவும் வாடி இருக்கும். வைணவனும் அற்பப்பலன்களுக்கு ஆசைப்படாமல் பேரின்பப் பெருவீட்டையே விளைபவன். பறப்பதற்குச் சாதகமாக இரு சிறகுகளை உடையது கொக்கு. பேரின்ப வீடு பெறுவதற்குச் சாதனமான ஞானம், அனுஷ்டானம் என்ற இரு சிறகுகளைப் பெற்றுள்ளான் இவன். கொக்கு தன் வாய் கொள்ளத்தக்கதையே தான் கொள்ளும். வைஷ்ணவனும் சாரமான அர்த்தங்களை மட்டுமே கொள்வான்.

கோழி குப்பையைக் கிளறி இரையை மட்டுமே பொறுக்கும். வைணவனும், மற்றவரின் குற்றங்களைக் களைந்து குணங்களை மட்டுமே கொள்வான். அதேபோல உப்பு தன்னை அழித்து உணவுக்குச் சுவைகூட்டும். வைணவனும் தன்னைக் கொடுத்தாகிலும் பிறருக்குப்பயன் தருவான். அந்தப் பாகவதர் விருந்தில் கடைசி இடத்தில் அமரவே விரும்பியதால், வைணவத்தினரில் கடைசி வைணவராக இருக்கும் பேறு கொண்ட உம்மைப்போல் இருக்கும் என்றாராம்.

வேறு எவன் ஒருவனைக்கண்டாலும் கிருஷ்ண பரமாத்மாவின் நினைவு வருகிறதோ அவனே வைஷணவன். நஞ்சீயர், 'ஒருவன் பிறர் துன்பங்கண்டு ஐயோ என்று இரங்கினால் அவனிடம் வைஷ்ணத்வம் உண்டு. எல்லாம் தனக்கே வேண்டும் என்றிருந்தால், வைஷ்ணத்வம் இல்லை என்றறிக' என்றாராம்.

ஸ்ரீ வைஷ்ணவ சமயநெறியில் அதனைத்; தத்துவம் (மெய்ப்பொருள், உண்மை) ஹிதம், (சாதனம் நெறி) புருஷார்த்தம் (நன்மை, பேறு, பலன்) என்பர். வைணவத்தின் அடிப்படைத்தத்துவம், சித்து, அசித்து ஈஸ்வரன் என்பதாகும். அதாவது சித்து அல்லது சேதனம் என்பது அறிவுள்ள ஜீவாத்மா. அசித்து அல்லது

அசேதனம் என்பது அறிவற்ற பொருள் (பிரகிருதி). ஈஸ்வரன் அல்லது இறைவன் என்பது பரம்பொருளாகும். இவையெல்லாம் பற்றிய தத்துவங்களை விரிவாக எழுதினால் கட்டுரை நீண்டுவிடும் என்று கருதியே அவை விவரிக்கப்படவில்லை. வைணவத்திற்கு ஒரு சிறு முன்னுரையாகவே இந்தப்பகுதி அமைக்கப்பட்டுள்ளது.

வைணவத்திலேயே தென்கலை, வடகலை என்ற இரு பிரிவு கள் உள்ளன. இவற்றின் வெளித்தோற்றமாக அவர்கள் தரிக்கும் திருமண்ணின் வடிவுகொண்டே தெரிந்து கொள்ளலாம். பாதம் வைத்த நாமம் தரிப்பது தென்கலையாராகும். பாதமில்லாத நாமம் தரிப்பது வடகலையாராகும். இந்த இரு பிரிவினருக்கும் உள்ள மிக முக்கியமான வேறுபாடுகளை மட்டும் மேல்நோக்காகக் கண்டு செல்வோம். தென்கலையார் ஆழ்வார்கள் அருளிச்செயல் களை மட்டும் நாலாயிரப்பிரபந்தம் என்கின்றனர். வடகலையார் திருவரங்கத்தமுதனார் அருளிய இராமானுச நூற்றந்தாதியையும் சேர்த்து நாலாயிரப்பிரபந்தம் என்கின்றனர். அடுத்து பகவானின் கருணை, நிர்ஹேதுக (காரணமற்ற) கிருபை, அடியவனின் முயற் சியோ, ஒத்துழைப்போ தேவையில்லை. எவ்வாறு பூனை தன் குட்டிகளைத் தானே குட்டிகளின் முயற்சியின்றி வாயில் கௌவிக் கொண்டு சென்று பத்திரமாகப் பராமரிக்கிறதோ (மர்ஜர நியாயம்) அது போல என்பர் தென்கலையார். ஆனால் வடகலையார் சேதனனின் முயற்சியும் ஒத்துழைப்பும் தேவை! தகுதியற்றவர்க ளுக்கு, கருணை கிட்டாது. குரங்கும் அதன் குட்டிகளும் போல (மர்க்கட நியாயம்) என்பர்.

அடுத்துத் திருமகளை ஈஸ்வரனுக்குச் சமமாகக் கருதுவது கூடாது என்பது தென்கலையார் கொள்கை. ஆனால் அவள் ஈஸ்வரத்தத்துவத்தில் அடக்கம் என்று கொள்கின்றனர். வடகலை யார். பகவானை அடைய ஏற்பட்டுள்ள நான்கு வழிகளான கர்ம, ஞான, பக்தி, பிரபத்தி யோகங்களில் பிரபத்தியே (சரணாகதித் தத்துவம்) உயர்ந்ததும் சுலபமானதும் ஆகும் என்பதை இருவரும் ஒப்புக்கொள்கின்றனர். பிரபத்தி என்பது இறைவனுக்கு எது விருப்பமோ, அதையே தானும் விரும்புதல், இறைவனுக்கு விருப் பமில்லாதவற்றை விலக்குதல், இறைவனது பாதுகாப்பு என்றும் எதிலும் உண்டு என்று நம்புதல், அவனது பாதுகாப்பை எப்பொழு தும் எதிலும் வேண்டி நிற்றல். தனது வாழ்க்கையை முழுமையாக இறைவனுக்கே அர்ப்பணித்தல், எல்லாம் இறைவன் செயலே என்

செயல் ஒன்றுமில்லை என்று முற்றிலுமாக நம்பி இருத்தல் என்பனவாகும்.

சரணாகதி தத்துவத்தை இறைவனே, திருமந்திரம், த்வையம், சரமஸ்லோகம் என்ற மூன்று விதிமுறைகள் மூலம் (ரகஸ்யத்ரயம்) வகுத்துள்ளான். பிரபத்திக்குக் காரணம் நிர்ஹேதுக கிருபை, காரணமேதுமேயில்லாத திருவருள் கருணை என்பர் தென்கலை யார். எவ்வாறு பசு தான் ஈன்ற கன்றின் மேல் உள்ள அழுக்கைத் தன் நாவினால் நக்கிச் சுத்தப்படுத்துவதைப்போல பகவான் தன் அடியார்களது தோஷங்களை உறவின் உணர்வைக் கருதி உகந்து குற்றத்தையுமே குணமாகக் கருதும் அளவற்ற வாத்சல்யன் என்பர் தென்கலையார். ஆனால் முற்பிறவிப் புண்ணியம்தான் காரணம் என்பார் வடகலையார்.

கீதையில் சொல்லியபடி எல்லாத் தர்மங்களிலும் உபாய புத்தியை அறவே கைவிடுவது மிகவும் அவசியம் என்பர் தென்க லையார். வேதத்தில் கர்ம காண்டத்தில் சொல்லப்பட்ட தர்மங்க ளையும், கர்மங்களையும் அவை இறைவன் கட்டளையாதலால் கைவிடுதல் கூடாது என்பர் வடகலையார். வைதிகச் சடங்குக ளுக்கு பாவச்சுமையை அழிக்கும் சக்தி இல்லை. தன் சுயமுயற்சியி னால் மட்டும் பாவங்களைப் போக்கிக்கொள்ள முடியாது. பகவா னோடு உற்ற உறவினால் மட்டுமே இது கைகூடும். எல்லாப்பாபங் களுக்கும் பிரபத்தியே பிராயச்சித்தமாகும்போது கேவலம் வைதி கச்சடங்குகள் எதற்கு என்கின்றனர் தென்கலையார். பகவானிடம் பிரபத்தி செய்துள்ள பிரபந்ந பாகவதர்கள் பகவானது அருளுக்குப் பாத்திரர்களாகையால், அவர்களிடம் செய்யப்படும் பிரபத்தி தானா கவே பகவானைச்சேரும் என்பர் தென்கலையார். ரகஸ்யத் த்ரயம், என்பது திருஎட்டெழுத்து (திருமந்திரம்); இருபத்தைந்து எழுத் துள்ள த்வயம் முப்பத்திரண்டு எழுத்துள்ள சரமஸ்லோகம் என்ற மூன்றும் ஆகும். இம்மூன்றையும் ஸ்ரீமான் நாராயணனே உபதேசித் தான் என்பர் தென்கலையார்.

திருமந்திரம் 'ஓம் நமோ நாராயணாய' என்பது 'ஓம்' என்னும் பிரணவம் இந்த ஜீவாத்மா எம்பெருமானைத் தவிர வேறு எவருக் கும் உரியவனல்லன் என்பது. 'நம் என்ற பதம் ஜீவாத்மா எம் பெருமானைத் தவிர வேறு ஒன்றையும் உபாயமாகக் கொள்ளத் தகாதவன் என்பது. நாராயணாய என்ற பதம் நாராயணனது முகமலர்ச்சிக்கான கைங்கர்யத்தைத்தவிர வேறு எதுவும் ஜீவாத்மா

வுக்குப் பயனன்று என்பது. ஆகவே எம்பெருமானுக்கு அடிமை யாக இருப்பவனான நான் எல்லாப்பொருளுக்கும் சேஷியான (ஆண்டான்) நாராயணனது முகமலர்ச்சிக்கு உறுப்பாய் எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாதல் வேண்டும் என்பதாகும்.

### த்வயம்

'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே ஸ்ரீமதே நாராயணா நம' என்பது. இரண்டு வாக்கியங்களாய் ஆறு பதங்களுடன் பத்துப்பொருள் கொண்டு திகழ்வதாகும். எம்பெரு மான் பெரிய பிராட்டிக்கு உபதேசித்த ஏற்றமுடையது. உபாயம் (வழி) உபேயம் (பலன்) எனும் இரு பொருள்களைக் கொண்டு இரண்டு வாக்யங்களாய் (த்வையம்) இருப்பது.

இதன் திரண்ட பொருள்: பெரிய பிராட்டியோடு என்றும் பிரிவில் லாத ஸ்ரீமந்நாராயணன் திருவடிகளில் எல்லா இடங்களிலும் எல்லாக்காலங்களிலும் எல்லா நிலைமைகளிலும் எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்வதற்குப் பகையாய் உள்ள அனைத்தும் நீங்கப்பெற்று முழுமையான கைங்கர்யங்கள் செய்ய, மற்ற உபா யங்களை நாடாத அடியேன், அவனருளாலே, அவன் தாளிணைக ளைத் தஞ்சமாகப் பற்றுகிறேன் என்பது.

### சரமஸ்லோகம்

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம்வ்ரஜ।
அஹம்த்வா ஸர்வபாபேப்யோ, மோக்ஷயிஷ்யாமிபாகச;॥

என்ற ஸ்லோகம். இது முதற்பகுதியில் ஆறுபதங்களும் பிற்பகுதி யில் ஐந்து, ஐந்து பதங்களும் உடையது, பாரதப் போர்க்களத்தில், பகவானே உகந்து பார்த்தன் மூலம் உலகத்துக்கு உபதேசித்தது இதன் பொருள், எல்லாத் தர்மங்களையும் விட்டு என்னையே உபாயமாகப் பற்று. நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவித்து முத்தனாகும்படி செய்கிறேன் என்பதாகும். வைணவத் தின் அடிப்படைத்தத்துவங்களைச் சுருக்கமாக ஓரளவு தெரிந்து கொண்டோம். இனி நூலினுள் சென்று, ஆசார்யர்களின் பிரபாவத் தைப் பற்றிக் காணுமுன், அவர்கள் இருந்து ஆட்சி நடத்திய தர்ஸன பீடமான திருவரங்கப் பெரியகோயிலின் பெருமைகளைக் கண்டு செல்வது இனிமையானதாகும்.

# I. திருவரங்கம் பெரிய கோயில்

ஆச்சார்யர்களுடைய பிரபாவத்தை அணுகுமுன் ஆளவந்தார் முதல் மணவாளமாமுனிகள் முடிய அவர்களது ஆசார்ய பீடமாக விளங்கிய இடமான திருவரங்கத் திருப்பதியையும் அங்கு கோயில் கொண்டுள்ள ரெங்கப்பிரபுவின் மகிமையையும் அக்கோயிலின் தனிச்சிறப்பினையும் பற்றிக்காணுதல் மிகவும் அவசியமாகும்.

# II. திருவரங்கம் பெரிய கோயில்

திருமாலின் திருப்பதிகள் நூற்றெட்டினுள் தலைமை பூண்டதும் அடைமொழியேதுமின்றி கோயில் என்று கூறிய அளவிலேயே தெரிந்துகொள்வதும் பூலோக வைகுண்டம் எனப்போற்றப்படுவதும் போகமண்டபம் எனப்படுவதுமாகிய இத்திவ்விய தேசத்தில், அர்ச்சாவதாரத் திருமேனி கொண்ட ரங்கவிமானம் ஓங்கார வடிவில் அமைந்துள்ளது. இவ்விமானத்தில் பள்ளி கொண்டருளும் திருமால் ஆதியில் சத்தியலோகத்தில் பிரம்மாவின்தவத்தால் அவருக்குக் கிடைத்த ஒன்று. பிரம்மாவிடமிருந்து அதைப்பெற மனுவின் பிள்ளையான இகக்ஷிடிவாகு (அயோத்திமன்னன்) கடுந்தவம் செய்கிறான். பிரம்மா திகைக்க நான்கு சதுர்யுகம் சூர்யகுல மன்னர்கள் ஆராதனைக்குப்பிறகு சோழநாட்டுக் காவிரிக்கரையில் ஏழு மன்வந்தரம் இருந்ததன்பின் பிரம்மலோக ஆராதனைக்கு வந்து சேரும் என்று திருமால் கூறவே விமானம் அயோத்தி செல்கிறது. தசரதன் நடத்திய புத்திரகாமேஷ்டி யாகத்தில் கலந்துகொள்ள வந்த சோழமன்னன் தர்மவர்மன் தவம் செய்து பெற விரும்பியபோது எப்படியும் ரங்கவிமானம் அங்கு வந்தே தீரும் என முனிவர்கள் கூறவே தவம் செய்வதைக் கைவிடுகிறான். இராமர் ரங்கவிமானத்தை விபீஷணனுக்குத் தந்துவிட்டு அடிச்சோதியாகிறார். விபீஷணன் இலங்கைக்குத் திரும்பும் வழியில் நித்யானுஷ்டானத்திற்காகக் கீழே வைக்கவே விமானம் அங்கேயே தங்கிவிடுகிறது. தர்மவர்மனும் முனிவர்களும் பிரம்மோத்ஸவம் செய்து மகிழ்கின்றனர். பன்னிரு ஆழ்வார்களாலும் 268 பாசுரங்களால் ஆராதிக்கப்பட்ட திருவரங்கநாதனுக்கு பகவானே அருளிய பாஞ்சராத்திர ஆகம முறைப்படியே பூஜைகள் நடக்கின்றன.

பரவாசுதேவனது அவதார மூர்த்தியாகிய ஸ்ரீராமனே பரவாசு தேவ ஸ்ரீரங்கநாதனை ஆராதித்ததால் அரங்கன் பெரிய பெருமாள் ஆகிறார். தாயார் பெரிய பிராட்டியாகிறார். அதோடுகூட பெரிய என்ற அடைமொழியோடு, பிரகாரம், அரங்கம், கருடன், திரு மொழி, மேளம், திருப்பணியாரம், திருப்பாவாடை, திருமஞ்சனம் மண்டபம், வாகனம், திருமடல், அந்தாதி முதலிய எல்லாமே பெரியதாக விளங்குவது ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தின் தனித்தன்மையா கும். ஸ்ரீமந் நாராயணனுடைய 108 திவ்ய தேசங்கள் நாலுவகையாக சொல்லப்படுகின்றன. ஸ்வயம்வியக்த க்ஷேத்திரம் (தானாகத் தோன்றியவை) எட்டு. முறையே ஸ்ரீரங்கம், ஸ்ரீமுஷ்ணம், திரு மலை, சாளக்கிராமம், நைமிசாரண்யம், தோதாத்ரி, புஷ்கரம், பத்ரிகாஸ்ரமம் என்பனவாகும். இவற்றுள் ஸ்ரீரங்கமே முதலாவ தாக விளங்குகிறது. திருமாலே! ஸ்ரீரங்கர் செல்வத்தை இடையூ றின்றி தினமும் வளரச்செய் எனும் பொருள் கொண்ட பாசுரத்தை 108 க்ஷேத்திரங்களிலும் நித்ய ஆராதனையின்போது ஓதுவதாகச் சொல்லப்படுவதால் திவ்ய தேசங்களின் தலைமையகம் ஸ்ரீரங்கம் தான் என்பதை அறியலாம். அர்த்தசாம பூஜை முடிந்ததும் திவ்ய தேச அனைத்துப்பெருமான்களும் தலைமைச் செயலகத்தில் கூடி முதல்வரை வழிபட்டுச் செல்வதாக ஐதிகம் (நம்பிக்கை)

பெரிய பிராட்டியாராம் திருமகளார் திரு நிருத்தம் புரியும் இடமாதலாலும், வைஷ்ணவர்களுடைய சிறப்புக்கு கூத்துப்பயிலு மிடமாதலாலும் திரு அரங்கம் என வழங்கப்படுவதாயிற்று, எனி னும் இவையும் அஞ்சேலென்றெடுத்த அழகிய திருக்கையும், கஸ்தூரி திலகமும், செங்கோலும், பரம பதத்திற் கண்டிலேனா யின், அவ்விடத்தை விட்டு மீண்டும் அரங்கநகர் அடைவேனென்று இராமானுசரது ஆத்ம புத்ரரான பட்டர் பகர்ந்ததாகப் பெரியோர் கூறுவர். செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார் என்றும் நீங்காத செங்கோலும், என்றும் எவ்வித காரணங்களை முன்னிட் டும் களையப்படாத கஸ்தூரித் திலகமும் பரமபத நாதனின் கௌஸ்துபம் போன்று திருமார்பில் விளங்கும் ஒப்புயர்வற்ற அற்புத நீல நாயகமும் இங்குள்ள அழகிய மணவாளப் பெருமா னுக்கே உரியன. இராமபிரான் நடத்திய வையாளி சேவையே இன்னும் இத்திருப்பதியில் நடத்தப்பட்டு வருவதை பக்தர்கள் கண்டு பரவசப்படுவர். அசாதாரணமான படியேற்ற சேவை, ஏனைய வைஷ்ணவ ஸ்தலங்களை விட இங்கு விசேஷம். சித்திரை மாதக்கோடைத்திருவிழாவின் போதும் மார்கழிமாத அத்யயன

உத்சவத்தின் (இராப்பத்து) ஏகாந்த சேவையின்போதும் ரங்கராஜன் திருமுன்பு கேட்போர் மெய்மறந்து நிற்குமாறு வீணாகானம் செய்யப்பட்டு வரும். அந்த அற்புதக்காட்சியை காண்போர் திருவரங்கச் செல்வனாரின் ஒப்புயர்வற்ற மாட்சியை உணர்வர். அரையர், பட்டர், போன்றோர் அழகிய மணவாளப் பெருமாளுக்குப் புரியும் கைங்கர்யங்களை நோக்கில் திருவரங்கராஜன், விபவாதாரத்துடன் எழுந்தருளியிருப்பது போன்று தோன்றுமேயன்றி அர்ச்சைநிலை தோன்றாது.

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மண்ணி வழுவிலா அடிமை செய்யும் இளையபெருமாள், கலியுகத்தில் விசிஷ்டாத்வைத சித்தாந்த ஸ்தாபனாசாரியராய் இராமானுசராக அவதரித்து இத்திவ்ய தேசத்தையே தமது வாசஸ்தலமாகக் கொண்டு தமது வாழ்விற் பெரும் பகுதியையும் இவ்விடத்திலேயே கழித்ததாலேயே, கோயிலண்ணா என்று கோதையால் அழைக்கப்பட்டார். அவரது மகாத்மியத்தை (பெருமை)யெல்லாம் பின்னர் ஆசார்ய பிரபாவத்தில் சொல்ல இருப்பதால் மேலும் விவரியாமல் மேற் செல்வோம்.

இராமபிரானால் பூசிக்கப்பட்ட பெருமை பற்றி இத்தலத்து அழகிய மணவாளப் பெருமாளுக்கு வருடத்திற்கு ஒருநாள் மோகினி அவதாரம் செய்யப்படுவதன்றி வேறு எந்தத் திருக்கோலமும் சாத்தப்படுவதில்லை. பிரஹ்மோத்ஸவங்கள் நடைபெறும் போதுகூட ஆனைவாகன உத்ஸவத்தன்றும் திருத்தேரன்றும் தவிர்த்து, ஏனைய நாட்களில் பெருமானை எழந்தருளப் பண்ணுவோர் வைஷ்ணவ பிராமண ஸ்வாமிகளான பாதந்தாங்கிகளேயாவார் என்பது இத்தலத்திற்கேயுரிய தனிப்பெருமையாகும்.

'நித்யோத்ஸவ ஸமாயுக்தர்' என்று போற்றப்படும் இவருக்கு பன்னிரண்டு மாதங்களும் உத்ஸவ நாட்களேயானாலும் தை மாதத்தில் நடைபெறும் உத்ஸவம், இராமபிரான் அயோத்தியில் நடத்திய பூபதித்திருநாள் எனும் பிரமோத்ஸவம் ஆகும். மாசி மாதத்தில் ஏகாதேசியை ஒட்டி நடக்கும். எட்டு நாள் தெப்போத்ஸவம் பங்குனி இறுதியில் நடக்கும் சத்யலோகத்தில் பிரம்மதேவனால் நடத்தப்பட்டு வந்த பிரம்மோத்ஸவமும், சித்திரையில் ரேவதியை இறுதியாகக்கொண்டு நடக்கும் விருப்பன் திருநாள் எனும் பிரம்மோத்ஸவமும் மார்கழியில் நடக்கும் திரு அத்யயன

உத்ஸவமும் விசேஷமானவை. இந்த உத்ஸவங்களுக்கு வருகின்ற வர்களின் எண்ணிக்கை கணக்கிலடங்கா. பிரம்ம சிருஷ்டி காலத்தி லிருந்தே பற்பலரால் பூஜிக்கப்பட்டு வந்த காரணத்தால் இவர் திருமேனி தளர்ந்துதிளைத்திருப்பது போல காணப்படுகிறது. திரு வரங்கம் மேயோன் திசைஎன்றும், தென்னரங்கம், மறைபொருளை உணர்ந்தோராம் சிறப்புடைய மறையவர் வாழ்திருவரங்கம், தேன் தொடுத்த மலர்ச்சோலை திருவரங்கம், நல்லார்கள் வாழும் நளிர் அரங்கம், அஞ்சிறைய வண்டுவாழ் பொழில்சூழ் அணி அரங்கம், திட்கொடி மதில்சூழ் திருவரங்கம் என்றும் பல படியாக ஆழ்வார்க ளால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது. ஓரான் வழி ஆசாரியர்க ளில் முதலாவதாக வருபவர்கள் பெரிய பெருமாளும், பெரிய பிராட்டியாருமேயாவார்கள். அவர்கள் வாழித்திருநாமம் வருமாறு:

### பெரிய பெருமாள்

திருமகளும் மண்மகளும் சிறக்க வந்தோன் வாழியே.
செய்யவிடைத்தாய் மகளார் சேவிப்போன் வாழியே.
இரு விசும்பில் வீற்றிருக்கு மிமையவர் கோன்வாழியே.
இடர்கடியப் பாற்கடலையெய்தினான் வாழியே.
அரிய தயரதன் மகனாயவதரித்தான் வாழியே.
அந்தரியா மித்துவமுமாயினான் வாழியே.
பெருகிவரும் பொன்னி நடுப்பின் துயின்றான் வாழியே.
பெரிய பெருமாள் எங்கள் பிரானடிகள் வாழியே.

பெருமானது இந்த வாழித் திருநாமத்திலேயே இறைவனது ஐந்துவித நிலைகளான, பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி அர்ச்சை என்ற ஐந்து நிலைகளும் பேசப்பட்டுள்ளன. இனி

### பெரிய பிராட்டியார்

பங்கயப்பூவிற் பிறந்த பாவை நல்லாள் வாழியே.
பங்குனியில் உத்தரநாள் பாருதித்தாள் வாழியே.
மங்கையர்கள் திலதமென வந்தசெல்வி வாழியே.
மாலரங்கர் மணிமார்பை மன்னுமவள் வாழியே.
எங்களெழிற் சேனை மன்னர்க் கிதமுரைத்தாள் வாழியே.
இருபத்தஞ்சுட் பொருள் மால் இயம்புமவள் வாழியே.
செங்கமலச் செய்யரங்கம் செழிக்க வந்தாள் வாழியே.
ஸ்ரீரங்க நாயகியார் திருவடிகள் வாழியே.

இந்தப் பாசுரத்தில் பிராட்டியே புருஷா காரமாய் இருந்து பகவானின் நிர்ஹேதுக கிருபைக்கு நம்மைக் கூட்டுவிக்கிறாள் என்று காண்கிறோம்.

பரவாசு தேவனின் பிம்பத்தைக் கொண்ட ரங்கவிமானத்தைச் சைத்யகூட காயத்ரி மண்டபம் தாங்குகிறது. சுமார் 30 அடி நீளக்கருவரையும் 21 அடி நீளத்தில் கரிய திருமேனியும் கொண்ட பெரிய பெருமாள் யோக நித்திரை புரிந்தபடி பூவுலகைக் காத்தருள்கிறார். நூற்றெட்டு மூலிகைப் பொருட்களோடு வைரப்பொடியும் கலந்து உருவான மூலவரின் பாதங்களுக்குத்தான் தினசரி அபிஷேகம் செய்வது வழக்கம். ஆண்டுக்கொரு முறையே பூர்ணாபிஷேகம் நடைபெறும். இரண்டு யுகங்களைக் கடந்து நிற்பதாகக் கூறப்படும் ஸ்ரீரங்க ரட்சகனின் ஆலயம் பற்றி சுமார் 644 கல்வெட்டுக்களும் மற்றும் பல செப்புப்பட்டயங்களும் உள்ளன. கல்வெட்டுக்களுள் பழமையானது முதல் பராந்தக சோழன் காலத்திய (கி.பி. 967)) கல்வெட்டுத்தான். சோழ, பாண்டிய, பல்லவ, ஹொளய்சல, விஜய நகர நாயக்க அரசர்களின் பல்வேறு காலகட்டத்திருப்பணிகளால் தென்னாட்டுக் கோயில்களில் தன்னிகரற்றதாகிறது திருவரங்கம். 35 அடி உயரமுள்ள கருடனைக் கொண்ட கருட மண்டபமும், உயிரோட்டமுள்ள சிற்பங்களைக் கொண்ட சேஷராயர் மண்டபம், அற்புதச்சிலைகள் கொண்ட வேணுகோபன் சன்னதி, கிளிமண்டபம், ரங்கவிலாச மண்டபம் ஆயிரக்கால் மண்டபம் (936) கால்கள் மட்டும் உள்ளன) முதலியன சிற்பக்கலையின் சிறப்பினுக்கு எடுத்துக்காட்டாகும். ஆலயங்களின் திருவிழாக்களைப்பற்றிப் பின்னர் விரிவாக எழுத இருப்பதால் அவை பற்றி இங்கு எழுதவில்லை. ஸ்ரீரங்கர் ஆலயத்தின் நகைகள் துருக்கர்களால் கொள்ளையடிக்கப்படாவிட்டால் மலை போலக்குவிந்து கிடக்கும்.

## கோயிலின் மகாத்மியம்

பெரிய கோயிலின் மொத்தப்பரப்பளவு 156½ ஏக்கர், மொத்தம் 108 மண்டபங்கள் உள்ளன. 51 சுற்றுக்கோவில்கள், 22 கோபுரங்கள். 7 மைல் நீளத்திற்கும் மேலான 8 பிரகாரங்களைக் கொண்டது. ஸ்ரீரங்கப்பெரிய கோயிலின் மூலஸ்தானத்திலிருந்து தொடங்கும் ஏழு பிரகாரங்களையும் வளைத்தபடி உள்ள எட்டாவது வெளிப்பிரகாரத்திற்கு அடைய வளைந்தான் வீதி என்று பெயர். அதை நீக்கிய ஏழு பிரகாரங்களையும் ஏழு உலகங்களோடு ஒப்பிடுவர் பெரியோர். 1) மாடமாளிகைகள் வீடுகள் பகுதி,

பூலோகம் ஆகும். 2) திருவிக்ரமன் வீதியைப் புவர்லோகம் என்பர். 3) கிளிச்சோழன் அகளங்கன் சுற்று - ஸ்வர்க்க லோகம். 4) திரு மங்கை மன்னன் வீதி - மகர லோகம் ஆகும். 5) குலசேகரன் வீதி - ஜநர் லோகம். 6) ராஜமகேந்திரன் பிரகாரம் - தபோ லோகம் எனப்படுகிறது. 7) தர்மவர்மர் சுற்று; மூலஸ்தானத்தை ஒட்டியது சத்யலோகம் என்று சொல்லப்படுகிறது.

மூலஸ்தானத்து ரங்கவிமானம் தங்கத்தட்டால் மூடப்பட்டுள் ளது. அக்கால மதிப்புப்படி சுமார் $2^1/_2$ கோடி ரூபாய் மதிப்புள்ளது. நான்கு கலசங்களும் சதுர்வேதங்களாகச் சொல்லப்படுகின்றன. விமானத்தில் விநாயகர், துர்க்கை, அனந்தன், அச்சுதன், வேணுகோ பாலர்களோடு பரவாசுதேவரும் இருக்கிறார். அவர் வளர்ந்து கொண்டே வருவதாகவும் சொல்லப்படுகிறது. இப்பொழுது இடுப்பளவுள்ள வாசுதேவர் திருஉரு வளர்ந்து பாதம் தெரியப்ப டும் காலத்தில் உலகப்பிரளயம் என்று சொல்கிறார்கள். மூலவருக் குக் கீழேயுள்ள ஸ்ரீரங்கநாதர் அழகிய மணவாளர் ஸ்ரீதேவி, பூதேவி (யாகப்பேரர்.) ஆதி ஸ்ரீரங்கநாதர் துருக்கர் படையெடுப்பில் 50 ஆண்டுகள் அஞ்ஞாதவாசம் போயிருந்தபொழுது உற்சவ மூர்த்தி யாக விளங்கியவர் உள்ளனர்.

நித்திய உத்ஸவ க்ஷேத்திரமான ஸ்ரீரங்கத்தில், ஆண்டொன் றுக்கு, 322 திருவிழாக்கள் நடக்கின்றன.
சித்திரைமாதம் (April - May) விருப்பணன் திருநாளின்போது தேரோட்டமும் நடைபெறும்.
வைகாசியில் (May - June) நடைபெறுவது வஸந்தோத்ஸவம்
ஆனியில் (June - July) திருமஞ்சனத்திருவிழா நடைபெறும்
ஆடியில் (July - Aug) பதினெட்டாம் பெருக்கு.
ஆவணியில் Aug - Sepr) ஸ்ரீ ஜயந்தி பவித்ரோத்ஸவம்
புரட்டாசி (Sepr - Octr) ரங்கநாயகியின் நவராத்திரித்திருவிழா
ஐப்பசி (Oct - Nov) ஊஞ்சல் டோலோத்ஸவம்.
கார்த்திகை (Novr - dec) பர்வோத்ஸவம். இதில் படியேற்றம் முக்கியப்பங்கு பெறுகிறது.
மார்கழி (Nov - Dec) திரு அத்யயன உத்ஸவம். பகல்பத்து, இராப்பத்து, வைகுண்ட ஏகாதசி மிக முக்கியமாகக் கொண்டாடப் படுகிறது.
தை (Jan - Feb) பொங்கல் நாளில் பூபதித் திருநாள் நடக்கிறது.
மாசி (Feb - Mar) தெப்போத்ஸவம் (கருடவாகனம் முக்கியமானது.
பங்குனி (Mar - Apr) ப்ரம்மோத்ஸவம். தேர்த்திருவிழா சிறப்பா னவை.

ஒருநாள் உற்சவம் போல இங்கு மறுநாள் நடக்காது. பணம் கட்டி யாரும் எந்தத்தேதியிலும், எந்தத் திடீர் திருவிழாவும் நடத்த முடியாது. நல்ல நாளுக்காக விழாக்களே தவிர உள்ள ஆளுக்காக அல்ல என்ற சம்பிரதாயம் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. ரூ. 750 கட்டி ஒரு நாளைய வைவேத்ய செலவில் பங்கு பெறலாம். இக்கோயிலின் ஸ்தல விருக்ஷம் புன்னை மரம். இங்குள்ள தீர்த்தங் கள் ஒன்பதாகும். இங்கு விண்ணவர்களுக்கு மட்டுமல்லாமல், பல மண்ணகப் புனிதர்களுக்குமாக சுமார் 50 சன்னிதிகள் உள்ளன. ஸ்ரீ ரெங்கநாதர், ஸ்ரீ ரெங்கநாயகி, ஆதிகேசவன், கோதண்ட ராமன், பட்டாபிராமன், போகராமன், மேல்பட்டாபிராமன், அழகிய சிங் கன், மேட்டு அழகிய சிங்கன் கிருஷ்ணன் (உள், வெளி) பாதாள கிருஷ்ணன், வேணுகோபாலன், பார்த்தசாரதி, ஸ்ரீனிவாசப்பெரு மாள், லட்சுமி நாராயணன், வரத நாராயணர், வாசுதேவர், தச மூர்த்தி, பரமபதநாதன், ஹயக்ரீவர், உலகளந்த பெருமாள், தசாவ தார சன்னிதி, சக்கரத்தாழ்வார், கருடாழ்வார், அமுத கருடன், ஹனுமான், தன்வந்தரி, துர்க்கை, ஸரஸ்வதி, ஆண்டாள், உள் ஆண்டாள், சேரகுலவல்லி, துலுக்கநாச்சியார் போன்ற தெய்வத்தி ருவுருவங்களும், நிலத்தேவர்களான ஆழ்வார்களில், முதலாழ்வார் கள், திருப்பாணாழ்வார், திருமழிசையாழ்வார் கூரத்தாழ்வார், தொண்டரடிப்பொடி, ஆச்சாரியர்களில் நாதமுனி, திருக்கச்சிநம்பி, இராமானுஜர், சேனை முதலியார், தேசிகர், பிள்ளை லோகாச்சாரி யார், பெரிய வாச்சான்பிள்ளை முதலியோர் சன்னிதிகளும் உள்ளன.

பெரிய கோயிலின் உட்கோயில்களாக, அன்பில், மாரியம்மன் பிரம்ம புரீஸ்வரர், சௌந்தரராஜப் பெருமாள் வடஜம்புநாதர் ஆலயங்களும் 1983 வரை சமயபுரம் மாரியம்மன் ஆலயமும் இருந்தன. ஸ்ரீரங்கத்தில் தர்ஸன பீடத்தை அலங்கரித்த ஆசார்யப் பெருமக்களின் மகிமைகளையெல்லாம் ஆசார்யப் பிரபாவத்தில் காண உள்ளோமாதலால் இங்கு குறிப்பிடவில்லை.

ஏழு மனைவியருடன் காட்சி தரும் ரங்கநாதர், நாயக நாயகி பாவ பக்திக்கு முதலிடம் வகிக்கிறார். பரமாத்மாவுடன் ஜீவாத்மாக் கள் சங்கமமாகும் பரிபூர்ண சரணாகதித்தத்வம் பாமரர்க்கும் புரியு மாறு திருவிழாக்களாக நிகழ்த்தப்படுகிறது. இவை பற்றி வேறு இடத்தில் காண இருப்பதால் இங்கு விரிவாகக் கூறப்படவில்லை. பிரமாண்ட புராணம், மச்ச புராணம், பத்ம புராணம் முதலியவற் றுள் ஸ்ரீரங்க மகத்வம் கூறப்பட்டுள்ளது. சங்க நூல்களான அகம், தொல்காப்பியம், பரிபாடல் கலித்தொகைகளில் ஸ்ரீரங்கம் குறிப்பி

டப்பட்டுள்ளது. சங்க மருவிய காலத்து சிலப்பதிகாரத்தில் திருவரங்கர் பெருமை விரிவாகவே வருகிறது. வால்மீகி, கம்பர், பரமேஸ்வர சம்ஹிதை, கோயிலொழுகு, குரு பரம்பரா பிரபாவம். ஆறாயிரப்படி திவ்ய சூரி சரிதம், பிரபண்ணாமிர்தம், ஆசார்யசக்தி முக்தாவனி, லட்சுமி காவியம், திருமலை ஒழுகு, திருமாளிகை ஒழுகு பழநடைவிளக்கம், உபதேசரத்னமாலை, பெரிய திருமுடியடைவு, ஸ்ரீரங்கதல புராணம் முதலியவற்றில் ஸ்ரீரங்க மகாத்மியத்தைக் காணலாம். ஆதிசங்கரரின் ஸ்ரீரங்க நாதாஷ்டகம், ராமானுஜரின் ஸ்ரீரங்க கத்யம், பராசர பட்டரின் ஸ்ரீரங்க ராஜஸ்தவம், ஆளவந்தாரின் சதுஸ்லோகி கூரத்தாழ்வாரின் ஸ்ரீஸ்தவம், பிள்ளைப்பெருமாள் அய்யங்களின் அஷ்டப்பிரபந்தம் (திருவரங்கத்தந்தாதி) மகாதேசிகனின் (வேதாந்த) ஸ்ரீ பாதுகா ஸ்தரகம் முதலானவற்றோடு ஸ்ரீரங்கதாசர்களான மகாகவி காளிதாஸர், கிருஷ்ண சைதன்யர் துளசீதாஸர், புரந்தர தாஸர், ஸ்ரீபாததாஸர், மந்தராலாய ராகுவேந்திர ஸ்வாமிகள், கவி காளமேகம், பாரதப்பெருந்தேவனார், தியாகய்யர், முத்துசாமி தீக்ஷிதர் சியாமா சாஸ்திரி, அருணாசலக்கவிராயர், தண்டபாணி தேசிகர். இவ்வாறு கணக்கற்ற அருளாளப்பெருமக்களின் தொகை விண்மீன் கூட்டமாக விரிகிறது.

# ஸ்ரீரங்க நூற்றாண்டுகள்

திருவரங்கத்திருப்பதியில் நடைபெற்ற வரலாற்றுக்குறிப்புகள் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன. கி.பி. 1-8-ம் நூற்றாண்டு முடிய சோழ, பாண்டிய, பல்லவர் திருப்பணிகள் நடந்தன. திவ்யப்பிரபந்தம் சேவிக்கப்பட்டுப் புகழடைந்தது. 8-ம் நூற்றாண்டில் ஆண்டாள் திருப்பாவை பிரபல்யமடைந்தது. அவள் அரங்கனோடு ஐக்யமான நிகழ்ச்சி நடைபெற்றது. கி.பி. 788-ல் அத்வைத ஸ்ரீ ஆதிசங்கரர் பிறந்தார். 820வரை வாழ்ந்தார். அரங்கனது பெருமையினை அவர் அருளிய ஸ்ரீ ரெங்காஷ்டகம் தெளிவுபடுத்துகிறது. 790-ல் திருமங்கைமன்னன் நம்மாழ்வாரின் திருவாய் மொழியைத் திரு அத்யயன உத்ஸவத்தில் சிரஞ்சீவியாக்குகிறார். பிரபந்தத்தைத் தமிழ்வேதம் என ஏற்றுக்கொண்ட காரணத்தால் சமஸ்கிருத மொழிப்பிரியர்கள், பிரபந்தம் கொல்லும் பாட்டு என்று பிரசாரம் செய்ததால் திவ்யப்பிரபந்தம் நாலாயிரமும் வழக்கொழிந்தது. 9-ம் நூற்றாண்டில் 832-ல் காட்டுமன்னார் கோவிலில் பிறந்த ஸ்ரீநாதமுனிகளின் தியான பலத்தால் மறைந்த தமிழ்வேதம் புத்துயிர் பெற்றது. 885-ல் கம்பர் காவியம் நாதமுனிகளால் கோயிலில் அரங்கேறுகிறது. நாதமுனிகள் தனது ஆலயத்தலைமையை தன் பிரதம சிஷ்யரான உய்யக்கொண்டாரிடம் ஒப்படைத்து தனக்குப்பிறக்க இருக்கும் பேரப்பிள்ளை ஆளவந்தாரிடம் ஒப்படைக்குமாறு கூறி திருநாடு ஏகுகிறார். 890-ல் கலிங்கப்படையால் ஸ்ரீரங்க ஆலயம் சேதமடைகிறது. பகவானே அருளிய பாஞ்சராத்ரபூஜாமுறை சில விஷமிகளால் வைகானசமாக மாற்றப்பட்டது.

10-ம் நூற்றாண்டில் 929-ல் அவதரித்த உய்யக்கொண்டார் சீடரான மணக்கால் நம்பி ஆலயத்தை நிர்வகித்துப்பின் நாதமுனி பேரனான ஆளவந்தாரிடம் ஒப்படைக்கிறார். ஹொய்சல அரசர்களால் ஆலயம் பொருள்வளம் பெறுகிறது. தனக்குப்பின் யார் எனத்திகைத்த ஆளவந்தாருக்கு ஸ்ரீபெரும்புதூரைக் கோடி காட்டுகிறார் பெரிய பெருமாளான ரெங்கநாதர். 11-ம் நூற்றாண்டில் 1017-ல் பெருமாளின் பேரருள் உடையவரான ஸ்ரீ ராமானுஜர் பிறந்தார். 1025-ல் ஈழக்கைதிகளால் கொள்ளிட நதிக்கரையைச் சீர்படுத்துகிறான் முதலாம் ராஜேந்திரச் சோழன். இராமானுஜர் திருவரங்கர் செல்வத்தையெல்லாம் திருத்தி வைத்த வைபவம் விரிவாகவே கூறப்பட்டுள்ளன (ஆச்சார்ய பிரபாவத்தில்) இராமானுஜருக்குப் பின் ஆலயத்தலைமையை முதலியண்டானிடமிருந்து கந்தாடை ராமானுஜம் ஏற்கிறார்.

12-ம் நூல் 1178-ல் ஸ்ரீரங்கம் திருவானைக்கா எல்லைத்தகராறு ஏற்பட்டு அரங்கனுக்கு ஜம்புதீர்த்தம் கிடைக்காமல் போய்விடுகி றது. 1198-ல் அரங்க பக்தரான துவைத மத ஸ்தாபகர் மத்வாச்சாரி யார் பிறந்தார். 1275 வரை வாழ்ந்தார் 13-ம் நூல், 1223-25 வரை மூன்று ஆண்டுகள் கலிங்கப்படை முற்றுகையிட்டு ஆக்கிரமித்துக் கொண்டது. 300 நாட்கள் பூஜையற்றிருந்த பெரிய பெருமாள் ஹொய்சல மன்னர்களால் விடுதலை பெறுகிறார். 1234-62 வரை ஹொய்சல மன்னர் சோமேஸ்வரன் ஆலயத்திருப்பணி செய்கிறார். 1251-ல் சடையவர்ம பாண்டியன் ரங்கவிமானத்தைப் பொன் மயமாக்குகிறார்.

1263-69 வரை ஹொய்சல ராமனாதர் பல ஆலயத்திருப்பணிக ளோடு ஸ்ரீ கோபால கிருஷ்ணர் சன்னிதியைக் கட்டுகிறார். 14-ம்நூ'ல், 1311-ல் பாண்டிய சகோதரர்கள் பதவிமோகத்தால் தமிழகத் தில் புகுந்த மாலிக்காபூர் மதுரை, ஸ்ரீரங்கம், ஆலயங்களிலிருந்து 96,000 மணங்கு, தங்கம், வைரம், வெள்ளிநகைகளோடு உற்சவ மூர்த்தியையும் டெல்லிக்குக் கொண்டுபோகிறான். அவனைத் தொடர்ந்து சென்று ஆடிப்பாடி அரையர்கள் அழகிய மணவா ளனை மீட்டு வந்தனர். டெல்லிச் சுல்தானின் மகள், பெருமாள் பக்தி மேலிட்டு அரங்கனைத் தேடிவந்து துலுக்கநாச்சியார் ஆகி றாள். 1323-ல் மீண்டும் கொள்ளையிட வந்த சுல்தானால் ஸ்ரீரங்கக் கருவூலம் காலியாகிறது. தொன்மையான கோபுரங்கள், மண்டபங் கள் தூள்தூளாகின்றன. மூலஸ்தானத்தைத் தாக்க வந்த படைத்த லைவனைத் தியாக மகளான தேவதாசி சாகஸத்தால் வென்று பெரிய பெருமாளைக்காப்பாற்றுகிறாள். உற்சவரான அழகிய மண வாளரைத் துக்களக்கிடமிருந்து மீட்கும் திருப்பணியில் உயிரையே தியாகம் செய்கிறார். பிள்ளை லோகாச்சாரியார். திருப்பதிப்பகுதி யில் பாதுகாக்கப்பட்டு வந்து ஸ்ரீரங்கமூர்த்தி 50 ஆண்டுகளுக்குப்பி றகு ஆஸ்தானம் (ஸ்ரீரங்கம்) சேருகிறார்.

1325-ல் ஹொய்சல மன்னனான மூன்றாம் வல்லாளன் இடை விடாமல், துருக்கியரை எதிர்த்துப் போராடியபடி இருக்கிறார். 1326-ல் விஜயநகர சாம்ராஜ்யம் உதயமாகிறது. விஜயநகரப்பிரதி நிதி கம்பனாரின் மனைவி கங்காதேவி எழுதிய 'மதுரை விஜயம்' என்ற நூல் துருக்கர் கொடுமைகளை எல்லாம் விவரிக்கிறது. 1342-ல். மூன்றாம் வல்லாளனை துரோகி கியாஸ் உத்தீன் நயவஞ்ச கமாகச் சிறைப்பிடித்து உயிரோடு தோலை உரித்துத் தொங்க விடுகிறான். தியாகிவல்லாளன் தெய்வமாகிறார். 1371-ல் ஸ்ரீரங்கர்

ஆலயம் விஜயநகரப் பிரதிநிதிகளால் மீட்கப்படுகிறது. 1415-21 நின்று போன திருவிழாக்கள் தொடர்ந்து நடக்கின்றன. ஸ்ரீரங்கம் திருவானைக்கா எல்லைச்சுவர் கட்டப்படுகிறது. 1432-ல் விஜயநக ரப் படைத்தலைவன் பேராசையால் நிர்வாகம் சீரழிகிறது. ஜீயர், கொங்கியர் பலர் கோபுரத்தின் மேலிருந்து குதித்து மாய்கின்றனர். நாசர் நாயக்கர் ஆலய நிர்வாகத்தை கந்தாடை பரம்பரையிடம் ஒப்படைக்கிறார்.

16-ம் நூ'ல் கிருஷ்ணதேவராயர் குலசேகரன் படி, கொடிமரம் தங்கத்தகடு போடுதல் போன்ற திருப்பணிகளைச் செய்கிறார். ஆலய நிர்வாகம் கூரநாராயண ஜீயர், ரங்க நாராயண ஜீயர் எனத் தொடர்கிறது. வடகலை, தென்கலை சர்ச்சை தொடங்குகிறது. 1600-ல் தஞ்சை மன்னர் அச்சுத நாயக்கர் முடிதுறந்து ஸ்ரீரங்க ஆலயவாசியாகிறார். அவர் ஸ்ரீரங்கக் கோயிலின் தெற்குக் கோபு ரத்தை எழுப்ப முயன்றார். ஆனால் அவரால் அடித்தளம் வரைதான் எழுப்ப முடிந்தது.

1602-ல் ஸ்தலத்தார் என்ற நிர்வாக பரம்பரை நியமனமாயிற்று. பிரபந்தம் பாடுதல் அவசியமா என்ற சர்ச்சை ஏற்பட்டு வடகலை காஞ்சியிலும் தென்கலை ஸ்ரீரங்கத்திலும் என்று தீர்மானிக்கப்பட் டது.

முன்பே அச்சுத நாயகரால் ஆரம்பிக்கப்பட்ட ராஜகோபுரம் 1987-ல் கட்டி முடிக்கப்பட்டது. 13 நிலைகளைக் கொண்ட, தென்கிழக்கு ஆசியாவிலேயே மிக உயர்ந்த 236 அடிஉயரம், 150 அடி அகல ராஜகோபுரத்தின் மொத்தச் செலவு ஒரு கோடியே அறுபது லட்ச ரூபாய். ஆந்திர அரசு, கர்நாடக அரசு, காஞ்சிபீடம், அகோபல மடம் 44-வது பட்டத்து ஸ்ரீமத் பரமஹஸ்ஸேதயாதி ஜீயர்,. இசை இளையராஜா, திருச்சி, ஸ்ரீரங்க, மக்கள் முன்னாள் ஜனாதிபதி R.V. அகோபில சீடர், காமகோடி சீடர், தமிழக அரசு எல்லோரது முயற்சியால் கட்டி முடிக்கப்பட்டது.

ஆழ்வார்களில் பதின்மரும் பரவும் பெருமாளான இவர்தான் ''காவேரி விரஜாஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம் ஸ்வரவாஸு தேவோ ரங்கேச பிரத்யக்ஷம் பரமம்பதம்'' என்று காவேரியே விரஜை, வைகுண்டம் அரங்கம்; பரவாஸுதேவனே இங்கே பிரத்யக்ஷமாகக் காட்சி தருகிறார் என்பது ஸ்ரீரங்கரின் சிறப்பாகும்.

இனி ரங்கபதியில் நடக்கும் திருவிழாக்களின் தத்வார்த்த விளக்கத்தைக் காண உள்ளோம்.

# திருவரங்கர் திருவிழா தாத்பர்யங்கள்

அரங்கநாதன் கண்டருளும் உத்ஸவங்களில் உள்ள தாத்பர்யம் பற்றிக் காண உள்ளோம். நித்யோத்ஸவ, பக்ஷோத்ஸவ, மாஸோத் ஸவ, ஸம்வத்ஸரோத்ஸவம் என ஏற்பட்டிருந்ததில் நித்யோத்ஸ வம் நீங்கலாக ஏனைய உத்ஸவங்கள் நடந்தேறி வருகின்றன. இவற்றுள் பரம்மோத்ஸவமும், அத்யயன உத்ஸவம் எனப்படும் திருவாய்மொழித்திருநாளாகிய பகல் பத்து, இராப்பத்து உத்ஸவங் களும் முக்கியமானதாகக் கருதப்படுகின்றன.

'காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்குய்யும் வண்ணம்' என்ற படி (திருமாலை 10) எம்பெருமான் திருவடிகளில் ஆத்மாவை சமர்ப்பித்து உஜ்ஜீவிக்கும் மார்க்கத்தை இந்த மார்கழி உத்ஸவம் காட்டிக்கொடுப்பதால் இதற்கு **மோ க்ஷோத்ஸவம்** என்றும் பெயரா யிற்று. திருமங்கை மன்னன் ஸ்ரீரெங்கப்பிரபுவிடம் வந்து 'அணி யார் பொழில் அரங்க நகரப்பா, துணியேனினி நின்னருளல்லாது, மணியே, மணி மாணிக்கமே மதுசூதா பணியாய் எனக்குய்யும் வகை பரஞ்சோதி என்று பிரார்த்தித்தார். உடனே உத்தம நம்பி (கோயில் அர்ச்சகர்) பகவான் நியமித்தபடி காட்டிக்கொடுக்க ஆழ்வாரும் கண்டு தெளிந்தார். அதன்பின் பெருமாள் திருக்கார்த் திகை உத்சவத்தைக் கண்டருளி 'உயர நின்றதோர் ஜோதியின் தத்துவத்தையும் காட்டிக்கொடுத்து அதுவே நம்மாழ்வார் முதலான வர்களுக்கு தாம் காட்டிக்கொடுத்த தத்துவம் என்று மங்கை மன்னனுக்கு அருளிச் செய்தார். மங்கை மன்னனும் ஆழ்வாரை, திருநகரியிலிருந்து எழுந்தருளச் செய்து, அத்தத்துவத்தை உலகோர் அறியும்படி உற்சவமாய் நடத்திக்காட்டும்படி பிரார்த்தித்ததுமல்லா மல் திருவாய்மொழிக்கு வேதசாம்யம் கொடுத்து வேதத்தைஒக்க, அத்யயன உத்சவத்தில் அதையும் கேட்டருள வேணும் என்று பெருமாளிடம் வேண்டியதால் பெருமாளும் உவப்புடன் நம்மாழ் வாருக்கு ஸ்ரீமுகம் அனுப்பி வரவழைத்து உத்சவத்தை நடத்தி தமிழ் வேதமாகிய திருவாய்மொழிக்கு ஒரு வேதசாம்யம் (சமமானது) கொடுத்து அதைக் கேட்டருளினார்.

*திருநெடுந்தாண்டகம்:* இந்தத்திருவிழா பகல்பத்துக்கு முதல் நாள் ராத்திரி நடக்கிறது. பகல்பத்து இராப்பத்து உத்ஸவங்களில் குறிப்பிடப்படும் தத்துவத்தைச் சுருக்கமாக வெளியிடுகிறது இந்தத் திருவிழா. எந்தை தளிர்புரையும் திருவடி என் தலைமேலேவே என்று பகவான் தரிசனம் பெற்றதைக் கூறுவதால் இந்த நூலை

ஒரு நூலுக்கு முன்புள்ள முகவுரை போல ஏகாதசி உத்ஸவத்திற்கு முகவுரையாக இவ்விழா இருந்து வருகிறது. திருவரங்கன் திருப்பதியில் மட்டும்தான் இப்பொழுது இந்த விழா நடைபெற்று வருகிறது.

**பகல் பத்து:** இந்த உத்ஸவம் பத்துநாள் பகலில் நடப்பதாலும், இதில் முக்கியமான அரையர் சேவை பகலில் நடப்பதாலும் இதற்குப்பகல் பத்து என்று பெயர் ஏற்பட்டது. உலகம் உய்வதற்கு அறிய வேண்டிய தத்துவம், வராக, வாமன, திருவிக்ரம அவதாரங் கள் என்பது ஆழ்வார்களனைவரின் துணிவாகும். அவைகளில் வராக, வாமன அவதார தத்வம் ரெங்கநாதன் சன்னிதியிலிருந்து வெளியில் வந்து சிம்ஹகதியோடு மேற்கே திரும்பி நிற்பதால் காட்டப்படுகிறது. ஒய்யார நடை, ஈரடி வைப்பதால் திருவிக்ரம அவதாரத்தைக் காட்டிக்கொடுக்கிறது. மேலே சொன்ன சிம்மகதி யும், ஒய்யார நடையான வியாக்ரகதியும் நம்மாழ்வார் பாசுரங்களா கிய 'ஞானப்பிரானையல்லால் இல்லைதான் கண்ட நல்லதுவே', சிவன் அயன் இந்திரன் இவர் முதல் அனைத்தோர் தெய்வக்குழாங் கள் கைதொழக் கிடந்த மூவுலகளந்த சேவடியையோ என்பவை களை அனுசரித்து ஏற்பட்டன.

இராமானுசர் காலத்தில் மேலே சொன்ன பாசுரங்களோடு வேறு சில அதே கருத்துள்ள பாசுரங்களும் குறிப்பாக 'பிறையேறு சடையானும் ப்ரம்மனும், இந்திரனும் இறையாதல் அறிந்தேத்த' என்ற நம்மாழ்வார் பாடியபடியும் அர்த்தங்களை நாடக ரூபமாக வும் நடித்துக்காட்ட நினைத்தும் பெருமாள் புறப்பட்டவுடன், ஜீயர், பட்டர் முதலானோர் மேலப்படியில் தெண்டனிட்டுச் சேவிக் கிறார்கள். இது ரங்கநாதன், சிவன், அயன் இந்திரன் முதலானவர்க ளுக்கு மேற்பட்டவன் என்பதைக்காட்டும் குறியீடாகும். ரங்கநா தனே எல்லா உயிர்களுக்கும் நாதனென்றும், 'உள்நின்று உயிர்க ளுக்கு உற்றனவே செய்து அவர்கட்கு உய்யவே பண்ணும் பரன்' என்னும் கருத்தையே இராமானுசர் காட்டிக்கொடுத்தது. இதையே இராமானுச நூற்றந்தாதியில் அமுதனார் இறைஞ்சப்படும்பரன் ஈசன் அரங்கனென்று இவ்வுலகத்து அறம் செப்பும் அண்ணல் இராமானுசன் என்று அருளிச்செய்தார். பெருமாள் மேல்படியை விட்டு கீழே இறங்கி வடக்கே திரும்பி நின்றவுடன் உத்தம நம்பிகளுக்கும் தேவஸ்தான அதிகாரிகளுக்கும் இரண்டு உருண்டை சந்தனம் கொடுக்கப்படும். இதை அவர்கள் வினயத்து டன் பெற்றுக்கொண்டு பணியக்காரரிடம் திருப்பிக்கொடுத்து விடு

வார்கள். இதன் தாத்பர்யம் அவர்கள் ரங்கநாதனுடைய கைங்கர்யத் தைத் துரோகமன்றி செய்து வருவதாக ராஜவிசுவாசப் பிரமாணம் செய்வதாக அர்த்தம். அதன்பிறகு அரங்கன் சேனை முதலியார் வாசலுக்குச் சென்று அவருக்கு மாலையை அனுப்பிச் சாத்தச்செய் வது; உத்ஸவத்துக்காக வெளியே செல்லும் ரங்கநாதன் தனது ராஜாங்க அதிகாரத்தைச்சேனை முதலியாரிடம் ஒப்படைப்பதாகி றது. பெருமாள் சன்னிதியிலிருந்து புறப்பட்டு வந்து ஆஸ்தானத் தில் (அர்ஜுனமண்டபம்) அமர்ந்ததும், முதலில் ஆழ்வார், ஆசார் யர்களுக்கும் பின் அரையர்களுக்கும் மரியாதைகள் செய்வார். பின்னர் திருவாய்மொழியும் (இயற்பா நீங்கலாக) மற்ற பிரபந்தங்க ளும் சேவிக்கப்படும். இரவு பெருமாள் கர்ப்பக்கிருஹம் திரும்பும் பொழுது, கருவூலம் பக்கமுள்ள நாலு கால் மண்டபம் வந்து அங்கிருந்து யாகசாலை வரையில் ருஷபகதியில் பக்தி உலாவித் திரும்புவார். இந்த ருஷபகதி பிப்ரணாயாமம் செய்யுமுன் எப்படி நாடிசுத்தி செய்து கொள்வது என்பதைக் குறிக்கிறது. நாலுகால் மண்டபத்திற்குத் திரும்பி வந்ததும் பானகம் விடாய்ப் பருப்பு நிவேதனம் செய்யப்படும். இது நாடி சுத்தி செய்து கொண்டபின் அல்ப ஆகாரம் செய்து கொண்டு இளைப்பாற வேண்டும் என்ப தைக் குறிக்கிறது. இந்த மண்டபத்தில் அவருக்கு அர்க்கியம் முதலானவை ஸமர்ப்பித்து திருவடி விளக்கின தீர்த்தம் விநியோ கம் செய்யப்படும். இந்தப் பத்ததி திருவாய் மொழியிலுள்ள மேலாத்தேவர், வையத்தேவர், நிலத்தேவர் என்னும் பதங்களின் அர்த்தத்தையும் தத்வபேதங்களையும் காட்டிக்கொடுக்க இராமானு சரால் ஏற்படுத்தப்பட்டது. மேலாத்தேவர்களான முமுக்ஷுக்கள் ஸ்தானத்தில் அர்ச்சகர்கள், உத்தம நம்பி (ஆண்டான் பிரதிநிதி) ஸ்தானிகர் இவர்களுகுகு திருவடி விளக்கியவுடன் தீர்த்தம் சாதிக் கப்படுகிறது. வையத்தேவர் என்பவர் புவர்லோகம் முதல் சத்ய லோகம் வரை வாழும் பிரம்மாவும் அவருக்குக் கீழ்ப்பட்ட தேவதைகளுமாவர். அவர்கள் ஸ்தானத்தில் ஜீயர், பட்டர் முதலா னோர் நியமிக்கப்பட்டனர். அடுத்தபடியாக மேலாத் தேவருக்கு தீர்த்தம் ஸாதிக்கப்படுகிறது. இந்திரனோடு பிரமன் ஈசனிவரெல் லாம் மந்திரமாமலர் கொண்டுமறைந்துவராய் வந்து நின்றார் என்ற தத்துவத்தைக் காட்ட பெருமாளுக்கு முன் தூரத்திலே நிற்பார்கள். இவர்கள் ஸ்தானிகரால் அருளப்பாடு பெற்றே ஸ்வாமி பக்கம் செல்ல வேண்டும். நிலத்தேவர் என்பவர் பூமியிலுள்ள ஸாது வைஷ்ணவர்கள். இவருக்கு நிற்குமிடத்திலேயே தீர்த்த விநியோ கம் ஆனபிறகு ரெங்க நாதன் ஒய்யாரநடை என்னும் வியாக்ரகதி

யில் யாகசாலைவரை சென்று திரும்பி நாலுகால் மண்டபத்துக்( வருகிறார். இந்த நடை கும்பகத்தைச் செய்தால் குண்டலினி சக்! ஸுஷும்னா நாடியில் புகுந்து புலி ஒரு இடத்திலிருந்து மற்றொ( இடத்திற்குப் பாய்ந்து செல்வது போல பாய்ந்து செல்கிறத என்னும் தத்துவத்தைக் காட்டுகிறது.

## படியேற்றம்

எம்பெருமான் (ரங்கநாதன்) ஸந்நிதிக்கு முன்புள்ள மண்டபத் திற்கு அங்குள்ள படிகளின் வழியாக ஏறும்பொழுது மிருதங்கம் முதலான வாத்திய கோஷ்டியோடு அரையர்கானம் செய்வார் இந்தப்படியேற்றம் குண்டலினிசக்திஸுஷும்நா நாடியில் ஆறு ஆதாரங்களையும் கடந்து ஸகஸ்ரார சக்ரம் போய்ச் சேருவதைக் குறிக்கிறது. ஆறாவது ஏழாவது படிகளில் பெருமாள் ஒரு புறம் ருந்து மற்றொரு புறம் திரும்பி ஆடுவதால், மங்கைமன்னன் பாசுரமான 'நீணிலமுற்றத்து நின்றிவள் நோக்கினாள், காணுமோ கண்ணபுரம் என்று காட்டினாள்' (பெரிய திருமொழி 8:21:1) என்பதன் அர்த்தம் குறிப்பிட்டுக் காட்டப்படுகிறது. அதாவது புருவ மத்யஸ்தானமாகிய ஆஜ்ஞா சக்கரம் வரையில் குண்டலினி சக்தியை பிரவேசிக்கும்படி செய்து கொண்டவர்கள் பகவானு டைய தரிசனத்தைப் பெற்று மற்றவர்களுக்கும் பகவான் இருக்கும் இடத்தைக் காணுமோ என்று காட்டிக் கொடுத்தாகத் தெரிகிறது. மண்டபத்தின் மேல் ஏறினவுடன் ஸ்ரீபாதம் தங்குவோர் பெரு மாளை உயரத் தூக்கிக்காட்டுகிறார்கள். இதனால் ஸுஷும்நையி லுள்ள எல்லா படிகளையும் ஏறிச்சென்ற குண்டலினியுடையவர் கள் பரமபதம் என்னும் மேலான ஸ்தானத்தை அடைந்து விட்ட தாக ஐதீகம்.

தமது சரீரத்திலுள்ள குண்டலினி சக்தியை ஸகஸ்ராரம் போய்ச் சேரும்படி செய்யக்கூடியவர்கள் பரஞ்சோதியான பகவானை சோதிரூபமாய்க் கண்டு தரிசிக்கலாமென்பதைக் கட தீபாராதனை காட்டுகிறது. பிறகு ஸ்ரீரெங்கநாதன் கிழக்கே திரும்பி ஜயவிஜயாள் வாசலுக்கு வந்தவுடன் ஸ்ரீ பாதம் தாங்குவோர் பெருமாளை தோளுக்கு இனியானுடன் கையில் எழுந்தருளிப் பண்ணிக் கொண்டு வந்து ஸன்னிதிக்குள் நுழைவார்கள். இதுவரை கூட வந்த ஜீயர், பட்டர் முதலியோர் வெளியே நின்று விடுவார்கள். இது 'பின்னிட்ட சடையானும் பிரமனும் இந்திரனும் துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள்வாசல் என்பதனைக் காட்டுகிறது.

ஸந்நிதி வாசலில் ஸ்ரீபாதம் தாங்குவோர் பெருமாளைக் கீழே தாழ்த்திப்பின் மேலே உயர்த்தி சர்ப்பம் வளைந்து செல்வது போல் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போவார்கள். இப்படிச்செய்வது ஸர்ப்பகதி, பிரணாயாமத்தைச் செய்து கும்பக மூலம் அமுக்குவ தால் மூலாதாரத்திலுள்ள குண்டலினி சக்தி விழித்து ஸுஷும்ந நாடியில் நுழைந்து ஸர்ப்பத்தைப்போல் வளைந்து செல்வதைக் காட்டவேதான். பெருமாள் ஸந்நிதி வாசலுக்குமுன் வந்தவுடன் இரண்டு ஜ்வாலைகளுடன் கத்தரிபந்தம் பெருமாளுக்கெதிரில் பிடிக்கப்படும் பகவானது தரிசனத்தைப் பெறச்செய்யும் ஞானச்சு டர் என்னும் பிரகாசத்தை ஆக்ஞா சக்கரமாகிய புருவ மத்தியில் சூரிய சந்திர நாடிகளை ஒன்றோடொன்று சேரும்படி செய்து உண்டாக்கிக்கொள்ள வேண்டுமென்பதை இந்தக் கத்தரி பந்தம் காட்டுகின்றது. பெருமாள் கர்ப்பக்கிருஹத்துள் போய் சிம்மாசனத் தில் எழுந்தருளினபின்பு ஆலயத்தில் நடைபெறும் பெருமாளு டைய (சர்ப்பகதி) திருக்கைத்தல சேவையைச் சேவிக்காமல் இருப் பதைக்காட்டிலும் உயிரை மாய்த்துக்கொள்வது மேல் என்று திரு மொழி வியாக்யான ஆரம்பத்தில் சொல்லப்படுகிறது.

இராமானுசர் காலத்தில் இந்தத்தத்துவத்தை அறிந்து அனுஷ் டித்தால் அனுஷ்டிப்பவரின் சிரசில் பகவான் பிரகாசிப்பான் என்ப தைக்காட்ட முதலியாண்டான் சன்னிதியில் நின்றுகொண்டு கைத் தல சேவையைச் சேவிக்க வேண்டியதென்றும் என் சென்னித்திட ரில் பாதவிலச்சினை வைத்தார் என்றபடி அவருக்குப் பெருமாளு டைய சடாரியைத் தலையில் சாதிக்க வேண்டும் என்றும் ஏற்பாடா யிருந்தது. ஆனால் துலுக்கர் படையெடுப்பில் முதலியாண்டான், வம்சத்தவர் தேசாந்திரம் போய்விட்டபடியால் வேதாசார்ய பட்ட ரென்பவர், அவர்களுக்குப்பதிலாக அவர்கள் வரும்வரை அவ்வரி சையைப் பெற்றுவர 1348-ல் ஓர் உடன்படிக்கை எழுதிக்கொடுத்து விட்டு பெற்றுவந்தார் என கோயிலொழுகு கூறுகிறது. நாடகரூப மாக நடத்திக்காட்டும் இந்த உற்சவம் மேலே கண்ட தத்துவங்க ளைப் போதிக்கிறது. மனிதன் மண்ணாசை, பொன்னாசை, பெண் ணாசை என்ற மூன்றையும் நீக்க வேண்டும். குறிப்பாக பெண் ணாசை ஒழிப்பது கஷ்டம் என்பதைக் குறிப்பில் காட்டவேபக வான் மோகினி வேஷம் பூண்டு அதனால் மயங்கியதால் அசுரர்கள் அமிர்தத்தை அடைவதை இழந்தார்கள் என்பதைக்காட்டி பெண் ணாசையில் மயங்காமல் எல்லாவிதமான மாயைகளினின்றும் விடுபட்டு என் வைகுந்த நாட்டை அடைவீர்களென்று உபதேசிக் கவே மோகினி அலங்காரம் காட்டப்படுகிறது.

இனி இராப்பத்து என்னும் திருவாய்மொழித்திருநாளில் அரங் கன் ஆயிரக்கால் மண்டபத்தின் மத்தியில் உள்ள அழகான திருமா மணி மண்டபத்தில் வீற்றிருப்பார் பெருமாள். அரையர்களால் திருவாய்மொழி (முன்னர் இரவு நேரங்களில்) சேவிக்கப்படும். திருவாய்மொழியின் இறுதிப் பாசுரமான 'சூழ்விசும் பணிமுகில்' என்று தொடங்கும் பதிகத்தின் தாத்பர்யங்கள் நாடகம் போல் நடத்திக்காட்டப்படும். பரமபதத்திற்குச் செல்லும் முமு க்ஷுவாய் ரங்கநாதனே நடிக்கிறார். பெருமாள் புறப்படுமுன் ஆரியபட்டாள் வாசல், நாழிகை கேட்டான் வாசல் முதலியவை மூடப்படுவது. 'அறிவென்னும் தாள் கொளுவி ஐம்புலனும் தம்மில செறிவென் னும் திண்கதவம் செம்மி, மறையென்னும் நன்கோதி நன்குணர் வார் காண்பரே நாள்தோறும் பைங்கோதவண்ணன்படி' என்றபடி இந்திரியங்கள் ஐம்புலன்களின் வழியாக வெளிச்செல்வதைத் தடுக்க முதலில் அவைகளை மூட வேண்டும் என்பதைக் குறிக்கி றது. பெருமாள் ரத்ன அங்கி சாத்தி புறப்படுவார். அப்பொழுது ஸன்னிதி வாசல் திறக்கப்படுவது ஸுஷும்னையிலுள்ள பரம்ம கிரந்தியைப் பேதிப்பதாகும். ஸன்னிதிக்கு வெளியில் கீழே நிற்கும் உத்தமநம்பி ஸ்தானீகரால் விநயத்துடன் கையால் சமிக்ஞை செய்து அழைக்கப்படுவார்.

அவர் பெருமாள் பக்கத்தில் சென்றதும் அவருக்குப்பட்டு, தொங்கு பரிவட்டம் கட்டி பெருமாளுடைய பட்டிலிருந்து கிழிந்து போன ஒரு சிறிய துண்டு அவர் தலையில் வைக்கப்படும். இதன் பொருள் மேலே நடக்க இருக்கும் நாடக ரூபமான உத்ஸவத்தை நடத்திவைக்கும் பொறுப்பாளியாக உத்தம நம்பி நியமிக்கப்பட்டி ருக்கிறார் என்பதைக் குறிக்கிறது. 'உன் வையம் தாவிய மலரடிக் கீழ் முந்தி வந்து நான் நிற்க, முகப்பே கூவிப்பணி கொள்வாய்' என்னும் நம்மாழ்வார் பாசுரம் நடத்திக்காட்டப்படுகிறது. அதற்குப் பின்னர் மணியக்காரருக்கும், கந்தாடை ராமானுஜய்யங்காருக்கும் தலையில் பட்டுத்துண்டு இட்டு அவர்கள் உத்தம நம்பிக்கு உதவியாளர்கள் என்பது காட்டப்படுகிறது. மேலப்படி வழியாகப் பெருமாள் கீழே இறங்கியவுடன், படி ஸாதித்தபிறகு அங்கு நின்று கொண்டிருக்கும் எட்டுப்பேருக்கும் தலையில் பட்டுத்துண்டுகள் வைக்கப்பட்டு திருவரங்க கூட்டத்தார் என்று அருளப்பாடு சாதிக் கப்படும். அவர்கள் பெருமாளுக்கு முன் பிள்ளைப் பெருமாளய் யங்கார் ரங்கநாதன் விஷயமாகப் பாடிய அஷ்டப்பிரபந்தம் சொல் லிக்கொண்டு துரை மண்டபம் வரையில் போவார்கள்.

பகவான் திருவடியில் தனது ஆத்மாவை சமர்ப்பிக்கும்போது முழு க்ஷுஹூம்காரத்தை உச்சரிக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறது. பெருமாள் அங்கிருந்து நாலடி சென்றவுடன், சாத்தாத வைஷ்ணவர்கள் 'எழுமினென்று இரு மருங்கிசைத்தனர், முனிவர்கள், வழியிது வைகுந்தற் கென்று வந்தெதிரே' என்று முக்தனைப் பரமபதத்துக்கு அழைத்துச்செல்லும் ஆதிவா ஹிகர்களாக நடிக்கிறார்கள் என்பதைக் காட்ட அவர்கள் தலையிலும் பட்டுத்துண்டுகள் வைக்கப்படும். பிறகு யாகசாலை மூலைக்குச்சென்று கிழக்கே திரும்பியதும் திருப்பணி செய்வார் ஒரு பாத்திரத்தில் தீர்த்தத்தைக் கொண்டு வந்து பெருமாள் முன் சேர்ப்பர். இதன் தாத்பர்யம் மேலுலகத்தவர் 'பதியனில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்' என்பதாகும். பிறகு பெருமாள் நாழிகை கேட்டான் வாசலுக்கு முன் நின்றவுடன் அந்த வாசல் கதவுளைத் திறக்கும்படி ஆக்ஞாபிக்கப்பட்டு அவை திறக்கப்படும். இந்த வாசல் திறந்தால் ஸுஷீம்னையிலுள்ள விஷ்ணு கிரந்தி என்னும் தாள்கள் திறக்கப்படுவதாகிறது. அதன் பின்னர் பெருமாள் பரமபதவாசலுக்கு எதிரில் சென்று வடக்கு முகமாக நின்று அந்த கதவுகளைத் திறக்கும்படி நியமித்தவுடன் அவை திறக்கப்படும். இதனால் ஆக்ஞா சக்கரத்திலுள்ள ருத்ர கிரந்தி பேதிக்கப்பட்டது குறிக்கப்படுகிறது. இந்த வாசலுக்குக் கிழக்குப் பக்கத்தில் உள்ள கிணறு விரஜா நதி ஸ்தானத்தில் உள்ளது. பெருமாள் இந்த வாசலுக்குப் போனவுடன் அதுவரை சாத்திவந்த போர்வை மாலைகள் முதலியவற்றைக்களைந்து புது மாலைகள் சாத்துவது, விரஜா நதியில் ஸ்நானம் பண்ணும் முக்தனுக்குப் பழைய சரீரம் போய், வேறு திவ்ய (சுத்த சத்வமய) சரீரமும் சதுர்புஜ சங்க சக்கராதிகளும் ஏற்படுகின்றன என்பதை காட்டுவதாகும். அதனால் ஏற்படும் விசேஷ காந்தியோடு ஒளிக்கொண்ட சோதியாய் உடன் கூடுவது காட்டப்படுகிறது. பரம பதவாசல் திறந்தவுடன் எக்காளம் முதலிய வாத்யங்கள் ஊதப்படுகின்றன. பெருமாள் எழுந்தருளும்போது மத்தியில் உபயங்களில் நின்று அமுது செய்து வருவது. எதிரெதிர் இமயவர் இருப்பிடம் வகுத்தனர் என்பதன் பொருளாகும். 'அடியார் இவர் கோவிந்தன் தனக்கென்று முடியுடை வானவர் முறைமுறை எதிர்கொள்ள' என்றபடி ஆழ்வார்களும் உடையவரும் ஸ்ரீரங்கராஜஸ்தவம் சொல்லும் கோஷ்டி குறிக்கப்படுகிறது. 'கொடிமணி நெடுமதில் கோபுரம் குறுதினர் வடிவுடை மாதவன் வைகுந்தம் புகவே என்பதன் பொருள் பெருமாள் தவிட்டரை வாசல் நுழைவதால் நிரூபிக்கப்படுகிறது. இவ்வாறு அந்தப் பதிகத்திலுள்ள கதிரவரவரவர் கைந்

நிறை காட்டினர். நிறைகுடவிளக்கமும், மதிமுகமடந்தையர் ஏந்தி னர் என்பது தேவதாசிகள் தீபமேந்தி நிற்பதைக் குறிப்பதாகும்.

இவ்வாறு எல்லா பகுதிகளுக்கும் விளக்கங்களைக் காட்டிய பின், பெருமாளுக்கு முன் மண்டபத்தில் ஆழ்வார்கள் எழுந்தருளி யிருப்பது 'மாமணிமண்டபத்து அந்தமில் பேரின்பத்து அடியரோடு இருந்தமை' என்றபடி முத்தனை ஸத்கரித்து, அவன் ஆனந்த பரிதனாயிருப்பதைக் காட்டுகிறது. பிறகு பெருமாள்முன் நாளுக் கொரு பத்தாக பத்துநாளும் திருவாய்மொழி சேவிக்கப்படும். பனிக்காலப் போர்வை சாத்திக்கொண்டு விலா மிச்சிவேர்சப்பரதத் தில் எழுந்தருளுவார். கொட்டகையில் மல்லாரி என்னும் வாத்தி யத்துடன் பல வித வாத்யங்களும் வாசிக்கப்பட்டு வீணை இசை யோடு நாழி கேட்டான் வாசலிலிருந்து ஸந்நிதிக்குச் செல்லுவார்.

இராப்பத்து 7-ந்திருநாளன்று 'கங்குலும் பகலும்' என்ற பதி கத்தை நம்மாழ்வார் நாயகி பாவத்தில் நின்று பகவான் மனமுருகும் படி பாடி தனக்குத் தரிசனம் கொடுக்க வேண்டும் எனப் பிரார்த்தித் ததைக் கேட்டு ஸேவை கொடுத்ததைக் காட்ட அர்ச்சகர்கள் பெருமாளைத் தங்கள் கையில் எழுந்தருளிப் பண்ணிக்கொண்டு வந்து நிமிஷ நேரம் நிற்பார்கள். ஆயிரங்கால் மண்டபத்தில் நாயகிபாவத்தில் நாச்சியார் திருக்கோலத்தில் நிற்கும் நம்மாழ்வார் முன் மேற்சொல்லிய பாசுரங்களை அரையர்கள் சேவிப்பார்கள். பிறகு பெருமாள் மண்டபத்திற்கு எழுந்தருளுவார்.

இராப்பத்து எட்டாம் திருநாள் வேடுபறி உத்ஸவம் நடக்கி றது. பெருமாள் குதிரை வாகனத்தில் புறப்பட்டு தவிட்டரை வாசலுக்கு முன்புள்ள வெளியில், துரசுகதியில் வையாளிபோடு வார். திருமங்கையாழ்வார் பெருமாளை வழிமறித்துத் திருடிக் கொண்டு போனது முதலானவை காட்டப்படும். பெருமாளால் உபதேசிக்கப்பட்ட அஷ்டாக்ஷரமந்திரத்தின் மகிமையால் பெரிய பக்தராக மாறி 'வாடினேன் வாடி' என்று தொடங்கும் பாசுரத்தைச் சேவிக்க பெருமாளும் கேட்டுகந்து ஆயிரங்கால் மண்டபம் எழுந்த ருளுகிறார். இதற்கும் இராப்பத்து உத்ஸவத்திற்கும் சம்பந்த மில்லை.

## ஆழ்வார் மோட்சம்

இராப்பத்தின் கடைசிநாளில் நம்மாழ்வார் எப்படி மோக்ஷம டைந்தார் என்பது நடித்துக்காட்டப்படுகிறது. நம்மாழ்வார் பரமப

தத்திற்குச் செல்லும் ஒரு முத்தனைப்பால் வெள்ளையுடுத்து பன்னிரு திருநாமமும் துளசி மாலையும் தரித்திருப்பார். பெருமாள் வழக்கம்போல் திருமஞ்சனம் கண்டருளின பின், சத்ரசாமராதிகளுடன் நம்மாழ்வாரை அர்ச்சகர்கள் கையில் எழுந்தருளிப்பண்ணிக் கொண்டு போகும்பொழுது 'சூழ்வீசும் பனிமுகில் என்னும் பாசுரம் சேவிக்கப்படும் ஆழ்வார் பெருமாள் திருவடியில் சமர்ப்பிக்கப் படுவார். துளசியால் ஆழ்வாரை மறைக்கும்பொழுது 'முனியே நான்முகனே' என்ற பதிகம் அரையவரால் கானம் செய்யப்படும். ஆழ்வாரைப் பெருமாள் காலடியில் வைப்பதால் நாடாத மலர் நாடி நாள்தோறும் நாரணன் தன் வாடாத மலரடிக்கீழ் வைக்கவே என்ற தாத்பர்யத்தையும் துளசியால் மூடுவதால் 'நேசஞ்செய்து உன்னோடு என்னை உயிர் வேறன்றி ஒன்றாகவே கொண்டாய்' என்றபடி பகவான் தன்னுள்ளேயாம்படி ஸாயுஜ்யமோக்ஷத்தை அளித்ததையும் எல்லோரும் அறியும்படி நடத்திக்காட்டுவதாகும். இதுவே 'மெய்கலத்தல்' (உள் கலத்தல்) என்று சொல்லப்படுகிறது.

ஆழ்வார் திருவடி தொழுதபிறகு பெருமாள் தமது மாலை, கஸ்தூரி, திருமண் காப்புகளை அளிப்பார். இதனால் பரமபதம் சென்ற முக்தனுக்கு பகவான் அருள்புரிவது காட்டப்படுகிறது. பெருமான் சிம்மாசனத்திலிருந்து அர்ச்சகர்கள் கைத்தலத்தில் ஆழ்வார் சத்ரசாம ராதிகளுடன் பந்தம் வாத்ய கோஷ்டிகளுடன் தமது இருப்பிடம் சேருவார். பெருமாள் கொட்டகையிலுள்ள நாலுகால் மண்டபத்தில் நின்றுகொண்டு ஆழ்வார்களுக்கு மரியாதை செய்து அனுப்பி திருத்தாழ்வரை தாஸரால் 'படிப்பு' என்று சொல்லப்படும். ஸ்ரீ ரங்கநாதர் திருப்பாற்கடலிலிருந்து ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்த விருத்தாந்தம் எல்லோரும் கேட்குமாறு படிக்கப்படும். பின்னர் ஸ்தானீகர், நாயிந்தே - ரகுநாதா என்று பிரார்த்திக்க, பெருமாளும் ஸேவா பலம், தீர்த்தபலம் அனுக்கிரஹீத்து மேலே திருக்கல்யாண உத்ஸவத்தை நன்றாய் நடத்தி வை என ஆஜ்ஞாபிக்க, மணியக்காரர் அதைச் சிரஸாவகிக்க பெருமாள் மூலஸ்தானம் போய்ச்சேருவார். பட்டர், அரையர் ப்ரம்ம ரதங்கள் நடைபெற்று இராப்பத்து உத்ஸவம் முடிவடைகிறது. ஏகாதசியிலிருந்து சில நாட்கள் முத்தினாலாகிய அங்கியைத் தரித்திருக்கும் மூலவரை கர்ப்பக்கிருஹத்தில் கண்டு தரிசிப்பதே முத்தங்கி சேவை எனச்சொல்லப்படுகிறது. உத்ஸவத்தின் கடைசி நாளில், அரையரால் கானம் செய்யப்படாமல் பாக்கியிருக்கும் இயல் பா ஆயிரம் பாட்டும், ராமானுஜ நூற்றந்தாதியும் இயல்சாற்று வாழித்திருநாமங்களுடன் சாற்றுமுறை செய்யப்பட்டு வைகுண்ட ஏகாதசி உற்சவம் பூர்த்தியடைகிறது.

*ஸ்ரீரங்கம் கோயிலில் பிரத்யேகமாக வழங்கும் தமிழ்ச்சொற்க ளில் சிலவற்றை உதாரணமாகத் தந்துள்ளேன். கோயில் தமிழ் (ஸ்ரீ பார்த்தசாரதி அய்யங்காரின் நாலாயிர திவ்யப்பிரபந்த அகராதியிலி ருந்து எடுக்கப்பட்டது.*

அங்கில் - பெருமாள், தாயாருக்குச் சாத்தும் கவசம்

அழுஞ்சி - கூலி இல்லாத வேலை

அரிவாணம் - மாலை, பிரசாதம் கொண்டு போகும் தாம்பூலத் தட்டு

அருமாலி - மாலை சாத்தும்போது நார் கத்தரிக்க உதவும் சிறு கத்தி, தொண்டரடிப்பொடி ஆழ்வார் உபயோகித்த கத்திஅருள் மாரி என்பதன் மருவு.

இராமானுசன் - தீபாராதனை தட்டுக்கு வைத்த பெயர்

உப்புச்சாறு - நாச்சியார் இரவில் அமுது செய்யம் மிளகுக் குழம்பு.

திருக்கரகக்கையேல் - திருமஞ்சநத்தில் எடுத்துக்கொடுக்க வேண்டிய கிண்டிக்கு அருளப்பாடு.

திருவூறல் திருநாள் - ஊற்றுப்பறித்து அதில் முதலையாக ஒரு கட்டையைப்போட்டு அருகில் யானையை நிறுத்தி நடத்தும் கஜேந்திர மோட்ச உத்ஸவம்

நம் பாடுவான் - நமக்குப் பாடுகிறவன், அரையருக்கும், கைசித புராண கதாநாயகனுக்கும் பெயர்

நாயிந்தே - அருளப்பாட்டின் பேரில் பெருமாளுக்கு சாமான் எடுத்துக்கொடுக்கிறவன். நான் இதோ என்று சொல்லுவதன் திரிபு. வியாக்கியானம் முதலியன விண்ணப்பிக்கையிலும் இச்சொல் வரும்

நாழிகேட்டான் வாசல் - துவஜஸ்தம்பத்துக்கு அப்பால் வடக்கி லுள்ள வாசல்

நிலையங்கி - பட்டர், அரையர் அமுதனார் மூவரும் பிரம்மரத காலத்தில் தரிக்கும் பெரிய சட்டை, பாதம்வரை தொங்குவது.

நிசான் - துணியில் தைத்த கொடி

பணிப்போர் - செய்த சாமானில் வேலைக்குக் கூலியாக ஒரு பாகம்

பலகை மாதவம் - சமையல்காரர் கூலியில் ஒரு பாகப் பிரஸாதம்

சேர்த்த பலகையை அலம்புகிறவருக்கு பிரஸாதத்தில் உள்ள கூலிக்கு பெயர் மாதவம் என்பது.

பீகமுத்திரை - பீகம் - பூட்டு (தெலுங்கு) பூட்டி முத்திரை வைப்பது.

பொலிவூட்டி - வட்டி வருமானத்தைக் கொண்டு நடக்கும்படி செய்த சாஸ்வதகைங்கர்யம்.

போர்ப்படி - சந்தனம் கலந்ததற்கு கூலியாகச் சந்தனத்தில் ஒரு சிறு பாகம்

மணியம் - உள்துறை அதிகாரம்

மல்லாரிநடை, மல்லாரி வாத்தியம்: - இராப்பத்துத் திருநாளில் பெருமாள் கொட்டகையைச் சுற்றி வேகமாக வரும். நடையும், அப்போதுள்ள வாத்திய கோஷமும்

வட்டம் - பெருமான் எழுந்தருளியிருக்கும் கேடயம், தோளுக்கி னியான் வாஹனங்களின் நாலு ஓரங்களுக்குப் பெயர், வண்டலூர்ச் சப்பரம். சித்திரை விருப்பன் எட்டாம் திருநாள் காலையில் வெள்ளிக்குதிரை வாகனம் வருகிற சப்பரம், புஷ்ப விமானம் போல அலங்கரித்திருக்கும்.

விண்ணப்ஞ்செய்வார் - பாட்டுப்பாடும் அரையர்

ஆண்டாள் - வாகனத்தில் பெருமாளை எழுந்தருளச் செய்கை யில் வஸ்திரங்களை ஒன்றோடொன்று சேர்ப்பதற்காக உபயோ கிக்கும் குண்டூசி

இரை (எறி)யாயிரக்கொண்டான் - கொட்டாரத்திலுள்ள நெற்க ளஞ்சியம் (இப்பொழுது வழக்கில் இல்லை)

கொந்தக்கட்டி - பச்சைக்கற்பூர உள்காப்பு உலர்ந்தது.

கொந்த உருண்டை - பெருமாள் தாம்பூலத்தோடு உபயோகிக் கும் பச்சைக்கற்பூர உருண்டை

கபாய் - பெருமாளுடைய சட்டை. குப்பாயம் என்பதன் திரிபு.

காளாஞ்சி - வழியில் பெருமாளுக்கு ஸமர்ப்பிக்கும் அர்க்கிய தீர்த்தத்தை ஏந்தும் சின்னத்திருப்படிக்கப் பாத்திரம்.

கலிக்கத்துராய் - ஒருவகைத் திருவாபரணம்.

கர்ப்பந்தம் - வெண்கலத்தில் செய்த சிறு பந்தம்

கிஸ்திகபால் - கௌரவ புருஷர்களின் வரவேற்புக்காக அடிக்கும் மேளதாளம்

சாதரா - ஜரிகை துப்பட்டா

சுந்தரபாண்டியம் - அர்க்கிய தீர்த்தம் சேர்க்கும் திருப்படிகத்துக்கு திருவாராதனத்தில் சொல்லும் பெயர் திருவாராதனத்தில் கண்ணாடி காட்டுவதற்காக உபயோகிக்கும் வெண்கலத் தட்டுக்கும் பெயர். ராஜாவினுடைய பெயர் சாசுவதமாக விளங்கும்படி பெருமாளுடைய பாத்திரத்துக்கு ஏற்பட்டது.

சுரஸம் - பெருமாளுக்குப்பூசும் குங்குமக்குழம்பு

செல்வர் - சின்னப்பெருமாள், பலிஸ்நாநம், சயநம் முதலியவற்றிற்காக ஏற்பட்ட மூர்த்திகள் கர்ப்பகிருஹ ஸிம்ஹாஸநத்தி லுள்ள வெள்ளிப்பெருமாள்.

சேமம் - சர்க்கரைப் பொங்கல் சங்கராந்தியன்று ஏற்பட்ட தளிகை

சேர்வைகாரன் - மேளகாரன்

சேனைக்கால் - மங்களாலத்திக் குடம் வைக்கும் பீடம்.

சோணாயிரம் கொண்டான் - திருமஞ்சன காலத்தில் உபயோகிக்கும் ஸஹஸ்ரதாரை (சல்லடைத்தட்டு)

டவர் - வாஹநத்தில் பெருமாளுக்குச் சாத்தும் பாவாடை

திருவடி சாதம் - நைவேத்தியத்திலொரு பாகத்துக்குப் பெயர்.

*இன்னும் பல, விரிவஞ்சி எழுதப்படவில்லை.*

# III. அரையர் சேவை

மாடமாளிகை சூழ்திருவீதியும் மன்னுசேர் திருவிக்கிரமன் வீதியும்
ஆடல் மாறன களங்கன்வீதியும் ஆவிநாடனமர்ந்துறைவீதியும்
கூடல் வாழ்குல சேகரன் வீதியும் குலவிராசமகேந்திரன் வீதியும்
தேடரிய தர்ம வர்மாவின் வீதியும் தென்னரங்கர் திருவாவரணமே

என்றபடி பூர்வர்கள் திருவரங்கத்திருப்பதியை அனுபவித்தனர். அத்தகைய வீதிகளில் வளைய வந்து குறிசொல்லிய குறத்திநாடக மாக அரையர்சேவை சிறப்புப் பெறுகிறது.

## அரையர் சேவை

தென்னாட்டுக் கோயில்களில்தான் பல நூற்றாண்டுகளாக முத்தமிழும் வளர்க்கப்பட்டு வருகிறது. ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக நடைபெற்று வரும் அரையர் சேவை இசைத்தமிழையும் நாடகத்தமிழையும் ஒருங்கே வளர்த்து வருகிறது. பண்டைக்காலத் தில் ஆழ்வார்களால் பாடல் பெற்ற வைணவத் திருப்பதிகளில் எல்லாம் நடைபெற்று வந்த அரையர் சேவை இப்பொழுது தமிழ்நாட்டில் திருவரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி என்ற மூன்று இடங்களில் மட்டும் நடைபெறுகிறது. உற்சவரின் (வீதியார வருவார்) திருமுன்பு மட்டும் இக்கலை நடைபெறும். அரையர்கள் ஆழ்வார்களின் பிரதிநிதிகளாக இருந்து செயல்படுவ தால் ஆழ்வார் பாசுரங்களுக்கு அரசராக ஆகின்றனர். எனவே இவர்களுக்குத்தான் தனியனைச் சொல்லாமலே நேரடியாகப்பாசு ரம்பாடும் உரிமை கொடுக்கப்பட்டுள்ளது. திருவரங்கப் பெருமான் தான் முதன் முதலாக அரையர் என்று பட்டத்தை அளித்தான் என்கிறது கோயிலொழுகு.

அரையர் சேவை என்ற முத்தமிழ்க்கலைக் கொண்டாட்டம்; ஆழ்வார் பாசுரத்தைப் பண்ணுடன் பாடுதல், பாசுரத்திற்கு அபிந யஞ்செய்தல், உரைகூறுதல், கொண்டாட்டம் எனப்பல பிரிவுக ளாக அரையர் சேவை அமையும். கொண்டாட்டம் என்பது இறைவனின் புகழ்பாடுதல். அவை முறையே பெருமாள் கொண் டாட்டம், நாச்சியார் கொண்டாட்டம் என இருவகைப்படும்.

அரையர் 'தம்பிரான்' என்றும் அவர் கூறும் உரை தம்பிரான்படி என்றும் அழைக்கப்படும்.

இக்கலையின் ஆதிகர்த்தா திருமங்கையாழ்வார் என்று கருதப் படுகிறது. ஒரு திருக்கார்த்திகைத் திருவிழாவின்போது திருமங்கை யாழ்வார் திருநெடுந்தாண்டகம் பாசுரங்களைப் பண்ணுடன் பாடி அபிநயித்தார். பின்னர் அவர் பெருமாளிடம் மார்கழி மாதம் திருஅத்யயன உத்சவம் நடக்கும்பொழுது திருவாய் மொழியை நம் வேதங்களுடன் சமமாகக்கருதி கேட்டருள வேண்டும் என்று வேண்டி அவ்வாறு வரமும் பெற்றார். அது முதல் ஆழ்வார் திருநகரியிலிருந்து நம்மாழ்வார் விக்ரகத்தை மார்கழிமாதம் ஸ்ரீரங் கம் கோயிலுக்குக் கொண்டு வந்து நம்மாழ்வாரின் பிரதிநிதியாக மதுரகவியார் திருவாய்மொழியைப் பண்ணுடன், பாடி அபிநயித் தார். அதனால் அவரை திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்வார்' என்றழைத்தனர்.

வரலாற்றின் அடிப்படையில் இக்கலையின் தோற்ற காலம் கி.பி. 8-ம் நூற்றாண்டாகும். நாதமுனிகளின் மருமக்கள் இருவர். கிழையகத்தாழ்வான், மேலையகத்தாழ்வான் என்பவர்கள் நாத முனி கட்டளைப்படி இவ்வரிய சேவையைத் தோற்றுவித்தார்கள். திருவாய் மொழித்திருநாளில் பகல் பத்து நாட்களில், திருப்பல் லாண்டு, திருப்பாவை பெரியாழ்வார் திருமொழி, பெருமாள் திருமொழி தி[illegible]மாலை, கண்ணிநுட் பெரியதிருமொழி, திருநெடுந் தாண்டகம் ஆகியவை பாடி அபிநயிக்கப்படும். இராப்பத்து திரு நாட்களில் திருவாய்மொழி பாடி அபிநயிக்கப்படும். நாதமுனி மருமக்களான மேலையகத்தாழ்வான கீழையகத்தாழ்வான் இருவ ருக்கும் எம்பெருமான் அரையர் என்ற பட்டமும் தலையில் அணியும் குல்லாவும் அளித்தார். இக்குல்லாய் கூம்பு வடிவில் இருக்கும். முகப்பில் தென்கலைத் திருமண் பதிக்கப்பட்டிருக்கும். தொங்கும் பரிவட்டமாகப் பட்டும் பருத்தியும் கலந்து காணப்ப டும். பெருமாள் சூடிக்களைந்த மாலைகளையும் அளித்தனர். இவற்றையெல்லாம் அரையர்கள் தவிர ஏனையோர் அணிய உரி மையில்லை. அத்துடன் தம்முடைய மரபு வழியின் தோற்றத்தை நாதமுனிகளின் மருமக்களைக் கொண்டே கூறும் மரபும் உள்ளது.

ஆழ்வார் திருநகரி அரையர் இராப்பத்தில் பயன்படுத்தும் தாளம் அளவில் பெரியது. அதனை நாதமுனி என்றே அழைக்கின்ற னர். இவ்வாறு தாளம் வகுத்த வள்ளலை அரையர் நினைவு கூர்கிறார்.

## நிகழ்ச்சி நடைபெறும்முறை

உற்சவரின் முன்மட்டுமே இந்நிகழ்ச்சி, மார்கழிமாத பகல் பத்து, இராப்பத்து உற்சவங்களில் ஸ்ரீரங்கம், ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய மூன்று ஸ்தலங்களில் மட்டும் நடைபெறுகிறது. மைசூரில் உள்ள மேல் கோட்டையில் அரையர் இசையுடன் பாடுவது மட்டும் உண்டு. அபிநயம் இல்லை. சேவைக்காக மேலே சொன்னவைகளைத்தவிர வேறு தனியான ஒப்பனை, உடை எதையும் அரையர் அணிவதில்லை. இறைவன் சூடிக்களைந்த பரிவட்டம் ஒன்றை அணிந்துகொண்டு இரு தாளங்களைத் தட்டி ஒலியெழுப்பி அரையர் சேவையைத் தொடங்குகிறார். தாளத்தை ஆழ்வார் என்றே அழைப்பர். அதைத்தவிர வேறு இசைக்கருவிகளை பயன்படுத்துவதில்லை. பள்ளுப்பாட்டுப் பாடும்போது மட்டும் அரையர் தாளங்களுக்குப்பதிலாக மிருதங்கத்தைப் பயன்படுத்துகிறார். அரையர் முதலில் கொண்டாட்டம் சொல்லியபின் அன்றைக்குரிய ஆழ்வார் பாசுரத்தைப் பண்ணுடனும், தாளத்துடனும் இசைக்கிறார். பாடி முடிந்தவுடன் தாளத்தை இடுப்பில் சொருகிக்கொண்டு அபிநயத்தின் மூலம் பாசுரத்தின் முழு விளக்கமும் வெளிப்படுத்துகிறார். கைகளால் முத்திரை காட்டுவது, கால்களால் ஜதிசெய்வது. முகபாவம், அங்க அசைவு ஆகியவற்றால் முழுமையான அபிநயம் வெளிப்படுகிறது. முன்னும் பின்னும் பக்கவாட்டிலும் தாள அறுதியிட்டு அரையர் அபிநயிக்கிறார். இக்கலை திருஷ்டி காவியம் (கண்களால் பார்த்து அனுபவிக்கும் பேரிலக்கியம்) என்பதற்கேற்ப, நாட்டிய சாத்திரம் கூறும் அபிநயம் முடிந்ததும் அப்பாசுரத்திற்குரிய உரையை (வியாக்யானம்) கூறுகிறார் 'உரைமுழுவதும் மனப்பாடமாக இருப்பதால் உரையை ஏற்றி இறக்கி பாவத்துடன் கூறுகிறார். உரை கூறி முடித்ததும் மீண்டும் ஒருமுறை தாளங்களைத் தட்டிக்கொண்டு கொண்டாட்டம் கூறுவார்.

**இந்தச்சேவைக்கென அரையர் எடுத்துக்கொள்ளும் பாசுரங்கள் வருமாறு. பகல்பத்திற்குரியன.** திருப்பல்லாண்டு 42ம் அடியோமோடு, பெரியாழ் திருமொழி, சென்னியோங்கு (5:4:1), ஆற்றிலிருந்து, 10.1, தன் நேர் ஆயிரம் 3.1. ஆகிய பெரியாழ்வார் பாசுரங்கள், திருப்பாவை, மார்கழித்திங்கள் மட்டும், நாச்சியார் திருமொழி கண்ணன் என்னும் (13.1) பெருமாள் திருமொழி ஊனேறுசெல்வம் (4:1) இருள் இரிய (1.1) என்பவை. தொண்டரடிப்பொடி (காவலில்) மதுர கவியின் கண்ணினுட் சிறுதாம்பு,

பெரிய திருமொழி (வாடினேன் வாடி 1-1-1), பண்டை நான்மறை (5.7.1, தெள்ளியீர் (8.2.1) என்ற அகப்பொருள் பாசுரம், அடுத்து அக்கும் புலியின் (9.6.1) முந்துறஉரைக்கேன் (9.8.1) திருநெடுந் தாண்டகம் (1-10) மின்னுருவாய் தொடங்கி பட்டுடுக்கும் முடிய, இறுதியாக இரக்கம் இன்றி (10.2.1) ஆகியவை பகல் பத்தில் இடம் பெறுகின்றன.

## இராப்பத்துக்குரியன

திருவாய்மொழியில் (1.1.1), (2.10.1), ஒழிவில் காலம் (3.3.1) ஒன்றும் தேவும் (4.10.1) எங்கனேயோ என்ற அகப்பொருள் பாசுரம் (5.5.1) கங்குலும் பகலும் என்ற அகப்பொருள் பாசுரம் (7:2:1) நெடுமாற்கடிமை (8.10.1) மாலைநண்ணி (9.10.1) தாள தாமரை (10.1.1) முனியேநான் முகனே (10.10.1) ஆழ்வார் மோட்சம் அன்று சாற்றுமுறை ஆகியன இராப்பத்துக்குரியன.

திருமங்கை ஆழ்வாரின் வாடினேன் வாடி வேடுபறி உற்சவமும், பத்தாம் நாள் பிரளயக்கலகமும் (பெருமாள்நாச்சியார் ஊடல்) நடைபெறும். அப்போது மின்னொத்த நுண்ணிடை (பெருமாள் திரு 6.3) (பெரியதிரு) காதில் கடிப்பு, துவரை உடுத்து (10.8.12) பாசுரங்களும் நம்மாழ்வார் திருவாய்மொழி மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார் (6.2.1) என்ற பாசுரமும் சேவிக்கப் படும்.

## அரையரின் இசை ஆடல்

அரையர்கள் பாடும் பண் மிகப்பழமையானது. நாதமுனி காலத்தது. இந்த இசையுடன் கூடிய பாடல் இன்று, திருவரங்கம் ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி, மைசூரில் மேல்கோட்டை என்ற இடங்களில்தான் உள்ளது. 'வாடினேன் வாடி' என்ற பாசுரத் திற்கு ஆழ்வார் திருநகரி அரையர் பாடுவது வேதபாராயணம் பண்ணுவது போன்ற இசையுடன் உள்ளது. இசையில் இராக வேறுபாடுகளைக் காட்டுவது போல, அபிநய வேறுபாடுகளையும் அரையர் காட்டுகிறார். வாடினேன் வாடி என்ற பாசுரத்திற்கு தாமரை மலர் ஒன்று கூம்புவது போலக் கைகளால் அபிநயித்துக் காட்டுகிறார். மனவாட்டத்தைக் காட்டுவதற்கு அபிநயத்தைப் புறநிலையில் அன்றி அகநிலையில் அரையர் காட்டுவது அரையர் சேவையின் ஆடற்சிறப்பு. அதற்கு ஏற்றாற்போல அப்பாசுர இசை யிலும் ராகவேறுபாட்டை காட்டுகிறார். இவ்வாறு நுட்பமாக

ஆழ்வார் பாசுர உட்கருத்துக்களை இசை, ஆடல் வழி, அரையர் வெளிப்படுத்துகிறார். இசையில் காணப்படும் நிரவல் அரையர் ஒரே அடியை, தொடரை பல்வேறு வகையில் அபிநபிப்பார் என்பதைக் காட்டுகிறது.

### நாடகக்கூறு

அரையர் மண்டபத்தின் நடுவில் நின்று சேவையை நடத்துகி றார். அவருக்கு எதிரில் உற்சவ மூர்த்தி எழுந்தருளியிருக்கிறார். மற்ற மூன்று பக்கங்களிலும் பார்வையாளர்கள். பார்வையாளர்கள் ஏற்றத்தாழ்வின்றி வேறுபாடின்றிச் சரிசமமாக அமர்ந்துள்ளனர். இக்காட்சி பண்டைத்தமிழரின் பொதுவியல் கருத்தரங்க இயல்பை விளக்குகிறது. அரையர் முத்துக்குறி நிகழ்ச்சிக்காகப் பட்டுடுத்தி வருகின்றார். முத்துக்குறியின்போது அரையர் ஒருவரே தாயாகவும் மகளாகவும், கட்டுவிச்சியாகவும் மாறி மாறி அபிநயிக்கிறார். மகளாக நின்று கூடல் இழைக்கிறார். தாயாக இருந்து மகளின் நிலை கண்டு உருகுகிறார். கட்டுவிச்சியாக மாறி வழிகூறுகிறார். மகள் நிலைபற்றித்தாயும் கட்டுவிச்சியும் பேசும் உரையாடலில் அரையர் தம்குரலில் ஏற்றம் இறக்கம் காட்டிப்பேசுகிறார். மக ளைப் பெருமாளின் திருமுன் இட்டுத்தாய், மகள் நிலையை எடுத்துப்புலம்பும் இடத்தில் அரையர் தாயாக இருந்து தம் கையில் உள்ள பட்டுத்துண்டை பெண்ணாக பாவித்து அதைக்காட்டிப் காட்டிப் பேசுகிறார். பார்வையாளர் கலையுடன் ஒன்றுபட்டு அப்பட்டுத்துண்டைப் பெண்ணாக ஏற்கின்றனர்.

அரையரின் கலை உருவாக்கத்தில் (Production of Art) காணப்ப டும் சிக்கனம் இது. இதே போன்று ஒரு தட்டில் அரிசியைப் பரப்பி அரையர் வைத்திருக்கிறார். மகள் (தலைவி) கூடல் இழைக்கும் பொழுது அது தவள மண்ணாகப் பாவிக்கப்படுகிறது. குறத்தி குறி சொல்லும்பொழுது அது நெல்லாகப் பாவிக்கப்படுகிறது. அரையர் பாவிக்கும் பொருளாகவே பார்வையாளர்கள் ஏற்றுக்கொள்வது நாட்டுப்புறக்கலை மரபின் கூறாகும்.

ஸ்ரீரங்கத்தில் மட்டும் பகல்பத்தில் 4, 7, 8, 10 நாட்கள் திருவிழாக்களில் முறையே கம்சவதை, வாமனன் கதை, பாற்கடல் கடைந்த நிகழ்ச்சி இராவண வதை முதலியன அரையரால் நாடகங் களாக நடித்துக் காட்டப்படுகின்றன. ஆளவந்தாரின் குமாரர் திருவ ரங்கப்பெருமாள் அரையர் இளமையிலேயே கூத்துக்கலையில் தேர்ச்சியுற்று அவதாரச் செய்திகளை நாடகமாக வேடம் புனைந்து நடித்தார் என்று அறிகிறோம்.

அரையர் பற்றிக் கல்வெட்டுக்கள் கூறும் வரலாற்றுச் செய்திக ளாவன. முதலாம் குலோத்துங்க சோழன் 1070, 1120 ஆட்சியாண் டைச் சேர்ந்த கல்வெட்டு திருவரங்கம் கோயிலில் திருவாய் மொழிவிண்ணப்பஞ் செய்வதற்காக 50 கழஞ்சு பொன் அளிக்கப் பட்டதாகவும், அந்த அறக்கொடை, கோட்டூர் சேனாபதி வீரசோ ழன் என்பவனால் அளிக்கப்பட்டதாகவும் கூறுகிறது. இதில் திரு வாய்மொழிப்பாசுரங்கள் காலையில் திருப்பள்ளி எழுச்சிப்பாடல்க ளாக பெருமாளுக்குப் பாடப்பட்டன என்று கூறப்பட்டுள்ளது. இந்த அறக்கொடை பாசுரங்களை இறைவன் திருமுன் விண்ணப் பஞ்செய்யும் அரையர்களிடம் கொடுக்கப்பட்டது என்றறிகிறோம். காஞ்சிவரதராஜர் கோவிலில் விண்ணப்பஞ்செய்வோர் 22 பேர் (அரையர்) இருந்தனர் என்று 1242-ம் ஆண்டைச்சேர்ந்த அக்கோயில் கல்வெட்டு கூறுகிறது என்பர். இவற்றால் அக்காலத்தில் அரையர்க ளுக்கு மன்னர் ஆதரவு அளித்த செய்தியை அறியமுடிகிறது.

## அரையர் பரம்பரை

இன்று அரையர் பரம்பரை ஆழ்வார் திருநகரியில் ஒன்றும், ஸ்ரீவில்லிபுத்தூரில் இரண்டும், திருவரங்கத்தில் இரண்டும் உள் ளன. இரண்டு அரையர் குடும்பங்களும் திரு அத்யயன காலத்தில் தம்முள் முறை வைத்துப் பங்கேற்பர். மேல்கோட்டையிலும் ஒரு அரையர் குடும்பம் உள்ளது.

சேவை நிகழ்த்தும்பொழுது அரையர் இருவர் (தந்தையும் மகனும்) பாடுகின்றனர். ஒருவர் மட்டுமே அபிநயிக்கிறார். உரை கூறுவதையும் ஒருவரே செய்ய அடுத்தவர் அந்த உரையின் ஏட்டுச்சு டியோடு அந்த உரையை ஒத்துப்பார்க்கிறார். இது நாடக மேடையை நினைவுபடுத்தும். உரை கூறும் அரையர் கதாகாலட்சே பமாக உரையை அழகுற எடுத்துரைக்கிறார். ஆழ்வார் திருநகரி அரையர் விழாக்காலங்களில் மட்டுமன்றி நாள் வழிபாட்டிலும் திவ்யப்பிரபந்தப் பாசுரங்களைப் பாடுகிறார். இக்கலையின் நோக் கமே, எளிய மக்களும் உணருமாறு ஆழ்வார் பாசுரங்களைப் பண்ணும் கூத்துமாக வெளியிடுவதாகும். சமய தத்துவ உண்மைக ளைப் பார்வையாளரின் கண் செவிப்புலன்களுக்கு விருந்தாக ஆக்குவது அரையர் சேவையின் நோக்கமாகும். இராமானுசர், எம்பார் போன்ற வைணவ ஆசாரியப் பெருமக்கள் பார்வையாளர்க ளாக இருந்து இக்கலையின் வளர்ச்சிக்கு உதவிய பாங்கை உரைக ளின் வழி அறிகிறோம். திருக்கோயில்களில் இறைவனின் முன்மட்

டுமே நிகழ்த்தப்படுவதாலும், மரபுவழியாக வருவதாலும் பழமை குன்றாமல் போற்றிப் பாதுகாக்கப்பட்டு இன்றுவரை வளர்ந்து வந்துள்ளது.

## முத்துக்குறி

அரையர் சேவையின் ஒருநாள் நிகழ்ச்சி முத்துக்குறி ஆகும். இந்நிகழ்ச்சி நடைபெறும் நாளில் மட்டும் பாசுரத்திற்கு மட்டு மன்றி உரைப்பகுதிகளில் சிலவற்றிற்கும் இசையும் அபிநயமும் உண்டு. எனவே தான் அரையரிடம் உள்ள தம்பிரான்படி ஏட்டுச் சவடியில் அபிநய வாக்யம் என்ற குறிப்பு உள்ளது. அரையர் தன்னைக் குறத்தியாகக் கட்டுவிச்சியாகக் கொண்டு குறிபார்த்து தலைவிக்கு நோய் செய்தவன் யார் என்பதையும் அந்நோய் நீக்க மருந்து எது என்பதையும் கூறுகிறார். முத்துக்களைக் கொண்டு குறிபார்த்துச் சொல்வதால் இந்நிக்ச்சிக்கு முத்துக்குறி என்று பெயர் வந்தது. இந்நிகழ்ச்சி பகல் பத்து 9-ம்நாளன்று ஸ்ரீரங்கத்திலும், இறுதிநாளன்று ஆழ்வார் திரு நகரியிலும் நடைபெறுகிறது. ஸ்ரீவில் லிபுத்தூரில் மட்டும் ஆண்டில் மூன்று முறை; அதாவது, ஆடிப்பூரத் திருநாளில் பத்தாம் நாளிலும், மார்கழி எண்ணைக் காப்புத்திருநா ளில் ஒன்பதாம் திருநாளிலும், பங்குனித்திருக்கல்யாணத் திருவிழா வில் பத்தாம் நாளிலும் முத்துக்குறி நடைபெறுகிறது. பகல்பத்தின் இறுதிநாளில் திருநெடுந்தாண்டகம் சேவிக்கப்பட்டு அமிர்த மத னம் அபிநயிக்கப்படுகிறது.

## முத்துக்குறி சேவைக்குரிய பாசுரங்கள்

திருநெடுந்தாண்டகத்திலுள்ள ‘மின்னுருவாய்’ என்பது முதல் ‘பட்டுடுக்கும்’ என்பது ஈறாக உள்ள பதினொரு பாசுரங்களாகும். இதில் மின்னுருவாய் என்பது முதல் (திருவடியிற் கருநெடுமால்) பெருவடிவில் கடல் அமுதம் கொண்ட காலம் முடிய வரும்பகுதி அமிர்தமதனம் என்று சொல்லப்படுகிறது. பாற்கடல் கடைந்து அமுதம் எடுக்கப்பெற்ற நிகழ்ச்சி இடம் பெறுவதால் அமிர்தமத னம் என்று பொருள் பெற்றது. பரத முனிவரின் நாட்டிய சாத்திரத்தி லும் இந்த நிகழ்ச்சி ‘அமிர்தமதனம்’ என்றே வெளியிடப்பட்டுள் ளது என்பது நோக்கத்தக்கது. அடுத்து ‘இந்திரற்கும்’ முதல் (4-ம் பாசுரம்) பொன்னானாய் வரையுள்ள பத்தாம் பாசுரம் முடிய இரண்டாம் பகுதியாகும். மூன்றாம் பகுதியாக ‘பட்டு உடுக்கும்’ என்ற பாசுரமே முத்துக்குறி என்றழைக்கப்படுகிறது. இது அகப்

*பொருள் அமைப்பில் 'பிரேமத்தில் பெண் பேச்சாக' முதலில் தாய் கூற்றாகவும், இறுதியில் கட்டுவச்சி கூற்றாகவும் அமைந்துள்ளது.*

> பட்டுடுக்கும் அயர்த்திரங்கும் பாவைபேணாள்
> பணிநெடுங்கண்நீர் ததும்பப் பள்ளிகொள்ளாள்
> எட்டுணைப்போதென் குடங்காள் இருக்க இல்லாள்
> எம்பெருமான் திருவரங்கமெங்கே? என்னும்
> மட்டுவிக்கி மணிவண்டு முரலுங்கூந்தல்
> மடமானை இது செய்தார் தம்மை 'மெய்யே
> கட்டுவிச்சி சொல்' என்னச் சொன்னாள் 'நங்காய்
> கடல் வண்ணரிது செய்தார் காப்பாராரே'

*என்பது பாசுரம். இதில் பட்டுடுக்கும் முதல் கட்டுவிச்சி சொல் என்பது முடிய தாய்க்கூற்று. இதில் தலைவன் ஒருவன் மையலில் கட்டுண்டு அலமந்து கிடக்கும் தன் மகளின் நிலையைத் தாய் கூறுகிறாள். மையல் செய்தவன் யார் என்பதைக் கட்டுப்படுத்திக் கூறுவாய் என்று தாய் கட்டுவிச்சியை வேண்டுகிறாள். கடல் வண்ணனாகிய பரம பத நாதன்தான் உன் மகளுக்கு நோய் செய்தவன் என்று கட்டுப்படுத்தி உணர்ந்த கட்டுவச்சி கூறுகிறாள்.*

*தாய், தலைவி, கட்டுவிச்சி என்ற மூன்று பாத்திரங்களாகவும் நடிக்கும் அரையர், தலைவிக்கு நோய் செய்தவன் யார் என்று அறிவதற்கு குறத்தி முத்துக்களைக் கொண்டு குறி பார்ப்பதால் இந்நிகழ்ச்சி முத்துக்குறி என்று பெயர் பெற்றது. இப்பாசுரத்தில் வரும் தலைவி நிலையை எடுத்துரைக்கும் தாயாகவும், தலைவியா கவும் குறிபார்த்துக் கூறும் கட்டுவிச்சியாகவும் நடிக்கும் அரையர், மகளின் நிலையைத் தாய் எடுத்துரைக்கும் இடத்திலும் மகளைப் பெருமாளின் திருமுன் இட்டுப் புலம்பும் இடத்திலும் தம் கையி லுள்ள பட்டுத்துண்டில் சிறுமுடிச்சிட்டு அதைத்தம் பெண்ணாகப் (தலைவி) பாவித்து ஒரு கையில் பிடித்து, மறுகையால் அதைக்காட் டிக் காட்டிப் புலம்புகிறார். இப்பாசுரத்திற்கு உருவான தம்பிரான் படி உரையில் விரிவான செய்திகள் உள்ளன. ஏனைய நாட்களை விடவும் முத்துக்குறி நிகழ்ச்சி நடைபெறும் காலம் நீண்டது. திருவரங்கத்திலும், ஆழ்வார் திருநகரியிலும் அமிர்தமதனமும் முத்துக்குறியும் சேர்ந்து அத்யயன விழாவில் (பகல் பத்து) நடை பெறும்.*

*ஸ்ரீவில்லிபுத்தூரில் அத்யயன விழாவில் அமிர்தமதனம் மட் டும் இடம் பெறும். முத்துக்குறி ஆண்டில் மூன்றுமுறை நிகழும்.*

பாசுரத்தில் பட்டுடுக்கும் என்று வருவதால் அரையருக்குத் திருக் கோயிலில் பட்டு எடுத்துத் தருகின்றனர். அவர் அதை அணிந்து சேவை செய்கிறார். பார்வையாளர்களும் பட்டுடுத்தி பரகால நாயகரின் பாசுரத்தில் உள்ள உணர்வுடன் தங்களை ஒத்திசைய வைத்துப்பார்த்து ஆழ்வார் பெற்ற அனுபவத்தைத் தாங்களும் அரையர்வழி பெறமுனையும் காட்சியை ஆழ்வார் திருநகரியில் தான் காணமுடிகிறது.

பகல்பத்து மண்டபத்தில் இறைவனையும் (உற்சவமூர்த்தி) ஆழ்வார் ஆச்சாரியர்களையும் எழுந்தருளப்பண்ணுகிறார்கள். இறைவனை நோக்கி அரையர் நின்று பாடி அபிநயிக்கிறார். பகல்பத்து மண்டபம் நீண்டதாக இருக்க ஒரு கோடியில் இறைவ னும் மறுகோடியில் அரையரும் இருக்கின்றனர். கட்டுவிச்சி கட்டுப்படுத்தி மருந்து கூறியபின், மகளை இறைவன்முன் இட்டுப் புலம்பும் இடத்தில் அரையர் இவ்வாறு நீண்டதொலைவில் ஓடி அபிநயிக்கிறார், ஆழ்வார் திருநகரியில். திருவரங்கத்தில் அரையர் நின்ற இடத்தில் இருந்தே அபிநயிக்கிறுர்.

## முடிவுரை

அரையரின் முத்துக்குறியில் கதைப்போக்கும், நிகழ்ச்சி இயை பும், காட்சி மாற்றமும், உரையாடல் இயைபும் மாந்தரது கூற்றுவ ழியே காட்டப்படுகின்றன. 'மன்னு மருந்திவை கூறித் திரியும் மலைக்குறத்தி வந்து போ, வந்து போ' என்ன, கட்டுவிச்சியும் 'என்னவளே என்னவளே, விண்ணாரக்காரி, மினுக்கி என்னை என் கொண்டழைத்தாய்' என்னக் கட்டுவிச்சியும், மின்னிடையார் அழைத்ததனைச் சென்றறிந்து மீள்வேன் நான், ஆவார் என்னை அழைத்தவர்' என்று உரைப்பகுதி இக்கூறுகளை நன்கு புலப்படுத் தும். நிகழ்ச்சி நிகழும் சூழல், மக்களின் பழக்கவழக்கம், பண் பாட்டு மரபுகள், நம்பிக்கைகள் ஆகியவற்றை மாந்தர்தம் மொழி யிலே வெளியிடும் நாட்டுப்புற நாடக மரபைக் காண்கிறோம்.

கட்டுவிச்சி ஞானாசிரியரை உருவகப்படுத்தி நிற்கிறாள். உயி ராகிய தலைவி பரமபத நாதனான தலைவனைக் கூடுவதற்கு ஞானாசிரியரான கட்டுவிச்சி வழி கூறுகிறாள். இத்தகைய உயர்ந்த சித்தாந்தக் கருத்துக்களைக் காணும் நிலையில் அரையர் குறம், குறவஞ்சி இவற்றின் முன்னோடியாகத் தம்பிரான் படி வழியாகப் படைத்துத்தந்துள்ளார்.

செவ்வியல் நடனமான பரத நாட்டியத்தில் குறத்தி நடனம் கலந்தது. குறவஞ்சி இலக்கியத்தில் சிங்கன் சிங்கி உரையாடல், குறத்தியின் வேடப்புனைவு, அபிநயம் இவற்றின் வழியாகச் சிற்றின்பத் தூண்டலாக குறத்தி ஆடல் கொச்சைப்படுத்தப்பட்டிருந் ததை மாற்றி அரையரின் நிலையில் பேரின்பத்தை மையமிட்டதா கக் குறத்தி ஆடல் அமைந்து, கண்ணினும் செவியினும் திண்ணி தின் உணரும் கலையாக விளங்குகிறது.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஆச்சார்யப் பிரபாவம்

அநாதி வைதிக மதமான ஸ்ரீவைஷ்ணவ தர்ஸனத்தை (ஆச்சார்யபீடம்) எம்பெருமான் மயர்வற மதிநலம் அருளியபடிக் கண்டவர்கள் ஆழ்வார்கள். அவ்வாழ்வார்களாலே மதிநலம் அருளப்பெற்று இந்தத் தர்ஸனத்தை அசைக்க ஒண்ணாதபடி நிலைநாட்டியவர்கள் ஆச்சார்யர்கள். ஆழ்வார்கள் காலத்தால் மிக முற்பட்டவர்களாதலால் அவர்களது வைபவத்தை விளக்கும் வரலாற்று நூல்கள் மிகுதியாக இல்லை. கி.பி. 9-ம் நூற்றாண்டில் அவதரித்த நாதமுனிகள் தொடங்கி கி.பி. 14-ம் நூற்றாண்டில் அவதரித்த மணவாள மாமுனிகள் ஈறாகப் பலப்பல ஆச்சார்யர்கள் அவதரித்து இந்தத் தர்சனத்தை நிலைநாட்டிப் போந்தனர். இத்தகைய பெருமை நம் நாட்டில் நிலவிவரும் வேறு எந்தத் தர்ஸனத்திற்கும் கிடையாது.

சைவ சமயத்தில் பன்னிரு திருமறைகள், சிவஞானபோதம் சிவஞான சித்தி போன்ற பல தத்துவநூல்கள் இருந்த போதிலும் இவ்வாச்சார்யர்களைப் போல் நூற்றுக்கணக்கான கிரந்தங்களை அருளிச்செய்தவர் இலர். அவைகளில் வரலாற்று நூல்களாகவே அமைந்தவை சில. ஆச்சாரியர்களைப்பற்றிய வரலாற்றுக்குறிப்புகளைக் கொண்டவை நூற்றுக்கணக்கில் உள்ளன. இவையனைத்தையும் தொகுத்து நாதமுனிகள் தொடக்கமாக, மணவாள மாமுனிகள் ஈறாக உள்ள எல்லா ஆச்சார்யர்களுடைய வைபவங்களையும் ஒரு நூலாக வெளியிட வேண்டும் என்ற அடியேனுடைய விருப்பமே இந்நூலாக அமைகிறது. மிகக்கடினமாக உழைத்துத் தொகுத்தாலும், இத்தகைய ஒரு நூலைத் தொகுத்து வெளியிடப் பல வருடங்களாகும். இந்த அரிய முயற்சியை 'ஆசார்ய வைபவ மஞ்சரி (பாகம் 1) என்ற ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் தொகுத்த நூலின் துணை கொண்டும், வேறு சில சமயக்கருத்துக்கள் கொண்ட பத்திரிகைத் துணுக்குகள் மூலமும், ஆறாயிரப்படி குருபரம், பராபிரபாவம் என்ற நூல் கொண்டும் தொகுத்து ஒரு நூலாகச் சமர்ப்பிக்க முன் வந்துள்ளேன். வைணவ சீலர்கள் எழுதியவளை வைத்து நூலை மதிப்பிடாமல் எழுதப்பட்ட பொருளை நினைத்துக் குறைகளை மன்னித்து நிறைவான பகுதிகள் இருப்பின் ஆதரித்து ஊக்குவிக்குமாறு பணிவுடன் வேண்டிக்கொள்கிறேன்.

இந்நூல் நாதமுனிகள் தொடங்கி, ஆச்சார்ய ரத்னஹாரத்தின் நடுநாயக ரத்தினமாய்; தர்ஸன ஸ்தாபகராய் விளங்கும் எம்பெருமானார் (இராமானுஜர்) உட்பட உள்ள ஆச்சார்யார்களின் வைபவங்

கள் அடங்கிய நூலாக வெளிவருகின்றது. நாதமுனிகள் அருளிய நூல்களாக நியாயதத்வா, யோகரஹஸ்யா, புருஷ நிர்ணயா என்ற மூன்று எனச் சொல்லப்படுகின்றது. ஆனால் இப்பொழுது எதுவும் கிடைப்பதில்லை. ஆளவந்தார் அருளிய நூல்களில் ஸித்தித்ரயமாகிய மூன்று நூல்களும், கீதார்த்த ஸங்க்ரஹம் ஆகமப்பிராமண்யம், ஸ்தோத்ரரத்னம், சதுர்ஸ்லோகி ஆகிய ஏழு கிரந்தங்களும் இப்போதும் கிடைக்கின்றன. மஹாபுருஷ நிர்ணயமாகிற எட்டாவது நூல் கிடைக்கவில்லை. தர்ஸன ஸ்தாபகாண எம்பெருமானார் நவரத்னங்கள் போல அருளிய 1) ஸ்ரீ பாஷ்யம் (விரிவுரை), 2) வேதாந்த தீபம், 3) வேதாந்த ஸாரம் 4) வேதார்த்த ஸங்க்ரஹம், 5) கீதாபாஷ்யம் (6,7, & 8 மூன்று கத்யங்கள், 9) நித்யக்கிரந்தம் ஆகிய ஒன்பது கிரந்தங்களும் இப்பொழுதும் கிடைக்கின்றன. இவற்றுள் ஸ்ரீ பாஷ்யம், கீதா பாஷ்யம், வேதார்த்த ஸங்க்ரஹம் மூன்று கத்தியங்கள் ஆகிய ஆறு கிரந்தங்களுக்கும் பூர்வாச்சாரியர்களாலேயே வியாக்யானங்கள் எழுதப்பட்டுள்ளன. இவை தவிர, ராமானுஜருடைய சிஷ்யப்பிரசிஷ்யர்களாலே 14-வது நூற்றாண்டுவரை எழுதப்பட்ட பூர்வாசார்ய கிரந்தங்கள் நூற்றுக்கணக்கானவை இப்பொழுதும் உள்ளன.

பூர்வாச்சார்யர்கள் காலத்தை ஒட்டி பிரபந்நாம்ருதம், யதீந்திரப் பிரவணப்பிரபாவம், ராமானுஜார்ய திவ்ய சரிதை முதலான ஆச்சார்யர்களைப்பற்றின வரலாற்று நூல்களும் உள்ளன. அந்திமோபாய நிஷ்டை, பெரிய திருமுடியடைவு, ரஹஸ்யவிவேகம் முதலான பிற்பட்ட நூல்களில் நம் ஆச்சார்யர்களைப்பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் பல காணப்படுகின்றன. பூர்வாச்சார்யர்களால் அருளிச் செய்யப்பட்ட திவ்யப்பிரபந்த வியாக்யானங்களில் நம் ஆச்சார்யர்களைப் பற்றிய ஐதிஹ்ய நிர்வாகக் குறிப்புகள் பலப்பல உள்ளன. எம்பெருமான் முதலாக மணவாள மாமுனிகள் ஈறாக உள்ள ஆச்சார்யர்களைப்பற்றிய, முற்கூறிய பல நூல்களில் சிதறிக்கடக்கும் வரலாறுகளையும், ஐதிஹ்ய நிர்வாஹங்களையும் இந்நூலில் இயன்றவரை தொகுத்துக்கொடுக்க முயற்சித்திருக்கிறேன். ஆண்டவன் அருளும் ஆன்றோர் ஆசியும் முன்நின்று என் முயற்சியைத் திருவினையாக்கப் பிரார்த்திக்கிறேன்.

# I. ஸ்ரீமந் நாதமுனிகள்

ஆழ்வார்கள் பன்னிருவரும் அடிச்சோதிக்கு எழுந்தருளிப் பல காலம் கழிந்து விட்டபடியால், பிரந்தப்பாடல்கள் அனைத்தும் சேவிப்பாரில்லாமல் மறைந்துவிட்டன. இந்நிலையில், வீர நாராய ணபுரத்திலே (தற்பொழுது காட்டு மன்னார்கோவில்) சுவாமி மன்னனார் திருவடிகளிலே சகலவித கைங்கர்யங்களையும் செய்து கொண்டு வாழ்ந்து வருகிற ஈஸ்வர பட்டாழ்வாரும் அவரது குமாரர் ஸ்ரீ ரங்கநாதமுனிகளும் அவர் குமாரர் ஈஸ்வர முனிகளும், மன்னனாரிடம் அருளாசி பெற்று, வடக்கே பத்ரிஹாஸ்ரமத்திலி ருந்து பெருமாள் அவதரித்து விளையாடியருளின வடமதுரை, திருவாய்ப்பாடி, பிருந்தாவனம், யமுனாதீரம், கோவர்த்தனகிரி, அயோத்தி, சாளக்கிராமம் முதலான வடதிசையில் உள்ள திவ்ய தேசங்களையெல்லாம் சேவிக்க எண்ணிக் குடும்பத்தோடு புறப் பட்டுப் போய்ச் சேவித்து வருகையில், யமுனா தீரத்திலுள்ள ஸ்ரீ கோவர்த்தனபுரம் என்ற நகரின் அழகிலே ஈடுபட்டு அங்கு நித்தியவாசம் பண்ண வேண்டும் என்று தீர்மானித்து வாழ்ந்து வரும் காலத்தில் சுவாமி மன்னனார் நாதமுனிகள் கனவில் தோன்றி நம்முடைய வீரநாராயணபுரத்திற்கே வாரும் என்று கூறியதால், அங்கிருந்து புறப்பட்டு வாரணாசி, புருஷோத்தமம் (பூரி ஜகந்தாத்) சிருங்கேரி, அகோபிலமடம் வழியேத் திருவேங்கடம் வந்து, அங்கேயும் நித்யவாசம் பண்ண மன்னனார் இசையாததால், அங்கி ருந்தும் புறப்பட்டுக் காஞ்சி திருக்கோவலூர், திருவரங்கம், திருக்கு டந்தைப் பெருமான்களையும் சேவித்து மீண்டும் வீரநாராயணபுரத் துக்கே வந்து, மன்னாருக்குத் திருநந்தவனம் அமைத்தும் புஷ்ப கைங்கர்யமும் ஏனைய கைங்கர்யங்களும் செய்துகொண்டு வாழ்ந்து வருவாராயினர்.

இவ்வாறிருக்கையில் ஒரு நாள் சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் மன்னனாரைச் சேவித்து அவர் திருமுன்பு 'ஆரா அமுதே' என்று தொடங்கும் திருவாய்மொழிப் பாடலை அனுசந்திக்க அதைக் கேட்டு மகிழ்ந்த நாதமுனிகள் அவர்களிடம் உங்களுக்கு இப்பிரபந் தம் முற்றும் தெரியுமா என்று கேட்டபொழுது அவர்களும் எங்களுக்கு இப்பத்துப்பாட்டு மட்டுமே தெரியும் என்று சொல்லி விடவே, நாதமுனிகள் சடகோபன் அவதரித்துள்ள திருக்குருகூர் திருநகரிக்குச்சென்று அங்கு எழுந்தருளியுள்ள பொலிந்து நின்ற பிரான், சடகோபன், முதலானோரைச் சேவித்து நின்றார். அங் குள்ள மதுரகவியாழ்வாரது சிஷ்யரான பராங்குஸதாஸரைச்

சேவித்து அவரிடம் இவ்விடம் திருவாய்மொழி ஓதினவர்கள் உண்டா என்று கேட்க, அவரும் திருவாய் மொழியும் ஏனையப் பிரபந்தங்களும், வெகுகாலத்துக்கு முன்பே அனுசந்திப்பார் இல் லாமல் மறைந்து போயின. என்னுடைய ஆச்சாரியார் அடியே னுக்கு அருளிய 'கண்ணினுட்சிறுதாம்பு' பதிகம் மட்டுமே உள்ளது என்றார். அதை அவரிடம் கற்று, திருப்புளியாழ்வாரடியில், ஆழ் வார் திருமுன்பு பன்னீராயிரம் உரு 'கண்ணினுட் சிறுத்தாம்பு' பாசுரத்தை நியமத்தோடு அனுசந்தித்தார்.

பெரிய பெருமாள் தாயாரோடு காட்சி கொடுத்து அவருக்கு ஞானக்கண் அருளித் திவ்யப்பிரபந்தங்களையும்,, ரஹஸ்யத்திரயத் தையும், தர்ஸன தாத்பர்யங்களையும், அஷ்டாங்க யோக ரகஸ்யத் தையும் அருளிச்செய்தார். 'மிக்க வேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான்' என்கிறபடி இவர் பொலிந்து நின்ற பிரானையும், நம்மாழ்வாரையும் அனுபவித்து வரும்பொழுது, மன்னனார் மீண்டும் அவர் கனவில் தோன்றித்தான் பிரபந்தத்தைக் கேட்க விரும்புவதாகவும், அதனால் மீண்டும் வீர நாராயணபுரத்துக்கே வாரும் என்று கூறிவிடவே, அவரும் ஆழ் வார், ஆதிப்பிரான் அனுமதி பெற்று, வீரநாராயணபுரம் வந்து மன்னனார் திருமுன்பு ஓதினார். அதன் அழகிலும் சுவையிலும் ஈடுபட்டு மன்னனார் இத்தகைய உயர்ந்த செல்வம் மீண்டும் மறைந்துவிடக்கூடாது. நீர் இவற்றை இயலும் இசையுமாக்கும் என்று அர்ச்சகர் மூலமாகக் கட்டளையிட்டு நியமித்தார். நாதமுனிக ளும் தன் மருமக்களான கீழையகத்தாழ்வான் (கிருஷ்ணமாச்சார் யார்) மேலையகத்தாழ்வான் (வரதாச்சார்யார்) இவர்களை அழைத்து, அவர்களின் மூலமாக இன்கவிபாடும் பரமகவிகளாக, திவ்யகானத்திலேயமைத்து, இயலும் இசையுமாக பாடுவித்தருள அது உலகத்தில் மீண்டும் சிறப்புற்று எல்லோராலும் பாடப்பட்டுப் பரவி வந்தது.

கோயில்களில் உற்சவ காலங்களில் இசையுடன் அபிநயித்துப் பாடவைத்தனர். இவ்வாறு ஆரம்பித்த அரையர்சேவை இன்றும் ஸ்ரீரங்கம், ஆழ்வார் திருநகரிபோன்ற முக்கிய வைணவ ஸ்தலங்க ளில் மட்டும் நடைபெறுகிறது. வேதவியாசர் அருளிய சூத்திரத்தின் விரிவாக்கமாக அமைந்தது நாதமுனிகள் அருளிய யோக ரஹஸ்யங் கள் என்பர். தியான யோகமே இறைவனையும் ஜீவனையும் இணைக்கின்ற பாலமாகும். இந்த உணர்வு எல்லோராலும் பெற முடியாது. மனதில் தானாகவே உருவாக வேண்டும். இந்த உள்

ளொளியே உலகுக்கு நித்தியப் பிரகாசாதிபரன் எனச் சுயம்பிரகாசி யாக உள்ளது.

இவருடைய முக்கிய சிஷ்யர்கள் உய்யக்கொண்டாரும் (புண் டரீகாக்ஷார்) குருகைக் காவலப்பனுமாவார்கள். அவர்கள் மூலமா கத்திவ்யப்பிரபந்தத்தையும் யோக ரகஸ்யத்தையும் பிரசாரம் செய் வித்து, இனிப்பிறக்க இருக்கும் தன்னுடைய பேரனான யமுனைத் துறைவருக்கு இவற்றை அளிக்கும்படி நியமித்துவிட்டு குருகைக் காவலப்பன் கோயிலிலேயே பரம பதித்தருளினார். இவர் சுமார் 102 ஆண்டுகள் வாழ்ந்தார். இவர் கி.பி. 822-ல் ஆனிமாதம் ஏழாம் தேதி பிறந்தார். இவர் பிறந்த இடம் சோழ நாட்டில் வீரநாராயண புரம், பிறந்த குலம் சொட்டைக்குலம். இவருக்குத் தகப்பனார் இட்ட பெயர் ரெங்கனாதன் என்பது. இவர் யோகாப்யாசம் கைவந்தவராகையாலே இவரை ரெங்கநாதமுனிகள் என்றனர். அப்பெயரைச் சுருக்கி நாதமுனிகள் என்றும் அழைத்தனர்.

ஆளவந்தார் என்ற யமுனைத்துறைவர் அருளிய ஸ்தோத்திர ரத்னத்தின் கடைசி ஸ்லோகத்தில் 'என்னுடைய நடத்தையை நினைக்காமல், உன்னுடைய திருவடித்தாமரைகளில் இயற்கையாக இருக்கும் மேலான அன்பிற்கு எல்லை நிலமாயிருப்பவரும், ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்தவரும், எனக்குப்பாட்டனாருமாகிய நாதமுனிகள் கடாக்ஷித்து எனக்கு அருள் புரிய வேண்டும்' என்கி றார்.

நாதமுனிகள் வீட்டில் இல்லாதபோது வில்லேந்திய இருவீர ரும், ஒரு பெண்ணும் ஒரு குரங்கும் அவரைத்தேடி வந்துவிட்டுப் போனதாக வீட்டிலுள்ளவர்கள் சொன்னதாகவும், அவ்வாறு வந்த வர் சீதாராமலட்சுமண அனுமானாகத்தான் இருக்க வேண்டும் என எண்ணி அவர்களைத் தொடர்ந்து அவர்கள் போன இடமான கங்கைகொண்ட சோழபுரம் சென்று அங்கேயே தேகப்பிராப்தி அடைந்தார் என்பதும் கர்ண பரம்பரைச்செய்தி. நாதமுனி அதிக நாட்கள் வாழ்ந்தால்கூட அவர் வாழ்நாளிலேயே ஒரே மகனை இழக்கும் அவலநிலை ஏற்பட்டதாகச் சொல்லப்படுகிறது. அவரது மகன் ஈஸ்வர முனியின் மகனான யமுனாச்சாரியார் இளவயதி லேயே மிகக்கீர்த்தி வாய்ந்தவராக இருந்தார்.

ஸ்ரீமந் நாதமுனிகள் பெருமையைக் கூறும் பராசரபட்டர், ஸ்ரீ தேசிகர், ஆளவந்தார். கருடவாகன பண்டிதர் முதலியோர் இயற்றிய கிரந்தங்கள் பல இருந்த போதிலும் திருவரங்கத்தமுத

*னார் எழுதிய 'இராமானுஜ நூற்றந்தாதி 20-ம் பாட்டும், மணவாள மாமுனிகள் அருளிச்செய்த உபதேச ரத்னமாலை 36-ம் தனியனும், முக்கியமானவையாகும். அவை*

'ஆரப்பொருள் தென்குருகைப்பிரான், அமுதத்திருவாய்
ஈரத்தமிழின் இசையுணர்ந்தோர்கட்டு, இனியவர்தம்
சீரைப் பயின்றுய்யும் சீலங்கொள் நாதமுனியை நெஞ்சால்
வாரிப்பருகும் இராமானுசன் என்தன் மாநிதியே

(இரா.நூற். 20)

தெருளுற்ற ஆழ்வார்கள் சீர்மை அறிவாரார்?
அருளிச்செயலை அறிவாரார்? — அருள் பெற்ற
நாதமுனி முதலான நம் தேசிகரையல்லால்
பேதை மனமே! உண்டோ பேசு.

(உபதே. 36)

*என்பன நாதமுனிகள் அருளிய நம்மாழ்வார், பெரியாழ்வார், திருவாய்மொழி, மதுரகவியாழ்வார் இவர்களைப்பற்றியருளிய தனியன்களில் மதுரகவி பற்றிய தமிழ்த்தனியன் வருமாறு.*

'வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர் ஏறு - எங்கள்
வாழ்வாமென்றேத்தும் மதுரகவியார் எம்மை
ஆழ்வார் அவரே அரண்

*என்பதாகும். இவர் யோகத்தில் இருக்கும்பொழுதே குருகைக் காவலப்பன் கோயிலில் சக்கரவர்த்தித் திருமகனார் திருவடிகளில் சேர்ந்தார் என்று கூறப்படுகிறது.*

***நாதமுனிகளின் வாழித் திருநாமம்:***

ஆனிதனில் அனுடத்தில் அவதரித்தான் வாழியே.
ஆளவதார்க்குபதேசம் அருளிவைத்தான் வாழியே.
பானுதெற்கில் கண்டவன் சொல் பலவுரைத்தான் வாழிய.
பராங்குசனார் சொற்பிரபந்தம் பரிந்துகற்றான் வாழிய.
கானமுறத்தாளத்தில் கண்டுறைத்தான் வாழியே.
கருணையினால் உபதேசக்கதியளித்தான் வாழிய.
நானிலத்தில் குருவரையை நாட்டினான் வாழிய.
நலந்திகழும் நாதமுனி நற்பதங்கள் வாழிய.

***ஆழ்வார், எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.***

## புண்டரீகாக்ஷர் என்ற உய்யக்கொண்டார் வைபவம்

நாதமுனிகளின் பிரதான சீடரான உய்யக்கொண்ட புண்டரீகாக்ஷர், நாதமுனிகள் அவதரித்து 63 வருடங்களு னர் கி.பி. 886-ல் சித்திரைமாதம் கார்த்திகை நட்சத்திர வெள்ளறை என்னும் திருத்தலத்தில் ஸ்ரீ வைஷ்ணவ குலத்தில் பிறந்தவர். ஆச்சார்ய பரம்பரையில் நாதமு மலையிலிருந்து விழுகிற அருவியாக அமைந்தவர் உய் டார். ஆதிகாலத்தில் தமிழ்நாடு முழுவதும் காடாக காலத்திலே ஸ்ரீராமபிரானுக்கு முன்னோனாகிய சிபிச்ச யால், மத்தியப்பிரதேசத்திலிருந்து 2700 ஸ்ரீ வைஷ்ணவ குடும்பங்கள் திருவெள்ளறையில் எழுந்தருளியிருக்கும் க்ஷப் பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்வதற்காகக் வரப்பட்டனர். இவ்வாறு ஆதிகாலத்திலேயே ஏற்பட்ட மாகையால் இதை இன்றும் மக்கள் ஆதித்திருவெள்ள அழைக்கின்றனர். ஆதிகாலத்திலேயே சோழ தேசத்திற்கு ளாதலால் சோழியர்கள் என்றழைக்கப்பட்டனர். இத்த வைஷ்ணவப்பிரமாண குலத்தில் பிறந்தவர் உய்யக்கெ ஞானஜன்மமே தேக ஜன்மத்தைவிடச் சிறந்ததாகக் க வந்த காலமாதலால் உய்யக்கொண்டாரது ஆச்சார்ய, சிஷ் பற்றிக் குறிக்கப்பட்டது போல, அவரது பெற்றோர்களை யும் மக்களைப் பற்றியும் விவரங்கள் குறிக்கப்படவில்லை வைணவ பக்தர்களுக்குக் குமாரராக அவதரித்தவர் என் றோர்களால் முறைப்படி புண்டரீகாக்ஷன் என்று திருநாம பட்டு உரிய காலங்களில் அன்னப்பிரசானம் சௌளம், உ முதலான சடங்குகளெல்லாம் செய்யப்பட்டு தக்க ஆச் எதிர்நோக்கிக் காத்திருந்தவர் என்றும் கொள்ளலாம்.

இந்நிலையில் அவரை நாதமுனிகளிடத்தில் சீடரா பாடங்கேட்குமாறு அனுப்பிவைத்தனர். அந்நாளிலிருந்து களையல்லாது அறியாதவராய், குருகுலவாசம் செய்து நாதமுனிகள் சிஷ்யர்களில் முக்கியமானவர்கள் உய்யக் ரும், குருகைக் காவலப்பனுமேயாவார்கள். இதில் காவலப்பன், நாதமுனிகள் அருகில், எப்போதும் எழந்தருளியிருக்கும் இடத்திற்கு அருகிலேயே யோகத்தி தருளியிருந்தார். நாதமுனிகளிடம் இரு நிதிகள் இருந்த பிராப்திக்கு (முக்திக்கு) உறுப்பான பக்தியோகம் ஒன்று குணஸ்வரூப விபூதிகளைத் தெளியப்பேசும் நாலாயிரம்

ளடங்கிய திவ்யப்பிரபந்தம் மற்றொன்று. முதல் நிதியினிலால் சேதனன் ஒருவன்தான் முக்தியடைய முடியும். இரண்டாவது நிதியினாலே உலகத்தையே உய்விக்க முடியும். இவற்றுள் எது வேண்டும் என்று குருகைக் காவல்பனை வினவினார் நாதமுனிகள். நான் பக்தி யோகத்தைப்பெற்று உய்ந்து போகிறேன் என்றார் அவர். அதன் படியே உபதேசம் பெற்று உஜ்ஜீவனமடைந்தார். நாதமுனி கள் புண்டரீகாக்ஷரையும் வினவ, அவர் 'பிணங்கெடக்க மணம் புணருவாருண்டோ? உலகமே ஆத்மநாசமடைந்து, பிணக்காடாயி ருக்கும்பொழுது அடியேன் ஒருவன் பெருமானோடு ஆத்மவிவா ஹம் செய்துகொண்டு மோட்சமடைவது சரியாகுமோ, அடியேன் எப்படியானாலும் பரவாயில்லை. உலகம் உய்யும் வகையாகத் திவ்யப்பிரபந்தங்களை உபதேசிப்பீர்' என்றார்.

இதைக்கேட்ட நாதமுனிகள் அவரை வாரிஅணைத்துப் "புண் டரீகாக்ஷரே! நீரே உலகையும், உலகை உடையவனான நாராயண னையும், அவனைச் சொல்லும் அருளிச்செயல்களையும் அதைப் பெற்ற என்னையும் உய்யக்கொண்டவர். உம்மாலேதான் நான் அரும்பாடு பட்டுப்பெற்ற அத்தமிழ் மறைகள் உலகெங்கும் பரவி அனைவரையும் உய்விக்கப் போகின்றன. இன்று முதல் நீர் 'உய்யக்கொண்டார்' என்ற திருநாமத்தாலேயே விளங்கக் கடவீர்' என்று அருளிச் செய்து திவ்யப்பிரபந்தங்களை உய்யக்கொண்டா ருக்கு உபதேசித்தருளினார். உய்யக்கொண்டரது இத்தகைய சுயந லம் பேணாத பரந்த மனப்பான்மையினால் இன்று நாம் அருளிச் செயல்களாலேயே உய்ந்து போகிறோம். இதனாலேயே இவர் ஸ்ரீ வைஷ்ணவ சமூகம் முழுவதற்கும் பிரேமாச்சாரியராய், நாதமுனிக ளுக்கு முன் அனுசந்திக்கப்படுகிறார்.

நாதமுனிகள் யோகதிசையில் நம்மாழ்வாரிடம் திருவாய் மொழி உபதேசம் பெறும்பொழுது 'பொலிக பொலிக' என்னும் திருவாய்மொழி வந்தவுடன் 'கலியும் கெடும் கண்டு கொண்மின்' என்று நான் சொன்னதை மெய்யாக்க ஒரு மஹான் அவதரிக்கப்போ கிறார் என்றார் ஆழ்வார். அவரைச்சேவிக்க வேண்டும் என்று நாதமுனி வேண்ட, ஆழ்வாரும் அப்படியே இராமானுஜரின் உருவைச் சேவை சாதிக்க தேவரீரைக் காட்டிலும் அழகிய இந்தத் திருமேனியை அடியேன் எப்பொழுதும் சேவித்து வழிபட வேண் டும் என்று நாதமுனி பிரார்த்திக்க ஆழ்வாரும் சிற்பிகளை கனவு மூலமாக நியமித்து எம்பெருமானாருடைய விக்ரகத்தைச் செய் வித்து நாதமுனிகளிடம் கொடுத்தருளி, இவரை நம்முடைய

அடியாக நினைத்திரும் என்று அருளினார் என்று நாயனாராச்சான் பிள்ளை என்ற வைணவசீலர் அருளிச்செய்வார்.

தம்முடைய அந்திம காலத்திலே நாதமுனிகள், உய்யக்கொண்டாரிடம் 'ஒருவருக்கும் வெளியிடாதே கொள்ளும் என்று அந்தப் பவித்திரமான விக்ரகத்தைக் கொடுத்து 'இதை என் பேரனுக்கு நான் விரும்பின விஷயம்' என்று கொடும் என்று கூறி ஆழ்வார் திருவடிகளே சரணம் என்று சடகோபன் பொன்னடியான அவ்விக்ர கத்தைத் தியானம் பண்ணிக்கொண்டு இறைவனடி சேர்ந்தார். உய்யக்கொண்டாரது கடைசிக்காலம் வரை நாதமுனிகளது பேரன் அவதரிக்காததால், அவ்விக்ரகத்தைத் தம்முடைய பிரதான சீடரான மணக்கால் நம்பியிடம் கொடுத்து நாதமுனிகளது பேரன் யமுனைத் துறைவரிடம் அதை அளிக்கும்படி கட்டளையிட்டார் என்றும் அவரும் அவ்வண்ணமே அளித்தார் என்றும் கூறுவர்.

உய்யக்கொண்டார் சீடர்கள் ஐந்துபேரில் பிரதானமான மணற் கால் நம்பியின் இயற்பெயர் 'ஸ்ரீராமன்' என்பது. இவர் உய்யக் கொண்டார் திருவடிகளில் 12 வருட காலம் சகல கைங்கர்யங்களும் செய்து கொண்டிருந்தார். ஒரு சமயம் உய்யக்கொண்டாரது மனைவி இறந்துவிடவே திருமாளிகை (வீடு) காரியமெல்லாமும் தானே செய்துவந்த காலத்தில் ஒரு நாள் உய்யக்கொண்டாரது சிறுமிகள் இருவரையும் நீராட்டி அழைத்து வரும்பொழுது வழி யில் வாய்க்கால் சேறாயிருப்பதைக் கண்டு அவர்கள் திகைத்து நிற்க, தாம் படியாய்க்கிடந்து, அவர்களைத் தன் முதுகிலே கால் வைத்து நடக்குமாறு செய்து கூட்டிப்போக, உய்யக்கொண்டார், தம் புத்திரிகள் கால் சுவடுகள் (மணற்கால்) அவர் முதுகில் பொலிய நின்றதைப்பார்த்து அவரை மணற்கால் நம்பி என்றும் அவர்.பிறந்த ஊருக்கு மணற்கால் என்றும் திருநாமம் சாத்தினார். இத்தகைய ஆச்சார்ய நிஷ்டையினால் உய்யக்கொண்டாரது போற் றுதலுக்கும் பாத்திரரானார் மணற்கால் நம்பி.

உய்யக்கொண்டாரது அந்திமகாலத்தில் இந்த வைணவ தர்ஸ னத்தை நடத்துபவர் யார் என்று கேட்க மற்ற முதலிகளையும் (ஸ்ரீ வைஷ்ணவர்கள்) கூட்டிக்கொண்டு நீரே நடத்துவீர்: பின்னர் நாதமு னிகளுக்குப் பேரன் பிறந்தபின்னர் அவருக்கு யமுனைத்துறைவர் என்ற பெயரை வழங்கி இந்த எம்பெருமானார் விக்ரகத்தையும் கொடுத்து தகுந்த ஆச்சாரியரைத் தேடிக்கண்டுபிடித்து அவரிடம் தர்ஸன நிர்வாகத்தை ஒப்படைக்க வேண்டியது அவரது கடமை என்று நாதமுனிகள் நியமித்ததாகச் சொல்லி அவருக்கு எல்லா

*அர்த்தங்களையும் உபதேசியும் என்று கூறி நாதமுனிகள் திருவடி களை நினைத்தவாறே திருநாட்டுக்கு ஏகினார். உய்யக்கொண்டார் கிரந்தம் எதுவும் எழுதினதாகத் தெரியவில்லை. இவரது வேறு பெயர்கள் புண்டரீகாக்ஷர், பத்மாக்ஷர், அரவிந்தாக்ஷர் என்பர். இவரது ஆச்சாரியார் நாதமுனிகள் என்று கண்டோம். இவர் 105 ஆண்டுகள் வாழ்ந்ததாகச் சொல்லப்படுகின்றது. இவர் அருளிய திருப்பாவைத்தனியன்கள்.*

**அன்னவயல் புதுவை ஆண்டாள் அரங்கற்குப்**
**பன்னுதிருப்பாவை பல்பதியம் - இன்னிசையால்**
**பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை**
**சூடிக் கொடுத்தாளைச் சொல்லு**
**சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே தொல்பாவாய்**
**பாடியருளவல்ல பல்வளையாய் - நாடிநீ**
**வேங்கடவெற்கென்னை விதியென்ற இம்மாற்றம்**
**நாம் கடவா வண்ணமே நல்கு'**

*என்பனவாகும். நாதமுனிகள் உய்யக்கொண்டாரிடம், குளப்படி யில் நீரைத்தேக்கினால் வற்றிப்போகும். வீராணத்து ஏரியில் தேக்கி னால் நாட்டுக்கு உபகாரமாகலாம். ஆகவே இந்தப் பிரமேய ரத்னத்தை ஆளவந்தாருக்கு உபதேசியும் என்று சொன்னதாகச் சொல்லுவர்.*

### *உய்யக்கொண்டார் வாழித்திருநாமம்*

**வாலவெய்யோன் தனைவென்ற வடிவழகன் வாழிய.**
**மால்மணக்கால் நம்பிதொழும் மலர்ப்பதத்தான் வாழிய.**
**சீலமிகு நாதமுனி சீருரைப்பான் வாழிய.**
**சித்திரையில் கார்த்திகை நாள் சிறக்க வந்தான் வாழிய.**
**நாலிரண்டும் ஐயைந்தும் நமக்குரைத்தான் வாழிய.**
**நாலெட்டின் உட்பொருளை நடத்தினான் வாழிய.**
**மாலரங்க மணவாளர் வளமுரைப்பான் வாழிய.**
**வையமுய்யக் கொண்டவார் தாள் வையத்தில் வாழிய.**

நாவிரண்டு - திருவெட்டெழுத்து திருமந்திரம்
ஐயைந்து இருபத்தைந்து எழுத்துக்களுள்ள த்வையம் மந்திரம்
நாலெட்டு - முப்பத்திரண்டு எழுத்துக்களுள்ள சரமஸ்லோகம்
ரகஸ்யத்ரயம் சொன்னபடி.

***ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.***

### மேலையகத்தாழ்வான் கீழையகத்தாழ்வான் வைபவம்

நாதமுனிகளுக்கு மேலையகத்தாழ்வான் (வரதாச்சார்யார், கீழையகத்தாழ்வான் (கிருஷ்ணமாச்சார்யார்) என்ற மருமக்கள் இருவர் உண்டு. இவர்களைப்பற்றி வேங்கடசேஷாச்சாரியார் என்ப வர் வரதாச்சார்யார் என்பவர் ஸ்ரீதர யோகாபதி என்றும், கிருஷ்ண மாச்சார்யார் ஸ்ரீதர யோகக்கல்பகத்தரு என்னும் பெயருடைய யோக சாஸ்திரங்களைச் செய்தனர் என்பார். வரதாச்சார்யார் குமார ரான நிர்மல தாஸர் ஸ்ரீமத்நாதமுனிகள் அருளிச்செய்த யோக சாராப்ரத்துக்கு விருத்தி (விளக்கம்) அருளிச்செய்தார். இவர் குமார ரான ஞானவராஹாச்சாரியார் நாதமுனிகளுடைய யோக சாஸ்திரத் துக்கும் பதஞ்சலி யோக சாஸ்திரத்துக்கும், ஜககண்டயம் செய்தார். குருகைக்காவலப்பன் என்னும் இவர் குமாரரான குருகேசர் ஸ்ரீ ஆளவந்தாருக்கு யோக சாஸ்திரத்தை உபதேசிக்க விரும்பி நான் நித்யவிபூதிக்கு எழுந்தருளும்போது (மரணமடையும்) வருமாறு நியமித்திருக்க அக்காலத்தை ஆளவந்தார். மறந்து வராமலிருந்து விட்டபடியால் ஸ்ரீ குருகைக்காவலப்பன் வரை வந்த யோகானுஷ் டானம் நின்று விட்டது.

குருகைக் காவலப்பன் நாதமுனிகளின் மருமகனின் பூட்டன். அக்காலத்தில் தமக்குத் தெரிந்த ஞானசாஸ்திரங்களைப் பிறருக்குச் சொல்வதில் எவ்வளவு கண்டிப்பாக இருந்தார்கள் என்பதை அறிகி றோம். இராமானுஜர் காலத்தில் எவ்வாறு இந்தநிலை மாற்றம டைந்தது என்பதைக்காண இருக்கிறோம். நாதமுனிகள் தன்னு டைய மருமக்களான கீழையகத்தாழ்வாரையும், மேலையகத்தாழ் வாரையும் அழைத்து ஆழ்வார் பாசுரங்களை இயலும் இசையுமா கப் பாடுவித்தருளிய வைபவத்தை ஸ்ரீவேதாந்த தேசிகர் குருபரம் பரா ஸாரத்தின் இறுதிப்பகுதியில்

காளம் வலம்புரியன்ன நற்காதலடியவர்க்குத்
தாளம் வழங்கித் தமிழ்மறை இன்னிசை தந்தவள்ளல்
மூளும் தவநெறி மூட்டிய நாதமுனி கழலே
நாளும் தொழுதெழுவோம் நமக்கார் நிகர் நானிலத்தே.

என்று அவர்கள் இருவரையும் காளம் வலம்புரி போல வைத்து இனிய தேவகானத்தை அமைத்துக் கொடுத்த நாதமுனி என்று புகழ்கிறார்.

## குருகைக் காவலப்பன் வைபவம்

இவர் நாதமுனிகளின் சிஷ்யரென்றும் அவரிடமிருந்து யோக ரகஸ்யத்தைக் கேட்டுப்பெற்றார் என்றும் முன்னரே கண்டோம். ஆளவந்தாருக்குக் குருகைக் காவலப்பன் கூறியதாகச் சொல்லும் ஒரு செய்தி உண்டு. அப்பன் ஸ்ரீபாதத்தில் ஒரு ரகஸ்ய விசேஷம் உண்டு என்று மணற்கால் நம்பி கூற அதைக்கேட்க வேண்டும் என்று ஆளவந்தாரும், குருகைக் காவலப்பன் ஒரு குட்டிச்சுவரருகே யோகத்திலே இருக்கும் இடத்திற்கு வந்தார். ஆளவந்தார் அவரது சமாதி நிலையைக் கலைக்க விரும்பாது மறைந்து நிற்க, அப்பனும் யோகத்திலிருந்து கலைந்து கண்விழித்துப்பார்த்து இங்கு சொட்டைக் குலத்திலிருந்து வந்தவர் யாரேனும் உண்டா என்று கேட்க ஆளவந்தார் நாங்கள் மறைந்திருந்தது தேவருக்கு எப்படித்தெரிந்தது என்று கேட்டாராம். அதற்குக் குருகைக் காவலப்பனும் நானும் பெருமாளும் தனித்திருக்கும்பொழுது பெரிய பிராட்டியார் வந்தால் கூடக் கவனிக்காத எம்பெருமான், என் கழுத்தை அமுக்கி நாலு தரம் எட்டிப்பார்த்தார். அப்படி அவர் பார்த்தால் சொட்டைக் குடியில் யாரேனும் வந்திருக்க வேண்டும் என்று நினைத்தேன் என்றாராம்.

ஜகத்திற்கும் ஈஸ்வரனுக்கும் உள்ள தொடர்பு எத்தகையது என்று ஒருவர் அப்பனைக் கேட்டபொழுது இந்த சரீரத்திற்கும், இதற்கு ஈஸ்வரனாயுள்ள ஜீவாத்மாவிற்கும் உள்ள தொடர்பாகிற சரீராத்மாத் தன்மையே; உலகிற்கும் ஸர்வேஸ்வரனுக்கும் உள்ள தொடர்பாகும் என்று கூறினாராம். அதே மனிதன் அப்பனைப் பார்த்து எப்பொழுதும் எம்பெருமானை நினைத்துக் கொண்டிருக்கும் நீர் அவனை நினைக்க எனக்கு ஒரு வழி சொல்ல வேண்டும் என்று வேண்ட, அதற்கு அவர், நான் உனக்கு எம்பெருமானை நினைக்க வழிசொல்லுகிறேன். நீ அவனை மறக்க எனக்கு வழி சொல்கிறாயா என்றாரம். இதன் பொருள், எந்தப்பொருளுமே எம்பெருமானுக்குச் சரீரியாய் இருப்பதால் சரீரமாய் விசேஷமான அவனுடைய நினைவே வரவேண்டியிருக்கும். ஆகவே உலகத்திலுள்ள அனைத்துப்பொருள்களும் பகவானது சரீரத்தின் பகுதிகளே, பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் அவன் என்பது கருத்து. ஆளவந்தாரால் இவரிடமிருந்து யோகாநுஷ்டானத்தைப்பெற முடியாமல் போன சம்பவத்தை முன்னரே குறிப்பிட்டுள்ளேன்.

*குருகைக் காவலப்பன் பிறந்த இடம் பாண்டிய நாட்டிலுள்ள திருக்குருகூர். பிறந்த நட்சத்திரம் தை மாதத்தில் விசாகம். அவர் இருந்த இடம் நாதமுனிகளது திருப்பள்ளி. அது அன்றுமுதலாக சோழதேசத்திலே காவிரிக்கரையிலே குருகைக் காவலப்பன் கோயில் என்றழைக்கப்படுகிறது. அவருடைய ஆச்சார்யார் நாத முனிகள். அவருடைய திருவாராதனப் பெருமாள் சக்கரவர்த்தித் திருமகனார். இவரது இளமைப்பெயர் புண்டரீகாக்ஷர். இவர் 151 ஆண்டுகள் வாழ்ந்ததாகச் சொல்லப்படுகிறது. இவர் அருளிய மூன்றாம் திருவந்தாதித்தனியன்*

**சீராரும் மாடத் திருக்கோவலூரதனுள்**
**காரார் கருமுகிலைக் காணப்புக்கு - ஓராத**
**திருக்கண்டேன் என்றுரைத்த சீரான் கழலே**
**உரைக்கண்டாய் நெஞ்சே உகந்து'**

*என்பதாகும்.*

### *குருகைக் காவலப்பன் வாழித்திருநாமம்*

மகரமதில் விசாகம் நாள் வந்துதித்தான் வாழிய.
மாறன்தாள் நாதமுனி மலரடியோன் வாழிய.
நிகரில் நன் ஞானயோகம் நீண்டு செய்வோன் வாழிய.
நிர்ணயமா ஐந்துபொருள் நிலையறிவான் வாழிய.
அகமறுக்குமிராமர் பதம் ஆசையுள்ளோன் வாழிய.
ஆழ்வார்கள் மறையதனை ஆய்ந்துரைப்போன் வாழிய.
செகதலத்தில் குருகூரில் செனித்த வள்ளல் வாழிய.
செய்குருகைக் காவலப்பன் திருவடிகள் வாழிய.

***ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.***

### *திருக்கண்ணமங்கையாண்டான் வைபவம்*

*நாதமுனிகளின் முக்கிய சிஷ்யர்களில் ஒருவரான இவர் திருக் கண்ணமங்கை என்ற ஊரில் பிறந்தவர். இவரைப்பற்றிய பல செய்திகள் பல கிரந்தங்களில் உள்ளன. நாதமுனிகள் இவருக்குத் திருவாய் மொழி உபதேசிக்கும்பொழுது 'பொலிக பொலிக' என்ற பாசுரம் வந்தபொழுது நம்மாழ்வார் அளித்துள்ள இராமானுஜரது விக்ரகத்தின் விருத்தாந்தங்களையெல்லாம் கூறக்கேட்டு, அத்த*

கைய பேற்றைப்பெற்ற தங்களுடைய சீடனான எனக்கு ஒரு குறைவும் இல்லை என்று கூறினார் என்பர்.

ஒரு நாள் அவர் ஒரு மகிழ மரத்தடியில் உள்ள சருகுகளைப் பெருக்கிச் சுத்தம் செய்து கொண்டிருந்தபொழுது ஒரு நாஸ்திகர் அவரிடம் உமக்கும் எனக்கும் என்ன வித்யாசம் என்று கேட்க, அவர் பெருக்கின இடமும் பெருக்காத இடமும் போல என்றாராம்.

'உபாயத்தை நிலையிட்டவர்கள், பிராட்டி, திரௌபதி, திருக்கண்ணமங்கை ஆண்டான் என்பவர்கள்' என்று பெரியவாச்சான் பிள்ளை என்ற வைணவ சீலர் மாணிக்கமாலை என்ற நூலில் கூறியுள்ளார். அவன் தன் சுயவியாபாரத்தை விட்டான் என்ற பதத்திற்கு உரை கூறும்பொழுது, ஒரு சேவகனது நாயை ஒரு சேவகன் அடிக்க, அதைப் பொறாமல் அடித்தவனை எதிர்த்துப் பொருது, அவனையும் கொன்று தானும் குத்திக்கொள்வதாக இருக்கிறதைப் பார்த்து, ஒரு சாதாரண மனிதன் ஒரு நாய்க்காகத் தன் உயிரையும் இழக்க இருக்கப் பரமசேதனான இறைவன் அவனடியாரை எவ்வளவு நிச்சயமாகப் பரிபாலிப்பான் என்று கருதித் தன் சுயவியாபாரத்தை விட்டுத் திருக்கண்ணமங்கையில் பக்தராகி, திருவாசலில் அடைக்கலம் புகுந்தார். எறும்பிலியப்பா என்ற பக்தர் திருக்கண்ண மங்கையாண்டானைப் போலப் பற்றற்றி ருந்தால் அவனுக்கு உலக அபவாதமும் வராது. சாஸ்திர விரோத மும் வராது. லோக அபராதமும் வராது, பகவத நிக்ரகமும் வராது என்றார். இவர் அருளிய நாச்சியார் திருமொழித்தனியன்,

அல்லிநாட்டாமரைமேல் ஆரணங்கின் இன்துணைவி
மல்லி நாடாண்ட மடமயில் - மெல்லியலாள்
ஆயர்குல வேந்தன் ஆகத்தாள் தென்புதுவை
வேயர் பயந்த விளக்கு'

என்பதாகும். இவர் ஓரோன் வழி ஆச்சார்ய பரம்பரையில் இடம் பெறாததால் வாழித்திருநாமம் காணப்படவில்லை.

## மணற்கால் நம்பி வைபவம்

உய்யக்கொண்டாரது சிறந்த சீடரான மணற்கால் நம்பி என்ற ஸ்ரீ ராமமிஸ்ரர், உய்யக்கொண்டார் அவதரித்து 43 வருடங்களுக்குப் பின்னர் கி.பி. 929-ல் லால்குடி அருகே இப்பொழுது மணற்கால் என்று கூறப்படும் கிராமத்தில் அந்தணர் குலத்தில் மாசி மாதம்

மக நட்சத்திரத்தில் பிறந்தார். இவருக்கு எதனால் மணற்கால் நம்பி என்ற பெயர் வந்தது என்பதை முன்னரே கண்டோம். இவர் தம் ஆச்சார்யரான உய்யக்கொண்டார் நியமனப்படி நாதமுனிகள் பேரரான ஆளவந்தாரைத் திருத்திப் பணிகொண்டு அவருக்குத் திவ்யப் பிரபந்தங்களையும் ரகஸ்யத்ரயத்தையும் நம்மாழ்வாரிடமிருந்து பெற்ற பவித்ரமான ராமானுஜ விக்ரகத்தையும் கொடுத்தருளினார். அவரது அவதார ஸ்தலத்தில் உள்ள அவரது திருவிக்ரகம் திரிதண்டத்துடன் காணப்படுவதால் அவர் கடைசிக்காலத்தில் சந்யசித்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. இவரும் கிரந்தம் எதுவும் எழுதினதாகத் தெரியவில்லை.

இவரது சீடர்கள் ஆளவந்தார் என்ற யமுனாச்சாரியார், திருவரங்கப் பெருமானரையர், தெய்வத்துக் கரசு நம்பி, பிள்ளையரசு நம்பி, சிறு புள்ளூருடையார்பிள்ளை, திருமாலிருஞ்சோலை தாஸர், வங்கிபுரத்தாச்சி முதலியோர். இவர் 105 ஆண்டுகள் வாழ்ந்ததாகச் சொல்லப்படுகிறது. இவரையும் எம்பெருமானார் சீடர் வடுக நம்பியையும் ஆச்சார்ய கைங்கர்யத்திற்கு உதாரணமாகச் சொல்வர். இவர் அருளிய பெருமாள் திருமொழித்தனியன்

> ஆரம் கெடப் பரனன்பர் கொள்ளாரென்று அவர்களுக்கே
> வாரங்கொடு குடற்பாம் பிற்கையிட்டவன், மாற்றலரை
> வீரங்கெடுத்த செங்கோல் கொல்லி காவலன் வில்லவர்கோன்
> சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே'

என்பது.

### மணற்கால் நம்பி வாழித்திருநாமம்

> தேசமுய்யக் கொண்டவர் தாழ்சென்னி வைப்போன் வாழியே.
> தென்னரங்கர் சீரருளைச் சேர்ந்திருப்போன் வாழியே.
> தாசரதி திருநாமம் தழைக்க வந்தோன் வாழியே.
> தமிழ்நாத முனியுகப்பைத்தாபித்தோன் வாழியே.
> நேசமுடன் ஆரியனை நியமித்தோன் வாழியே.
> நீணிலத்தில் பதின்மர் கலை நிறுத்தினோன் வாழியே.
> மாசிமகந்தனில் விளங்கவந்துதித்தான் வாழியே.
> மால் மணற்கால் நம்பி பதம் வையகத்தில் வாழியே.

*ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.*

## பெரிய முதலியான ஆளவந்தாரென்ற யமுனைத் துறைவர் வைபவம்

மணற்கால் நம்பி அவதரித்து 47 வருடங்களுக்குப் பிறகு கி.பி. 976-வது வருஷம் ஆடி மாதம் பௌர்ணமி திதியில் உத்தராட நட்சத்திரத்தில் நாதமுனிகளின் குமாரரான ஈஸ்வர முனிகளுக்கும் அவருடைய தர்ம பத்தினியான ஸ்ரீரங்க நாயகிக்கும், நாதமுனிகள் அவதரித்த காட்டுமன்னார் கோவிலிலேயே அவதரித்தார். நாதமுனிகள் நியமித்தபடியே அவருக்கு யமுனைத்துறைவன் என்ற நாமம் சூட்டப்பட்டது. ஈஸ்வர முனிகளால் உரியகாலத்தில் அன்னப்பிரசானம் உபநயனம் போன்ற சடங்குகளெல்லாம் செய்யப்பட்டன. அவருக்கு வேதத்தை அப்யஸித்தபொழுது ஏகசிந்தை உடையவராய் மகா மேதாவிலாசத்தை உடையவராய் இருந்தார். உரியகாலத்தில் இவருக்கு விவாகமும் செய்விக்கப்பட்டது.

மகா பாஷ்யபட்டர் என்பவரிடம் இவர் சாஸ்திரங்களைக் கற்றுவந்தார். அக்காலத்தில் ராஜப்புரோகிதரான ஆக்கியாழ்வான் என்பவன் தன் வித்யா கர்வத்தாலே எல்லா வித்வான்களிடமும் கப்பம் வாங்கி வந்தான். அவன் ஒரு நாள் கப்பம் கேட்டு மஹாபாஷ்யபட்டருக்கு ஓலை அனுப்ப, பட்டர் கப்பம் செலுத்த வழியில்லாமல் திகைத்து நிற்பதைப்பார்த்து யமுனைத்துறைவர் அவ்வோலையைக் கிழித்தெறிந்து விட்டார். அதைக் கேட்ட ஆக்கியாழ்வான் அவ்வோலையைக் கிழித்தவன் வெறும் கவியோ அல்லது சாஸ்திரம் தந்திரம் எல்லாம் அறிந்த பண்டிதனோ என்று கேட்டனுப்பினான். அதற்கு அவர் 'நாம் வெறும் பண்டிதன் மாத்திரமல்லோம் மீமாம்ஸ சாஸ்திரக்கடலை மாத்திரம் கரை கண்டவர்களல்லோம். எதிர்வாதம் புரிபவர்களாகிய யானைகளின் மத்தகத்தைப் பிளக்கும் வல்லமையுடையோம்' என்று பதில் அனுப்பினார். உடனே அரசன் யமுனைத்துறைவரை ராஜசபைக்கு வரச்சொல்லி ஓலை அனுப்பினார். அவர் ராஜ ஓலையையும் கிழித்துப்போட அவர் ஒரு மகான் என்பதை உணர்ந்து பல்லக்கு பரிவாரங்களை அனுப்பினார் அரசர்.

யமுனைத்துறைவரும் அப்பல்லக்கில் ராஜசபைக்கு வந்து தனக்குப் பூர்வமீமாம்சை, உத்தரமீமாம்சை இரண்டிலும் விசேஷமான பயிற்சி உண்டு. என்னைப்போன்ற மற்றொருவன் தேடினாலும் கிடைக்கமாட்டான் என்ற பொருளுடைய சுலோகத்தை எழுதியனுப்பினார். அதற்குப்பின்னர் இவருக்கும் ஆக்கியாழ்வானுக்கும் வித்வான்கள் முன்னிலையில் சம்வாதம் (தர்க்கம்) நடந்

தது. இந்த வாதத்தில் ராஜாவும், மகிஷியும் பின்வருமாறு சபதம் செய்து கொண்டனர். யமுனைத்துறைவர் தோற்றாராகில் நான் மகிஷி பதவியைத் துறந்து உமக்கு வேலைக்காரியாவேன் என்றாள் ராஜமகஷி. ஆக்கியாழ்வான் தோற்றானாகில் நான் யமுனைத்துறை வருக்குப் பாதிராஜ்யம் தருவேன் என்றார் ராஜா. பின்னர் வாதம் ஆரம்பித்தது.

இளம்பிள்ளையான இவரை சாஸ்திரவிவாதமில்லாமல் லௌ கீக விஷயங்களிலேயே தோற்கடித்து விடலாமென்றெண்ணிய ஆக்கியாழ்வான் லௌகீகங்களில் நீர் இல்லையென்பது நான் உண்டு என்பேன், நீர் உண்டு என்பதை நான் இல்லையென்பேன். வென்றவன் தோற்றவன் தலையில் அடிக்க வேண்டியது என்று கூறினான். அதற்கிசைந்த யமுனைத்துறைவர், 1) உன் தாய் மலடி யல்ல, 2) அரசன் தார்மீகன், 3) ராஜபத்தினி பதிவிரதை என்ற மூன்று வாக்கியங்களைச் சொல்லி அவனை மறுக்கச் சொன்னார். அவற்றை மறுக்க இயலாமல் மௌனியாய் இருந்தான். பின்பு சாஸ்திரவிவகாரமும் நடந்தது. அதிலும் அவன் தோல்வியுற்றான். பின்னர் நீர் சொன்ன மூன்று லௌகீக வாக்கியங்களை உம்மால் மறுக்க முடியுமா என்று அரசனும் அரசியும் கேட்டனர். முடியும் என்று சொல்லி யமுனைத்துறைவர் பின்வருமாறு மறுத்துக்காட்டி னார்.

ஒரு மரமும் தோப்பல்ல. ஒரு பிள்ளையும் பிள்ளையில்லை என்ற உலக வழக்கின்படி நிலையற்றதான இவ்வுலகில் ஒரு பிள்ளையைப்பெற்றதாய், இப்பிள்ளை நமக்குத் தக்கவேணுமே என்று கலங்கிக்கொண்டே இருப்பாளாதலால், அவள் பிள்ளை பெற்றும் மலடியேயாவாள். இம்முறையில் ஒரு பிள்ளை பெற்ற ஆக்கியாழ்வானுடைய தாய் மலடியேயாவாளாதலால் முதல் வாக் கியம் மறுக்கப்பட்டது. அடுத்துக் குடிகள் செய்யும் பாபம் அரச னைச் சேருமாகையால், பரம தார்மீகமான இவ்வரசனும் குடிகள் செய்யும் பாவத்தில் பங்கு பெறுகிறானாதலால், இரண்டாவது வாக்கியமும் மறுக்கப்பட்டது. இறுதியாகச் சோமன் முதல் நாள் உன்னை மணம் புணர்ந்தான். கந்தர்வன் அடுத்த நாள் உன்னை மணம் புரிந்தான். மூன்றாவது நாள் அக்கினி உனக்குப் பதியாகி றான். நான்காவது நாளிலேதான் கைப்பிடித்த கணவன் உனக்குக் கணவனாகினான் என்ற வேதவாக்கியத்தின்படி எல்லாப் பெண்க ளுக்கும் முதல் மூன்று நாட்களில் தேவதைகளோடு தொடர்பு உண்டாகையால் பதிவிரதை தத்துவத்துக்குக் குறையுண்டு. அக்

குறை பரம வைதிகமான முறையில் அரசனைக் கைப்பிடித்த அரசிக்கும் உண்டாகையால் மூன்றாவது வாக்கியமும் மறுக்கப்பட்டது.

இவ்வாறு லௌகீக, சாஸ்திர வாதங்களில் ஆக்கியாழ்வாளை வென்றபோதிலும் முதலில் பண்ணின சபதத்தின்படி அவன் தலையில் அடிக்க மறுத்து விட்டார். அவருடைய பண்பையும், புலமையையும், உலக அனுபவத்தையும் கண்டு வியப்புற்ற அனைவரும் அவரைப் பெருமைப்படுத்தி கௌரவித்தனர். ராஜமாதேவி 'என்னை ஆளவந்தீரே' என்று தன் பிள்ளையைப் போல் எடுத்தணைத்துக்கொண்டு அரசனுடன் அரண்மனைக்குள் புகுந்தாள். அரசன் தான் ஒப்புக்கொண்டபடியே இவருக்குப் பாதிராஜ்யம் கொடுத்தான். இவரை எல்லோரும் ஆளவந்தார் என்றே அழைக்கலாயினர். இவரும் தம் பத்தினியோடு கூடி அரசாட்சி செய்து கொண்டு அரச போகத்தில் ஆழ்ந்திருந்தார். உய்யக்கொண்டார் நியமனத்தாலே யமுனைத்துறைவரைத் தர்ஸன கைங்கர்யத்திலே ஈடுபடவைக்க ஆசைகொண்ட மணற்கால் நம்பியால் கட்டுங்காவலுமாய் இருந்த அரண்மனைக்குள் சென்று ஆளவந்தாரைக் காண இயலவில்லை. தூதுவளைக்கீரையே ஆளவந்தார் விரும்பி உண்ணும் கறியமுது என்றறிந்து மடப்பள்ளிக்கு ஆறுமாத காலம் கீரையை அளித்து வந்தார். அப்போதும் இவரைப்பற்றி ஆளவந்தார் விசாரிக்காமல் இருக்கவே நாலுநாள் தூதுவளை கொடுப்பதைத் தவிர்த்து இருந்தார். ஆளவந்தார் அமுது செய்யும்பொழுது தூதுவளை இல்லாமல் இருப்பதேன் என்று வினவியபொழுது ஆறு மாத காலமாக ஒரு வயோதிக அந்தணர் அளித்து வந்தார். நாலு நாளாக வரவில்லை என்றனர். மறுநாள் மணற்கால் நம்பியும் இன்னமும் முயற்சி செய்து பார்க்கலாமென்றெண்ணி தூதுவளை கொண்டுவந்து மடைப்பள்ளியில் கொடுத்தார். அவர்களும் நம்பியை ஆளவந்தாரிடம் அழைத்துச்சென்றனர். ஆளவந்தாரும் அவரை நல்லமுறையில் வரவேற்று 'நீர் தூதுவளை கொண்டு வந்து கொடுக்கக் காரணம் யாது என்று வினவ, இவரும் உம்முடைய பாட்டனார் தேடி வைத்த நிதி ஒன்று என்னிடம் இருக்கிறது. அதை உம்மிடம் அளிப்பதற்கு நான் இங்கு வந்து போகத் தடை செய்யாமல் இருக்கும்படி உத்தரவிட வேண்டும் என்று கூறினார்.

அன்றுமுதல் அவ்வாறே செய்யுமாறு அரண்மனை ஏவலாளர்களுக்குக் கட்டளையிட்டிருந்தார் ஆளவந்தார். நம்பியும் தினமும் அரண்மனைக்குச் சென்று கீதையின் செம்மைப்பொருளை உபதே

சிக்க அதில் ஆவல்மிகுந்த ஆளவந்தார் எம்பெருமானை அடைய உபாயமேது என்று நம்பியைக் கேட்டார். நம்பியும் அவருக்கு சரம ஸ்லோகத்தை (சரணாகதி தத்துவத்தை) உபதேசித்து அவனை அடைய அவனே உபாயம் என்ற உறுதியை அவருக்கு உண்டாக்கினார். ஆழ்வார்கள் அருளிச்செயல்களையும் அவற்றின் அரும்பொருள்களையும் உபதேசித்தார். பின்னர் திருவரங்கத்திற்கு அவரை அழைத்துச்சென்று பெரிய பெருமாளைத் திருவடி தொழச்செய்து உங்களுடைய பாட்டனார் தேடிவைத்த பெருநிதி இதுவேயாகும் என்று காட்டிக்கொடுக்க, பெரியபெருமானிடம் ஈடுபட்ட ஆளவந்தார், ராஜ்ய பாரத்தைத் துறந்து துறவு பூண்டு ஸ்ரீ ரங்கத்தில் தர்ஸன நிர்வாகம் செய்து வந்தார். அக்காலத்திலே, பெரியநம்பி திருக்கோட்டியர் நம்பி, பெரிய திருமலைநம்பி, திருமாலையாண்டான் முதலான வைணவ பிராமணோத்தமர்களும், திருக்கச்சி நம்பி, மாறனேரிநம்பி முதலான பாகவதோத்தமர்களும் அவரை ஆஸ்ரயித்திருந்தார்கள். (அடைக்கலமடைந்திருந்தார்கள்).

பின்னர் மணற்கால் நம்பி, ஆளவந்தாரிடம் நாதமுனிகள் குருகைக் காவலப்பனிடம் யோக ரகசியத்தைத் தெரிந்து கொள்ளச் சொன்னதையும், அது நிறைவேறாமற்போனதையும் நாம் குருகைக் காவலப்பன் வைபவத்திலேயே தெரிந்து கொண்டோம். ஆளவந்தார் கோயில் நிர்வாகத்தின்போது நம் பெருமாள் திரு அத்யயன உத்சவத்தில், திருவரங்கப் பெருமாள் அரையர், ஆளவந்தார் திருமுகத்தைப்பார்த்து 'நடமினோ நமர்களுள்ளீர், நாமுமக்கறியச் சொன்னோம்' என்று பல காலம் பாடியருள, ஆளவந்தாரும், பெரிய பெருமாள், நியமனம் பெற்று திருவனந்தபுரம் சென்று சேவித்துத் திரும்பாமுன், இவருடைய பிரிவினால், மடத்துக்குக் காவலாயிருந்த தெய்வவாரியாண்டான், வாடி வலிய அவரை ஆளவந்தாரிடம் கூட்டிச்செல்லும்பொழுது பாதிவழியில் ஆளவந்தார் திரும்பி வரவும், அவரைக்கண்டபின் உடல் முன்போல் தேறி அவருக்கு ஆச்சார்ய கைங்கர்யம் செய்து வருவாராயினார்.

இந்நிலையில் தனக்குப்பின் இந்தத் தர்ஸனத்திற்கு அதிகாரி யார் என்று மிகுந்த கவலையோடு இருந்தபொழுது காஞ்சியிலிருந்து வந்த இரு வைணவர்கள் ஆளவந்தாரிடம், யாதவப்பிரகாசன் என்ற ஏகதண்டி சந்நியாசியிடம் ஸ்ரீ பெரும்புதூர் இளையாழ்வார் என்ற ஒருவர் வேதாந்தம் கற்று வருகிறாரென்றும், அவர் வேதப் பொருளுக்கு விளக்கம் சொல்வது மிகவும் நன்றாக இருக்கிறது என்றும் சொன்னார்கள். ஒரு நாள் இளையாழ்வார் யாதவப்பிரகாச

ருக்கு எண்ணை தேய்த்துக் கொண்டிருக்கும்பொழுது யாதவப்பிர காசர் 'கப்யாசம்' என்ற பதத்திற்கு குரங்கின் ஆசனவாய் என்று தப்பர்த்தம் சொன்னதைக்கேட்ட இளையாழ்வார் மனக்கிலேசப் பட்டு கண்ணீர் விட அது அவன் தொடையில் விழ அவன் கிலேசத்திற்குக் காரணம் கேட்க, இவரும் சூரியனைக் கண்டு மலர்ந்த கமலம் போல பரமபுருஷன் கண்கள் என்று சொல்ல வேண்டியிருக்க தாங்கள் தப்பர்த்தம் சொல்லியதைக்கேட்டு வருந் தினேன் என்று சொன்ன சம்பவத்தைச் சொன்னார்கள்.

இந்த விருத்தாந்தங்களையெல்லாம் கேட்ட ஆளவந்தார் இளையாழ்வாரது மேதா விலாசத்தையும், ஞானவைராக்யங்களை யும் கேட்ட மாத்திரத்திலேயே மிகவும் மகிழ்ந்தவராய், அவரைக் காண வேண்டும் என்ற ஆவலுடன் பெரிய பெருமாள் அனுமதி பெற்று காஞ்சி சென்று, அங்கு திருக்கச்சி நம்பிகள் மிகவும் பக்தியோடு இவரை வரவேற்க இவரும் மிக உகந்து பேரருளாள ருக்கு அவர் ஆலவட்டக் கைங்கர்யம் செய்து வருகிறதை சிலாகித்து அவரையும் உடன்கொண்டு அங்கு கோயில் அருகிலுள்ள புற்றின் சமீபத்தில் உள்ள திருவனந்தாழ்வானையும், கரிய மாணிக்கத்தாழ் வாரையும் சேவித்து வரும்பொழுது யாதவப்பிரகாசருடைய கூட் டம் வரக்கண்டு, இதில் யார் இளையபெருமாள் என்று கேட்க நம்பியும் சிவந்து நெடுகி வலியவராய், ஆஜானுபாகுவாய் நடுவில் வருகிறவர் என்று காட்டக்கண்டு மிகவும் மகிழ்ந்து 'ஆம் முதல் வன் இவன்' என்று மனதில் தெளிந்து, பின்னர் பேரகுளாளரிடம் அடியேனுக்கு இளையாழ்வாராகிய மகானைத் தர்ஸனத்திற்குத் தந்தருள வேண்டும் என்று வேண்டிக்கொண்டு அப்போது அவ ருக்கு ஒரு நல்வார்த்தை சொல்ல வாய்ப்பில்லாததால் மீண்டும் திருவரங்கம் கோயிலுக்கே எழுந்தருளினார். இவரது அபிலாஷை நிறைவேறி இளையாழ்வார் கோயில் நிர்வாஹத்தைக் கைக் கொண்ட வரலாற்றை பார்க்கும்முன்பே இறந்துவிட்டார் என்பதை இளையாழ்வார் வைபவத்தில் காண இருக்கிறோம்.

ஆளவந்தார் தமக்கு உடல்நலக்குறைவு ஏற்பட்டவுடனேயே கோயில் தர்ஸனத்தை இளையாழ்வாரிடம் கொடுக்க எண்ணி, பெரியநம்பி ஸ்வாமிகளைக் காஞ்சிக்கு அனுப்பி அவரைத் திருவ ரங்கத்துக்கு அழைத்து வரப்பணித்தார். ஆனால் அவர் வருமுன்பே ஆளவந்தார் பரமபதித்து விட்டதால், அவரை உயிரோடு நேரில் காணாத விரக்தியினால், ஏமாற்றமடைந்து காஞ்சிக்கே திரும்பச் சென்று விடுகிறார் இளையாழ்வார். ஆளவந்தாரது திருமேனியை

இளையாழ்வார் கண்டு சேவிக்கும்பொழுது கைவிரல்கள் மூன்று மடங்கி இருப்பதைப்பார்த்து, முன்னர் இவரது விரல்கள் இவ்வாறு தான் இருந்தனவா என்று விசாரித்து இல்லை என்று தெரிந்த வுடனே, அவரது மனதில் ஏதேனும் நிறைவேறாத ஆசைகள் இருந்தனவா என்று கேட்க, அங்குள்ளவர்கள் ஆளவந்தார்க்கு மூன்று விருப்பங்கள் உண்டு. அவை, பிரம்ம சூத்திரத்துக்கு மாபாடியம் எழுதுதல், விஷ்ணு ஸகஸ்ரநாமத்திற்குப் பாடியம் எழுதுதல், திருவாய்மொழிக்கும் பாடியம் எழுதுதல் என்பன என்றார்கள். அவர் விருப்பத்தைத் தாம் நிறைவேற்றி வைப்பதாக உறுதிபூண்டு சபதம் செய்யவே, ஆளவந்தாரது மடங்கிய விரல்கள் மூன்றும் நிமிர்ந்தன என்பர்.

ஆளவந்தாரது அந்திமகாலத்தில் அருகிருந்த அவரது சீடர்கள் எங்களுக்கு இனியார் தஞ்சம் என்று கேட்க, உங்களுக்கு நாம் ஒருவரை உண்டாக்கியன்றோ பேறு பெறப்போகிறோம். உங்களு டைய இழவைத்தீர்த்து நாம் மாத்திரமன்றோ இழவோடு போகி றோம் என்றாராம். இவருக்கு ஆச்சாரியார் ஸ்ரீமத் நாத முனிகளும் புருஷாகாரர் (போதித்தவர்) மணற்கால நம்பியுமாகும். இவர் 125 ஆண்டுகள் வாழ்ந்திருந்தார் என்பர்.

'ஓம் நமோ நாராயணாய' என்ற திருமந்திரத்தில் முதற்பதமான பிரணவம் 'ஓம்' ஸ்வரூப ஞானத்தை விளக்கு கையாலே பகவத் சம்பந்தத்தையும் 'நம' பதம் பிரபத்தி வித்யா நிஷ்டை (சரணாகதி தத்துவம்)யையும், மூன்றாவதான 'நாராயணாய' என்ற பதம் பகவத் பாகவத கைங்கர்யமாகிற நல்லொழுக்கத்தையும் ஜீவனுக்கு விளைவிக்கிறது என்பது ஆளவந்தார் கருத்து. திருக்கோஷ்டியூர் நம்பி ஆளவந்தாரிடம் இறைவனை அடைய உபாயம் என்ன என்று கேட்க இறைவனுக்கும் ஜீவனுக்கும் உள்ள உறவு (பர்த்தா, பார்யா) கணவன் மனைவி உறவைப்போன்றது. அறியாமையாகிற அழுக்கு மண்டிக்கிடக்கும் ஜீவன் இவ்வழுக்கை அகற்ற அகற்ற, எம்பெரு மான் திருஉள்ளம், கணவன் மனைவியிடம் உள்ள குணநலன்களும் அழகும் வெளிப்பட வெளிப்பட அவளை நேசிப்பதைப்போல பக்தனிடம் மிகவும் ஈடுபடும் ஆகவே இவனுக்கு வேறு ஒரு உபாயமும் தேவையில்லை என்று கூறினார் என்பர்.

ஏழைக்குப் புதையல் கிடைத்ததைப்போல நமக்கெல்லாம் 'த்வைய மந்திரம்' என்பார் ஆளவந்தார். தம் சீடர்களில் ஒருவரான அம்மங்கி என்ற வாலிபனைப்பார்த்து 'உன்னுடைய வாலிப வயதைக் கவனிக்காமல் உனக்கு பகவத் விஷயத்தைச் சொல்லிவிட்

டேன். உடம்புக்கு இரையிட்டு ஆத்ம நாசத்தை விளைவிக்காமல், உயிருக்கு இரையிட்டு ஆத்ம ஜீவிதத்தை விளைவிப்பாயாக என்றா ராம். இறைவனை அணுகும்போது வேறு எந்தப்பலனையும் விரும்பாது இறைவனையே விரும்பித்தொழ வேண்டும். எம்பெரு மானாரின் திருவடிகளை உபாயமாக உடையவனாக இருக்கிறேன். அந்த எம்பெருமானார் யமுனைத்துறைவர் குலவிளக்காய் இருக்கி றார். அந்த யமுனைத்துறைவர் நாதமுனிகள் வம்சத்தவர். அந்த நாதமுனிகள் நம்மாழ்வார் வழிவந்தவர். அந்த நம்மாழ்வார் பெரிய பிராட்டியின் திருவருள் பெற்றவர். வரதராஜரே இவ்விதம் தேவ ருக்கு வழிவழித் தொண்டன். தேவரீர் திருவருளுக்கு உரியவனாகி றேன் என்பது கூரத்தாழ்வான் அருளிய 'ஸ்ரீவரதராஜஸ்தவம்' ஸ்லோகத்தின் தமிழாக்கச்சுருக்கம்.

> **'நிதியைப் பொழியும் முகிலென்று நீசர் தம்வாசல்பற்றித்**
> **துதிகற்றுலகில்து வள்கின்றிலேன. இனித்தூய்நெறிசேர்**
> **எதிகட்கிறைவன் யமுனைத் துறைவன் இணையடியாம்**
> **கதிபெற்றுடைய இராமானுசனென்னைக் காத்தனனே**

என்று இராமானுஜ நூற்றந்தாதியில் திருவரங்கத்தமுதனார் அருளிச் செய்கிறார்.

ஸ்ரீ தேசிகர் அருளிச் செய்த குருபரம்பராசாரம் என்ற நூலில் ஆளவந்தார் எழுதிய பிரபந்தங்கள் என்று ஆகமப்பிராமாண்யமும், புருஷ நிர்ணயம், ஆத்மஸித்தி ஈஸ்வர ஸித்தி, ஸம்வித்ஸித்தி என்ற ஸித்தித்திரயமும், ஸ்ரீ கீதார்த்த சங்கிரஹமும், ஸ்தோத்ரமும், சதுர்ஸ்லோகியும் ஆக எட்டு என்று குறிப்பிடுகிறார். அவரது குமாரர்கள் திருவரங்கப்பெருமாள் அரையர், தெய்வத்துக்கரசு நம்பி, பிள்ளை அரசு நம்பி, சொட்டை நம்பி என்று பெரிய திருமுடியடைவு குறிப்பிடுகிறது. இவர் திருநாட்டுக் கெழுந்தரு ளிய (இறந்த) இடம் பெரிய கோயில், திருப்பள்ளிப்படுத்தப்பட்ட (அடக்கம் செய்யப்பட்ட) இடம் திருப்பராய்த்துறையாகும்.

1) பரப்பிரம்மமே மாயையால் மறைக்கப்பட்டு அறிவு குறைந்த ஜீவனாகவும், சம்ஸாரத்தில் ஈடுபட்டதாகவும் ஆகிறது. 2) அந்தப்பரப்பிரம்மமே தேவர் மனிதர் முதலான உண்மையான சரீரங்களாகிற உபாதிகளோடு சம்பந்தப்பட்டு சம்சாரி ஜீவனாகி றது. அந்தப் பரப்பிரம்மமே உலகோடு இயல்பாகவே பேதாபேத முடையதாகையாலும், உலகமாகப் பரிணமிக்கையாலும் தோஷங் களுக்குக் கொள்கலமாகிறது. 'இவ்விதம் கூறும் சங்கரருடைய

*மாயாவாதமும் பாஸ்கரருடைய ஸத்யோபாதி மதமும், யாதவப்பி ரகாசருடைய பேதா பேதமதமுமாகிற மூன்று மதங்களும் ஸ்ருதிக் கும் யுக்திக்கும் பொருந்தாதவையாகும். ஆயினும் மோகத்தை விளைவிக்கும் இம்மூன்று மதங்களாகிய இருள் எவரால் தமது நூல்களின் மூலம் நீக்கப்பட்டதோ, அந்த யமுனைத்துறைவரான ஆளவந்தார் வெற்றியுடன் விளங்குகிறார். ஆளவந்தாராகிய அமு தக்கடலில் மூழ்கி, அறிந்த அளவு நான் பக்தியோகமாகிற ரத் னத்தை எடுத்துக்காண்பிக்கிறேன் என்கிறார். ஸ்ரீ வைகுண்ட கத்ய மங்களாஸ்லோகத்தில் கூரத்தாழ்வான்.*

என்னுயிர் தந்தளித்தவரைச் சரணம் புக்கு
யானடைவேன் அவர் குருக்கள் நிறைவணங்கி
இன்னருளால் பெரும்புதூர் வந்த வள்ளல்
பெரியநம்பி, ஆளவந்தார் மணற்கால்நம்பி
நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக்கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனைநாதன்
இன்னமுதத் திருமகள் என்றிவரை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே.

நீளவந்தின்று விதிவகையால் நினை ஒன்றிய நாம்
மீளவந்தின்னும் வினையுடம் ஒன்றி விழுந்துழலாது
ஆள வந்தாரென்றுவந்து அருள்தந்து விளங்கிய சீர்
ஆளவந்தா ரடியோம படியோமினி அல்வடிக்கே.

*என்று அருளிச்செய்கிறார் ஸ்ரீ தேசிகர் அதிகாரசங்கிரஹம் என்ற நூலில்.*

*இனி ஆளவந்தார் அருளிச்செய்த நம்மாழ்வார் தனியன்.*

'மாதாபிதா யுவதயஸ்தநயாவிபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
அத்யஸ்யந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா ॥ ஸ்தோத்ரம்

*என் குலத்தவர்க்குத் தாய், தந்தை, மனைவி, மக்கள், செல்வம் ஆகிய அனைத்தும் என்றும் எதுவேயாகிறதோ எங்களுக்கு ஆதி குலபதியான நம்மாழ்வாரின் வகுளமாலையால் அழகு பெற்று விளங்கும் அந்தத் திருவடியினைத் தலையால் வணங்குகிறேன் என்பது அதன் பொருள்.*

*ஆளவந்தாரது வாழித்திருநாமம்.*

மச்சணியும் மதிரைங்கம் வாழ்வித்தான் வாழியே.
மறைநான்கும் ஒருருவில் மகிழ்ந்து கற்றான் வாழியே.
பச்சையிட்ட இராமர் பதம் பகருமவன் வாழியே.
பாடியத்தோன் ஈடேறப் பார்வை செய்தோன் வாழியே.
கச்சிநகர் மாயனிருகழல் பணிந்தோன் வாழியே.
கடக வுத்த ராடத்துக் காலுதித்தோன் வாழியே.
அச்சமற மன மகிழ்ச்சியணைத் திட்டான் வாழியே.
ஆளவந்தார் தாளிணைகள் அனவரதம் வாழியே.

***ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.***

# பெரிய நம்பி வைபவம்

ஆளவந்தார் பிறந்து 21 வருடங்களுக்குப்பின்னர் (கி.பி. 997-98-ல்) மார்கழிக்கேட்டையில் பிராமணகுலத்தில் பரத்வாஜ கோத்திரத்தில் பராங்குச தாஸர் என்ற திருநாமத்தில் அவதரித்தவர் பெரியநம்பி ஸ்வாமிகள். ஆளவந்தாருடைய சிஷ்யர்களில் பெருமை பெற்றவர் இவர்தான். எம்பெருமானாருக்கு ஸமாச்ராய ணம் செய்தவர். ஆளவந்தார் காலத்திற்குப்பின் ஆளவந்தாரது மற்ற சிஷ்யர்கள் கேட்டுக்கொண்டதன் பேரில் இவரே இராமானுஜரை திருவரங்கர் சேவைக்கு அழைத்துவரக் காஞ்சிக்குச் சென்றவர். காஞ்சியில் தேவப்பெருமானின் நியமனம் பெற்று, இராமானுச ரும் இவரிடம் சரண்புக எண்ணி திருவரங்கத்துக்குப் புறப்பட இருவரும் வழியில் மதுராந்தகம் ஏரிகாத்த பெருமாள் கோவிலில் சந்திக்க நேர்ந்தது. அங்கு இராமானுசருக்கு ஸமாச்ரயணம் நடை பெற்றது.

எம்பெருமானார் வெள்ளை உடுத்தி மேல் நாட்டுக்குச் சென்ற பொழுது, கூரத்தாழ்வானோடு சோழராஜனது சபைக்குச்சென்று நம் தர்ஸனத்திற்காகத் தம்தர்ஸனத்தையும் (கண்களையும்) உயிரை யும் இழந்தவர் தியாக மூர்த்தியான இந்தப் பெருமகனார். இவர்தம் குமாரரான புண்டரீகாக்ஷரையும் பெண்ணான அத்துழாயையும் எம்பெருமானாருடைய திருவடிகளிலேயே சரணமடையச் செய்த வர். ஆளவந்தாரது சிஷ்யரான தாழ்ந்த குலத்தில் பிறந்த மாரனேரி நம்பிக்கு ஈமச்சடங்குகள் செய்து பெருமை பெற்றவர். இவரைப் பற்றிய விரிவான செய்திகளை இராமானுசருடைய வைபவத்தில் காண உள்ளோம்.

ஆளவந்தாரது சீடர்கள் எல்லோரும் கூடியிருந்து பெரிய நம்பியிடம், இனி இந்தத் தர்ஸனத்தை நடத்துபவர் யார்? என்று கேட்க இவரும் முன்னர் இராமானுஜர், தான் ஆளவந்தாரது மூன்று ஆசைகளையும் நிறைவேற்றுவதாகச் சொன்னவுடனேயே அவரது விரல்கள் நிமிர்ந்தனவே, அந்தக் குறியீடே ஆளவந்தார் தமக்குப் பின் அந்தப்பணியை இராமானுஜர்தான் செய்ய வேண்டும் என்று விரும்பினார் என்பதைத் தெரிவிக்கவில்லையா என்று சொல்ல, எல்லோரும் இராமானுசரையே தம் ஆச்சாரியராக முடிவு செய்து அவரைக் காஞ்சியிலிருந்து திருவரங்கத்துக்கு அழைத்து வருமாறு பெரிய நம்பியையே அனுப்பினார்கள். அவரும் அப்போதே குடும்ப சகிதமாகப் புறப்பட்டு நம் பெருமாள் அனுமதி பெற்று,

காஞ்சிக்குச் செல்லும் வழியில், மதுராந்தகத்தில் ஏரிகாத்த பெரு மாள் கோயிலிலே, இராமானுஜரும் ஸ்ரீரங்கம் செல்லும் வழியில் அங்குவர இருவரும் சந்தித்து மிகப்பிரீதியுடன் தழுவிக்கொண்டு மகிழ்ந்தனர். இளையாழ்வாரும் பெரிய நம்பியைத் தனக்கு அப் போதே ஹிதோபதேசம் செய்து ரட்சிக்க வேண்டும் என்று விண் ணப்பிக்க, பெரிய நம்பியும் இவருடைய ஆர்வத்தைக்கண்டு மகிழ்ந்து திருவிலச்சனை பிரசாதித்து (சங்கு சக்கர முத்திரைகளைக் கையில் பொரித்து) தன் வலது புறத்தில் அடக்கத்தோடும் அஞ்சலி யோடும் கூடிய சீடனை இருத்தி ஞானத்தைத் தரவல்ல தனது வலது கரத்தைச் சீடனின் சிரசில் வைத்து தனது இடது கையைச் சீடனின் மார்பில் வைத்து, அருளுடன் சீடனை ஆச்சார்யன் காப்பாற்றக்கடவன், தன் ஆச்சார்யனை இருதயத்தில் தியானித்து குருபரம்பரையை ஜபித்து, இவ்வகையாக எம்பெருமானைச் சரண மடைந்து, ரிஷி, சந்தஸ் தேவதைகளுடன் கூடிய மூமலந்திரத்தைத் தானே சீடனுக்குக் கருணையால் உபதேசிக்கக் கடவன் என்று சொல்லுகிறாப்போல, ஆளவந்தார் திருவடிகளை மனதில் தியா னம் பண்ணிக்கொண்டு த்வயத்தை (மந்திரத்தை) இராமானுஜ ருக்கு அவரது வலது காதில் ஓதினார்.

இராமபிரான் தன் பாதுகைகளைப் பரதாழ்வானிடம் கொடுத் துக் காட்டுக்குப் போனாற்போல, ஆளவந்தாரது ஏவலாளன் நான். உமக்கு நேரே ஆச்சார்யார், யமுனைத் துறைவரான ஆளவந்தாரே என்று கூறினார். ஆதலால்தான் இராமானுஜ நூற்றந்தாதியில் பிள்ளை அமுதனார் 'எதிகட்கு இறைவன் யமுனைத்துறைவன் இணையடியாம் கதிபெற்றுடைய இராமானுஜன் 'என்றருளிச் செய் தார். இராமானுஜரும் 'பிரமாணம் எது? பிரமேயம் எது? பிரமாதாக் கள் யார்? என்று பெரிய நம்பியைக் கேட்க, அவரும் மாதவன் பேர் சொல்வதே ஓத்தின் சுருக்கு என்றபடியே 'பிரமாணம் த்வய மே'. பிரமேயமும் அத்தகிரி மேலிருக்கும் பெருமாளே, பிரமாதா நீர்தாம். இந்தப்பிரமாணத்தாலே பிரமேயத்தை அனுபவிக்க வாரும் என்று கூறினார். இருவரும் காஞ்சியில் பெருமாள் கோவி லுக்குச் சென்றார்கள். அங்கு திருக்கச்சி நம்பியும் பெரிய நம்பியைச் சரணடைய அவரையும் ஆசீர்வதித்து ஏற்றுக்கொண்டார்.

இராமானுஜர் பெரிய நம்பிகளைக் குடும்பத்துடன் தன் இல் லத்துக்கு அழைத்துச்சென்று தம் தேவியையும் பெரிய நம்பி திருவடிகளில் ஆஸ்ரயிக்கச் செய்தார். பெரிய நம்பி இளையாழ்வா ருக்கு திருவாய்மொழி நீங்கலாக அருளிச்செயல் மூவாயிரத்தை

யும், தர்ஸனார்த் தங்களையும் போதித்துக் கொண்டிருக்கும் பொழுது அவ்விருவருடைய தேவிகளுக்குள்ளும் மனஸ்தாபம் வர, பெரியநம்பி, இளையாழ்வாரிடம் சொல்லாமலே மனைவியு டன் ஸ்ரீரங்கத்திற்குத் திரும்பிவிட்டார்.

பெரிய நம்பி திருமகளாரான அத்துழாய் புக்ககத்தில் வாழுங் காலத்தில், ஒருநாள் நீராடி வரத்துணைக்கு வருமாறு மாமியாரை வேண்ட அவளும் உன் சீதன வெள்ளாட்டியை அழைத்துக் கொண்டு போ என்று சொல்லி விடவே, அத்துழாய் பெரிய நம்பியிடம் விவரம் கூற அவர் 'எனக்குத் தெரியாது. உங்கள் ஜீயரிடம் (இராமானுஜர்) சொல் என்று கூறிவிட, அவளும் அங்கே போய் விண்ணப்பம் செய்ய, ஜீயரும் அருகிருந்த முதலியாண் டானை 'இந்தாரும் உமக்குச் சீதன வெள்ளாட்டி' என்று சொல்லி 'போம்' என்ன ஆண்டானும் கூடப் போய் நீராடப்பண்ணுவித்து அவளுடைய புத்தகத்தில் வேலை செய்யத் தொடங்க, புக்ககத்தார் அவரிடம் 'ஆண்டான் இது என்' என்று கேட்க அவரும் என்னை வரவிட்ட ஜீயரைக் கேளுங்கள். ஆச்சார்யார் சொன்னதைச் செய்ய வேணுமே' என்று சொல்லிவிடவே அவர்களும் பெரிய நம்பியி டம் போய், 'முதலியாண்டானை அனுப்பி எங்களை இப்படித் தண்டிக்க வேண்டுமா' என்று கேட்க அவரும் 'நான் அறிந்தேனா? ஜீயரைக் கேளுங்கள் என்று சொல்லி விடவே அவர்களும் அங்கே சென்று விண்ணப்பிக்க இராமானுசரும், அத்துழாய்க்குச் சீதன வேலைக்காரியாகத் தந்தோம் அவர் அங்கிருப்பது பிடிக்கவில்லை யாகில் இங்கிருந்து அடிமை செய்கிறார் என்று மீண்டும் அவரை அழைப்பித்துக் கொண்டார்.

பெரிய நம்பி மாறனேரி நம்பிக்கு அந்திமக்கிரையகள் செய்த தைக் கேட்ட இராமானுஜர் அவரிடம் 'இவ்வாறு செய்யலாமா' என்று கேட்க அவரும் இக்ஷ்வாகு வம்சத்து இராமபிரான் சடாயுக்கு ஈமக்கிரியைகள் செய்யவில்லையா? அவரைவிட நான் உயர்ந்த வனா? ஜடாயுவை விட இவர் தாழ்ந்தவரா? தருமபுத்திரன் விதுரனுக்குச் செய்யவில்லையா? தருமரைக் காட்டிலும் நான் உயர்ந்தவனா? விதுரனைக்காட்டிலும் இவர் சிறியவரா? இத்த கைய மகான்கள் விஷயத்திலாவது இதைச் செய்யாவிடில் நம்மாழ் வார் அருளிச்செய்த 'பயலுஞ்சுடரொளி' (திருவாய் 3:7) நெடுமாற் கடிமை (திருவா 8:10) என்னும் திருமொழிகள் கடலோசை போல பொருளற்றதாகிவிட்டதா என்று சொல்ல இராமானுஜரும் கேட்டு உகந்து இசைந்தார்.

பெரியநம்பி செய்த இக்காரியத்தைக் கண்டு ஸ்ரீரங்கத்தில் அந்தணர் பெரும்பாலோர் அவரைத் தள்ளிவைத்தனர் என்றும், நம்பெருமாள் சித்திரைத் தேரில் எழுந்தருளும்போது, பெரிய நம்பி திருமாளிகையிலிருந்து தேர் நகராமல் நிற்கவே அவருக்கு அருளப் பாடிட்டுத் தீர்த்தப்பிரசாதம் சாதித்து அவர் பெருமையை அனை வருக்கும் உணர்த்தியபின்னரே தேர்மேலே புறப்பட்டது என்பதும் வரலாற்றுச்செய்தி.

சோழ மன்னனால் கண்கள் பிடுங்கப்பட்டு சோழபுரத்திலி ருந்து ஸ்ரீரங்கம் திரும்பி வரும் வழியில் பெரிய நம்பிக்கு அந்திம காலம் நெருங்கிவரும்பொழுது உயிர் பிரியுமுன் ஸ்ரீரங்கம் சென்று விட வேண்டும். வேகமாகச் செல்ல வாகனம் இருந்தால் நன்றாக இருக்கும் என்று அவர் குமாரி அத்துழாய் தெரிவித்தபோது இங்கேயே உயிர் பிரிந்தாலும் எம்பெருமான் அருளாலே பரமபதம் நிச்சயம். ஸ்ரீரங்கத்துக்குப்போய் பிராணனை விட்டால், மற்றுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களும் இதை முன்மாதிரியாகக் கொண்டு ஸ்ரீரங்கத் தில் மரணமடைந்தால்தான் மோட்சம் என்று முடிவுகட்டி மற்ற இடங்களில் உயிர்விடப் பயப்படுவார்கள் என்று சொல்லி வழியி லேயே பரமபதமடைந்தார் என்று அறிகிறோம்.

பதிவிரதைக்கு மங்கள சூத்திரம் போல நமக்குத் 'த்வையம்' என்பார் பெரியநம்பி. ஒருதரம் பிள்ளை உறங்காவில்லிதாஸர் என்ற வைணவர் இராமானுஜரிடம், விபீஷணாழ்வார், இராமபிரா னிடம் சரணம் புக வந்தபோது, வானர சேனைகள் அவரைத் தடியாலும் கல்லாலும் அடித்தனர் என்பதை எண்ணிப்பயப்படுகி றேன் என்றபோது இராமானுஜர் கமுகுண்ணில் வாழை உண்ணும். எமக்குப் பெரிய நம்பியுண்டு. உமக்கு நானுண்டு. கமுகுக்குத் தண்ணீர் பாய்ச்சும்பொழுது வாழையும் அந்நீரை உண்டு வளருவ தைப் போல, பெரிய நம்பி சம்பந்தத்தைப்பார்த்து பெருமாள் என்னை ரக்ஷிப்பார். என் சம்பந்தத்தைப்பார்த்து உம்மையும் ரட்சிப் பார் என்று கூறித் தேற்றினாராம்.

ஒரு நாள் இராமானுஜரும் முதலிகளும் எழுந்தருள பெரிய நம்பி தண்டனிட இராமானுஜர் அஞ்சலி பண்ணிப்போக முதலிகள் இது ஏன் என்று வினவ, இராமபிரான் கட்டளையிட்டதற்கு இணங்கி பரதன் அரசபாரத்தை ஏற்றுக்கொண்டதைப்போல பெரிய நம்பி தண்டனிட்டதை ஏற்றுக்கொள்வதே நமக்கு ஸ்வரூ பம் என்றாராம்.

ஒரு நாள் பெரிய நம்பி திருக்கோஷ்டியூர் நம்பி திருமாலை யாண்டான் மூவருங் கூடியிருந்து தங்கள் ஆச்சாரியாரான ஆளவந் தார் வைபவத்தை எண்ணி அனுபவித்துக் கொண்டிருந்தபொழுது திருவரங்கச்செல்வர் (பலி சாதிக்கும் பெருமாள்) புறப்பட இவர்க ளது பகவத் பாகவத ஆச்சார்ய அனுபவத்துக்குத் தடை பிறந்து எழுந்திருந்து தண்டனிட வேண்டுமாகையால் கூட்டம் கலக்கியார் வந்தார். இனிமேல் பலிபெருமான் எழுந்தருளாத கோயிலிலேயே இருக்கக்கடவோம் என்று தீர்மானித்ததாகவும், இவ்வாறு மகாத் மாக்களுக்குத் தொல்லையாயிருப்பதைப் பார்த்த திருவரங்கச் செல் வர், தம்மைப் பலி சாதிக்க எழுந்தருளப் பண்ண வேண்டாம் என்று நியமித்துவிட்டதாகவும் அந்த நியமனம் இன்றளவும் நடப்பதாக வும் கூறுவர். வித்தாகுங்காய் பிஞ்சிலேயே தெரியும் என்றார் பெரியநம்பி, உலகம் வாழவந்தவர் எம்பெருமானார் என்பதை அவருடைய சிறுவயதிலேயே நாங்கள் கண்டு கொண்டு விட் டோம் என்ற கருத்தில்.

ஏற்றங்கள் பிராமணரல்லாத ஸ்ரீ வைஷ்ணவர்களிடமும் இருக் கிறது என்பதை மனதில் கொண்டே ஸ்ரீராமபிரான் ரிஷிகளைக் காட்டிலும் குகப்பெருமானிடமும், வானர முதலிகளிடமும், விபீ ஷணாழ்வாரிடமும் ஈடுபட்டார். நம் பெருமாள் லோகசாரங்க முனியைக்காட்டிலும் திருப்பாணாழ்வாரிடமும் திருமலையப் பன், முடிமன்னனாகிய தொண்டைமான் சக்கரவர்த்தியைக் காட்டி லும், குயவரான குறும்பறுத்த நம்பியிடமும் ஈடுபட்டார். பெரிய நம்பி பிராமண, ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய விரோதத்தைப் பொருட்படுத்தாமல் மாறனேர் நம்பிக்கு அந்திம ஸம்ஸ்காரங்கள் செய்தருளினார். ஆகவே இதை உணர்ந்தவர்கள் சாத்தாத முதலிக ளின் (பிராமணரல்லாதவர்) பெருமையை அறிவர்களாதலால் அவர்களிடம் அபசாரம் ஏற்படாது. எம்பெருமான் திருவடிகள் எளிதில் கிட்டும் என்று இராமானுஜர் முதலியாண்டானுக்கு அரு ளிச்செய்தார்.

ஆளவந்தாருடைய கட்டளையாலே ஸ்ரீ பாஷ்யகாரரான இரா மானுஜரை அங்கீகரித்த பூர்ணரான பெரிய நம்பி, அவரைத் தமக்கு நண்பர்களான திருக்கோட்டியூர் நம்பியிடம், அர்த்த சிக்ஷை பண்ண வும், திருமாலையாண்டானிடம் திருவாய்மொழி கேட்கவும், திரு வரங்கப்பெருமான் அரையரிடம் நல் வார்த்தை கேட்கவும் நியமித் தார். பெரிய நம்பி சோழ மன்னனால் இம்சிக்கப்பட்டு கண்ணை யும் இழந்து வரும் வழியில், இறுதிக்காலம் நெருங்கவே ஆழ்வான்

*மடியிலே கண்வரை, கோயிலும் பாஷ்யகாரரும் இருக்க, இங்கே மரணம் ஏற்படவா என்று ஆழ்வான் சோகிக்க, பெரிய நம்பி ஒரு பாகவதர் மடியைவிடக் கோயில் சிறப்பானதல்ல என்று கூறி உயிர் நீத்தார். பாஷ்யகாரருக்கு 'த்வயத்தை' அருளிச் செய்தவர் பெரிய நம்பி. அதன் அர்த்தத்தை அருளிச் செய்தவர் திருக்கோட்டியூர் நம்பி. ஞானபூர்ணரான ஆளவந்தார் சீடர் பெரிய நம்பி அருளிய திருப்பாணாழ்வார் தனியனில் இரு காவிரிகளுக்கு நடுவில் பள்ளி கொண்ட பெருமாளைத் திருவடிமுதல் திருமுடிவரை அனுபவித்து பேரானந்தம் கொண்ட நெஞ்சினராய்த் தம் கண்கள் மற்றொன்றைக் காணா என்று எவர் அறுதியிட்டாரோ, அந்த முனிவாஹனரை அனுசந்திக்கிறேன் என்றார். பெரிய நம்பிக்குத் திரு அவதாரஸ்த லம் கோயில் (ஸ்ரீரங்கம்) இவரது இதர திருநாமங்கள் பராங்குச தாஸர், மஹாபூர்ணர் பூரணாசார்யார் என்பன. இவரது குமாரர் பெயர் புண்டரீகாக்ஷர் திருவாராதனப்பெருமாள் அழகிய சிங்கன். இவரது ஆச்சாரியார் ஆளவந்தார். இவரது சிஷ்யர்கள் திருக்கச்சி நம்பி, எம்பெருமானார், மலைகுனிய நின்றார், சடகோபதாஸர், அணி அரங்கத்தமுதனார் (திருவரங்கத்தமுதனாரின் தந்தை) திரு வாய்க்குலமுடையார் பட்டர் முதலானோர். இவர் 105 ஆண்டுகள் வாழ்ந்தார். இவர் பிறந்த இடம், சோழ தேசத்தில் பசுபதி கோயில்.*

## *பெரிய நம்பி வாழித் திருநாமம்*

அம்புவியில் பதின்மர்கலை ஆய்ந்துரைப்போன் வாழியே.
ஆளவந்தார் தாளிணையை அடைந்துய்ந்தோன் வாழியே.
உம்பர்தொழும் அரங்கேசர்க்குகப்புடையோன் வாழியே.
ஓங்கு தனுக்கேட்டை தனில் உதித்தபிரான் வாழியே.
வம்பவிழ்தார் வரதருரை வாழ்வளித்தான் வாழியே.
மாறனேர் நம்பிக்கு வாழ்வளித்தான் வாழியே.
எம்பெருமானார் முனிவர்க் கிதமுரைத்தான் வாழியே.
எழில் பெரிய நம்பிசரண் இனிதூழி வாழியே.

***ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.***

## *திருக்கோஷ்டியூர் நம்பி வைபவம்*

*ஆளவந்தார் அவதரித்துப் 11 வருடங்கள் கழிந்தபின் கி.பி. 987-ல் பெரியாழ்வாருக்குப் பரம ஆப்தரான செல்வநம்பியின் சந்ததியில் பிராமண குலத்திலே திருக்குருகைப்பிரான் என்னும்*

திருநாமமுடையவராய்ப் பிறந்தார் திருக்கோஷ்டியூர் நம்பி. நாத முனிகளிடமிருந்து உய்யக்கொண்டார், மணற்கால் நம்பி மூலம் கிடைத்த அந்தப்பவித்ரமான இராமானுஜ விக்ரகத்தை ஆளவந்தார் தம்முடைய அந்திமகாலத்தில் இவரிடம் கொடுத்து அது வந்த வழியையும் கூறி ரகஸ்யார்த்தங்கள் அனைத்தையும் இராமானுஜ ருக்கு உபதேசிக்கும்படியும், நம் தர்ஸனத்தை அவர் நாமத்தாலே விளங்க வைக்கும்படியும் நியமித்துச் சென்றார். அதன்படியே நம்பியும், அனுவ்ருத்தி பிரசந்நாச்சாரியார் (ஓரோன்வழி ஆச்சார் யர்) பரம்பரை தன்னுடன் முடிவு பெற்று எம்பெருமானார் தொடங்கி (கிருபாமாத்ர பிரசந்நாச்சார்யார்) ஆசையுள்ளோர் அனை வரும் கற்கும் உரிமைகளுடைய பரம்பரை வளர வேண்டும் என்னும், திருவுள்ளத்தாலே ஸ்ரீ ராமானுஜரை பதினெட்டு முறை திருக்கோட்டியூருக்கு நடக்கச்செய்து வேறு யாருக்கும் உபதேசிக் கக்கூடாது என்று வாக்குறுதி பெற்றுக்கொண்டு அவருக்குத் திருமந் திரத்தை உபதேசிதார். இராமானுஜர் தம் எல்லையற்ற கருணையி னால் ஆச்சார்யார் கட்டளையையும் மீறித் தமக்கு நரகம் வ்நதாலும் வரட்டும். பலர் உய்ந்து போனால் போதும் என்னும் திருஉள்ளத்து டன் பலருக்கும் திருமந்திரத்தை உபதேசித்தார். இதைக்கேள்விப் பட்ட நம்பி 'எம்பெருமானாரே' என்று இராமானுஜரை அணைத் துக்கொண்டு, அவர் பெயராலேயே எம்பெருமானார் தர்சனம் என்றே அந்தத்தர்சனம் விளங்கட்டும் என்று அனுக்கிரகித்து அவ ருக்குத் தாமே சரம ஸ்லோகத்தை (சரணாகதிதத்துவத்தை) உபதே சித்து அதைத்தக்க அதிகாரிகளுக்கு உபதேசிக்கும்படி கட்டளை யிட்டார்.

திருமாலையாண்டானை எம்பெருமானாருக்குத் திருவாய் மொழி காலட்சேபம் சொல்லும்படி நியமித்தவரும் இவரே. ஆளவந்தாரிடம் கேட்காத அர்த்தங்களை விஸ்வாமித்ர சிருஷ்டி யாக (தானே புதிதாக உண்டாக்கி) எம்பெருமானார் கூறியதாலே கோபமடைந்த திருமாலையாண்டான் காலட்சேபத்தை நிறுத்திய பொழுது எம்பெருமானாருடைய பெருமையைத் திருமாலையாண் டானுக்கு எடுத்துரைத்து மறுபடியும் காலட்சேபம் தொடங்குமாறு செய்தவரும் இவரே. இராமானுஜர் உஞ்சவிருத்தி செய்து வரும் பொழுது ஸ்ரீரங்கத்தில் உள்ள ஒருவர் விஷங்கலந்த அன்னத்தை இட்டபடியால், இராமானுஜர் உபவாசமிருக்கிறார் என்று கேள்விப் பட்டுத் திருக்கோஷ்டியிலிருந்து பதறி ஓடிவந்து, எம்பெருமானார் சிஷ்யர்களில் கிடாம்பியாச்சானுக்கே, எம்பெருமானாரது திருமே னியில் பரிவு உள்ளதைச் சோதித்து தெரிந்து கொண்டு அவரை

*உடையவருக்கு மடப்பள்ளிக் கைங்கர்யம் செய்யுமாறு நியமித்தவரும் இவரே. இவற்றிலிருந்து இவர் ஒரு பெரிய தீர்க்கதரிசி என்பதும் எம்பெருமானாரிடம் பொங்கும் பரிவை உடையவர் என்பதும் தமக்குக் கெட்ட பெயர் ஏற்படும் என்றாலும் எம்பெருமானாருக்குச் சிறப்பு விளைவிப்பதில் ஊன்றி நின்றவர் என்பதுவும், ஆளவந்தார் சிஷ்யர்களில் தலைமை பெற்றவர் என்பதும் விளங்குகிறது.*

*இவர் குமாரத்தி தேவகிப்பிராட்டி ஒரு ஞானாதிகை (ஞானம் வாய்க்கப்பெற்றவர்). எம்பெருமானாருடைய சிஷ்யை! உந்துமத களிற்றன் பாட்டை (திருப்பாவை 18) எம்பெருமானார் பாடிக் கொண்டு உஞ்சவிருத்திக்கு வந்தபொழுது திருக்கோட்டியூர் நம்பி வாசலிலே செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப வந்து திறவாய் மகிழ்ந்து என்று பாடிய அளவிலே, தேவகிப்பிராட்டியார் கதவைத்திறக்க அவளை நப்பின்னையாகவே எண்ணித்திருவடியில் விழுந்தார், எம்பெருமானார் என்ற விபரம் பல நூல்களில் காண்கிறோம்.*

*திருக்கோஷ்டியூர் நம்பி திருமாளிகை வாசலிலே திருப்பாவை அனுசந்தானத்துடனே தண்டன் சமர்ப்பித்து சீரார் வளையொலிப்ப வந்து திறவாய் மகிழ்ந்து என்ற விருத்தாந்தம் ராமானுஜார்ய திவ்ய சரிதையில் பின்வருமாறு உள்ளது.*

மாதுகரத்துத் கெழுந்தருளிவரும் போதன்றிப் போம்போதும்
ஓதும் கோதைதிருப்பாவை உரையோடுலாவித்திரிபவரும்
வேதம் வல்ல திருக்கோட்டி நம்பி மனையில் மெய்ஞானப்
போதமுடையார் ஆங்கொரு நாள்புக்கார் உந்துமகளிற்றில்.
(மாதுகரம்-பிக்ஷை, மெய்ஞ்ஞான போதம் மெய்ஞான அறிவு).
பந்தார் விரலி உன் மைத்துனன் பேர்பாடச்
செந்தாமரைக்கையால் சீரார் வளையொலிப்ப
வந்தாரணங்கே திறவென்ன வாசலின்முன்
எந்தாதை நின்றார், அவ்வெல்லையினில் நம்பிதரும்
அன்னமென் நடையாள் தேவகியென்னும்
அரும்பெயருடைய ஆரணங்கு
தன்னொரு கரத்தால் கந்துகமொன்று
தாங்கியோர் தாமரைக் கையால்
இன்னிசை எதிகட்கிறைவனார்திறவென்
றிசைத்தசொல் இறுமுனம் திறந்தாள்
மின்னுமா மணி சேர்ந்திலங்கிய கபாடம்

விண்டுவின் தொண்டர் மெல்லியவாள்.
கண்டனர். பின்னைப் பிராட்டி மற்றிவளும்
கள்வனேன் பொருட்டினாலலர்ந்த
புண்டரீகச்சீர் திருவடிவருந்தப்
போந்திவை திறந்தனளென்னப்
பண்தரும் பனுவல் மறந்தனர், மண்ணில்
பதைப்புற வொடுங்கினர், விழுந்தார்
ஒண்டொடி கண்டு வெகுளியோடேகி
உற்றதைப் பெற்றவர்க் குரைப்பாள்
என்றிவை மகளார் இயம்பிட நம்பி
இன்பமுற்றிருந்து இளையாழ்வீர்!
ஒன்றுசீர் உந்து மதகளிறென்ன
ஓதிய பாடலோ சந்தை
இன்று நம் வாசல் தலையுறுமளவில்
என்றனர். 'ஆம்' என எழுந்து
சென்று மா மாதுகரம் பரிமாறத்
தேசிகக் குன்றையும் வணங்கி

*என்று வடிவழகிய நம்பி தாஸராலும் இவ்விருத்தாந்தம் வர்ணிக்கப் பட்டுள்ளது.*

*இராமானுஜர் திருகர்கோட்டியூர் சென்று அங்குள்ளவர்களிடம் நம்பி திருமாளிகை எங்கே என்று கேட்க அவர்களும் அதோ தெரிகிற கூரை என்று கூறக்கேட்டு அவ்விடத்திருந்தே நம்பி திருமாளிகையளவும் தண்டனிட்டுக்கொண்டே எழுந்தருளியதால், அவ்வூரிலுள்ள, குற்றமின்றிக் குருக்களுக்கு அனுகூலராய் வாழும் நல்லவர்கள் நம்பியின் பெருமையை அறிந்து அவரை வழிபடலா யினர்.*

*ஒரு நாள் திருக்கோட்டியூர் நம்பி கோயில் தர்ஸனம் செய்து திரும்பும்பொழுது எம்பெருமானார் அவரை அணுகித் தனக்குத் தஞ்சமாயிருப்பதொரு நல்வார்த்தை அருளுமாறு வேண்ட அவரும் தான் ஆச்சார்யார் ஆளவந்தார் நீராடும்பொழுது அவரது திருமுகுது இருக்கும் அழகைக்கண்டு அதுவே தஞ்சம் என்றிருப்பேன். நீரும் மறவாமல் இதை நினைத்திரும் என்றாராம் கூரத்தாழ்வான் ஒரு மாத காலம் உபவாசமிருந்து இராமானுஜரிடமிருந்து சரமஸ்லோ கத்தின் பொருளை அறிந்து கொண்டவராதலால், முதலியாண் டான், திருக்கோஷ்டியூர் நம்பி பக்கம் ஆறுமாதம் தொண்டு செய்து*

அவரிடம் ஸ்வரூப சிட்சை பெற்றபின்னர் இராமானுஜரிடம் சரம ஸ்லோகார்த்தத்தைப் பெற்றார்.

திருக்கோஷ்டியூர் நம்பி இராமானுஜருக்கு அருளிச்செய்த உபதேச மொழிகள் வருமாறு. ஒரு பக்தனது நித்தியக்கடமைகள் முறையே, ஆஸ்ரயன விரோதி, அதாவது நான், எனது என்னும் அகங்கார மமகாரங்களும் உடலின் மேல் உள்ள ஆசையும் நீக்கு தல், அடுத்தது புருஷாகாரமான பிராட்டியையும், ஆச்சார்யர்களை யும் அவமதிக்காது இருப்பது, அடுத்து பகவத் பிராப்தி (அருள்) கிடைக்குமோ கிடைக்காதோ என்ற ஐயமும் ஒரு ஜீவனை எம்பெ ருமானை அணுகாதபடி தடுத்து விடுகின்றது என்ற கருத்து, அடுத்து ஸ்ரவண விரோதி என்பது தன்னை மறந்து மற்ற தெய்வங்களைப் பற்றிய கதைகளைக் கேட்பது எம்பெருமானைப்பற்றிய பெருமை களைக் கேட்பதைத் தடுத்துவிடும் என்ற கருத்து, அடுத்து அனுபவ விரோதி என்பது சந்தனம், புஷ்பம் முதலான போகப்பொருள் களை உபயோகிப்பதால் உலக இச்சைகளில் பற்றுகளை விளை விப்பதன் மூலம் பகவதனுபவத்தைத் தடுத்துவிடும் என்ற கருத்து. அடுத்து ஸ்வரூபவிரோதி என்பது எம்பெருமான் இட்ட வழக்காக பரதந்திரனாக இல்லாமல் தன்னை ஸ்வதந்தந்திரனாக நினைத்து அவன் ஆணையை மீறுவது. அடுத்து பரத்வவிரோதி என்பது பிரமன், உருத்திரன் முதலான தேவதைகள் தன்னைவிட விஞ்சிய வர்களாக இருப்பதால் அவர்களை வணங்கினால் எம்பெருமானு டைய பரத்வத்தை அறிய முடியாதபடி தடுத்துவிடும் என்ற கருத்து அடுத்து பராப்தி விரோதி என்பது எம்பெருமானை இனியவனாக நினையாது தனக்கு உடல் சம்பந்தமான காரியங்களைச் செய்து தரும் பாவனனாக நினைப்பவரோடு சேருவது பகவத்பிராப்தி யைத் தடுத்துவிடும் என்ற கருத்து என்பதாகும்.

பொன்னைப்புடம் போடப் போட ஒளி விஞ்சுவதைப்போல ஜீவாத்மா ஸ்வரூபம் பொன் போல குற்றமற்றது. தேகசம்பந்தத் தால் ஏற்பட்ட அழுக்குகள் நீங்கி முக்தி நிலையில் அனன்ய சேஷத்வம், அனன்ய சரணத்வம், அனன்யபோக்யத்வம், ஸம்ஸ் லேஷத்தில் (கூடினால்) தரிப்பது, பிரிந்தால் தரியாமை, எம்பெரு மானிட்ட வழக்காயிருக்கை என்னும் ஆறு வகையாலே ஜீவனுக்கு நற்கதி உண்டாகும் என்ற கருத்து. எம்பெருமான் உபேயமாகும் போது பிராட்டிமார் நித்ய முக்தர்கள் முதலானவர்களோடு சேர்ந்தே உபேயமாகிறான்.

*திருக்கோஷ்டியூர் நம்பி தனது அந்திம காலத்தில் தன் குமாரத்தி தேவகிப்பிராட்டியிடம் என் பிரயாணத்தில் (மரணத்தில்) நீ நினைத்திருப்பது என் என்று கேட்க, 'அய்யரே, எங்கள் ஆச்சார்யரான எம்பெருமானாரோடு உண்டான சம்பந்தத்தினால் தேவரீருக்கு நற்கதி உண்டாகப் போகிறது என்று நினைத்தேன்' என்றாளாம். அவரும் தன் மகளிடம் ஆளவந்தாரிடம் பெற்ற இராமானுஜர் விக்ரகத்தைக் கொடுத்து வளர்த்ததனால் ஆயபயன் பெற்றேன் என்று கூறி எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்று கூறி திருநாடு ஏகினார்.*

*திருக்கோட்டியூர் நம்பியின் வேறு திருநாமங்கள்:- கோஷ்டிபூரணர், கோஷ்டி புரீசர், என்பன. இவரது குமாரரான தெற்காழ்வானும், இராமானுஜரது சீடரே. இவரது இருப்பிடம் திருக்கோஷ்டியூர். இவர் 105 ஆண்டுகள் வாழ்ந்தார்.*

***திருக்கோஷ்டியூர் நம்பி வாழித்திரு நாமங்கள்.***

1. மன்னியசீர் ஆளவந்தார் மலர்ப்பதத்தோன் வாழியே.
   வைகாசிரோஹிணிநாள் வந்துதித்தோன் வாழியே.
   இன்னிளவஞ்சிக்கினிதுரைத்தான் வாழியே.
   எம்பெருமானாரெனும்பேர் இயம்புமவன் வாழியே.
   தென்னணியாம் காசிபகோத்திரத்துதித்தான் வாழியே.
   திருக்குருகைப்பிரான் எனும் பேர் திகழ வந்தான் வாழியே.
   முன்னரரும் பெரும் புதூர் முனிக்குரைத்தான் வாழியே.
   மொழிந்த திருக்கோட்டி நம்பி மூதுலகில் வாழியே.

2. காசிபன் தன் கோத்திரத்தைக் கருதி வந்தோன் வாழியே
   கலையனைத்தால் முன்னவர்க்குக் கதியளித்தான் வாழியே.
   மாசற மெய்ப்பொருள் எதிக்கு வழங்குவோன் வாழியே.
   வையகமுன் தர்சனத்தால் வாழுமென்றான் வாழியே.
   ஏசறவே யுகந்தெதியை எடுத்தணைத்தான் வாழியே.
   எம்பெருமானாறெனும் பெயர் இயம்புமவன் வாழியே.
   தேசுபுகழ் செல்வன் மொழி தேர்ந்துரைப்பான் வாழியே.
   திருக்கோட்டியூர் நம்பி சகதலத்தில் வாழியே.

3. ஈரேழு மூன்றொன்றில் இதமுரைத்தான் வாழியே.
   ஏற்றமா ஆளவந்தாரிணையடியோன் வாழியே.
   ஈரெழுவருக்கும் பதம் ஈயுமவன் வாழியே.

எம்பெருமானாரெனும் பேரியம்புமவன் வாழியே.
நாலேழில் நாலாநாள் நாடிவந்தான் வாழியே.
நன்மதுர கவிநிலையை நண்ணினான் வாழியே.
நாலேழு நாலெழுத்தை நன்குரைத்தான் வாழியே.
நங்கள் திருக்கோட்டி நம்பி நற்பதங்கள் வாழியே.

4. அல்லும் பகலும் ஆளவந்தார் அடிநினைவான் வாழியே.
அனவரதம் தெற்காழ்வார்க் காட்செய்வோன் வாழியே.
வெல்பொருள்வெளியிட எதியை வெறுத்துரைத்தான் வாழியே.
மேதினியோர் உய்வெரென்று மெச்சினான் வாழியே.
உள்மந்திர மெதிராசர்க்கொளித்துரைத்தான் வாழியே.
உந்துமதத்தெதியை உகந்தணைத்தான் வாழியே.
செல்வநம்பி குலம்தழைக்கச் செகத் துதித்தான் வாழியே.
திருக்கோட்டியூர் நம்பி செகதலத்தில் வாழியே.

*பெரியாழ்வாரது நண்பரும் ஸ்ரீவல்லபதேவனென்னும் பாண்டிய மன்னது மந்திரியுமாயிருந்த செல்வநம்பி குலத்தில் பிறந்தவரென்று இந்த வாழித்திருநாமத்திலிருந்து தெரிகிறது.*

### *திருமாலையாண்டான் வைபவம்*

*திருக்கோட்டியூர் நம்பி பிறந்த மறு வருடம் அழகர்கோவிலான திருமாலிருஞ்சோலையில் ஸ்ரீ வைஷ்ணவப் பிராமண குலத்தில் பிறந்தவருக்கு ஞானபூரணர் என்று பெயர் சூட்டினர் பெற்றோர்கள். இவருடைய முன்னோர்களில் ஒருவரான கண்ணுக்கினியான ஸ்வாமி என்பவர், ஒரு முறை சில மலையாள மாந்திரீகர்கள் கண்ணில் மையிட்டுக்கொண்டு வந்து அதன் மகிமையால் அழகரது தேஜஸை அபகரித்துக்கொள்ள முயன்றதைக்கண்ட இந்த ஸ்வாமி, அவர்கள் உண்ணும் பிரசாதத்தில் மிளகை அதிகம் சேர்த்திட அதனால் அந்த மாய மை கண்ணிலிருந்து கரைந்திட அவர்கள் குற்றம் வெளிப்பட்டுத் தண்டிக்கப்பட்டார்களாம். அதனால் அந்தக் கண்ணுக்கினியான் ஸ்வாமிக்குத் திருமாலையாண்டான் என்ற பட்டப்பெயரும் ஏற்பட்டு அந்தக்கோயில் புரோகிதராகவும் நியமிக்கப்பட்டு, பரம்பரையாக இன்றளவும் அப்பெருமைகள் அவருடைய சந்ததியாரால் அனுபவிக்கப்பட்டு வருகின்றன.*

*திருக்கோட்டியூர் நம்பி கட்டளைப்படி இராமானுஜருக்கு திருவாய் மொழி உபதேசித்து வரும் காலத்தில், ஆளவந்தார்*

அருளிய அர்த்தங்களுக்கு மாறாக, இராமானுஜர் சில இடங்களில் அர்த்தஞ்சொல்லிய காரணத்தால் மனம் வெதும்பிப் பாடம் சொல்வதை நிறுத்திவிட்டார். பின்னர் திருக்கோட்டியூர் நம்பியினால் ஆளவந்தாருக்குத் தோன்றாத அர்த்தம் இராமானுஜருக்குத் தோன்றாது. ஸ்ரீ கிருஷ்ணன் சாந்திப முனியிடம் பாடம் கேட்டதைப் போல இராமானுஜர் உம்மிடம் சந்தை கேட்கிறார். ஆகவே நீர் தொடர்ந்து சொல்லும் என்று கட்டளையிட அவரும் தொடர்ந்து நடத்தி நிறைவு செய்தார். இவர், தம் குமாரரான சுந்தரத்தோளுடையானை எம்பெருமானாரது சீடராக்கினார். திருமாலையாண்டான் வம்சத்தில் வந்த யமுனாச்சாரியார் என்பவர் வாதிகேஸரி அழகிய மணவாள ஜீயருக்கு சிஷ்யராயிருந்தவர்.

இவர் அருளிய பல கிரந்தங்களில் பிரமேயரத்தினம் தத்வபூஷணம் என்ற இரண்டும் இப்போதும் கிடைக்கின்றன. திருமாலையாண்டான் வம்சத்தவர்கள் இன்றும் அழகருக்குப் புரோகிதராயிருந்து பல விசேஷ கௌரவங்களைப்பெற்று வருகின்றனர். சித்திரா பௌர்ணமியன்று மதுரைக்கு அழகர் எழுந்தருளும் மகோத்ஸவத்தில் அழகர் வருமுன்னரே திருமாலையாண்டான் வம்சத்தினர் பல்லக்கில் எழுந்தருளுவதைக்கண்ட பொது ஜனங்கள் ஆண்டான் பல்லக்கு முன்னே, அழகர் பல்லக்குப்பின்னே என்று கூறுவார்கள். திருமாலையாண்டான் உடையவருக்கு திருவாய்மொழிச்சந்தை சொல்லும்பொழுது நீர் ஆளவந்தாரைக் கண்ணாலும் காணாதிருக்க, இப்படி அருளிச்செய்யார் என்று சொல்லக்காரணம் என்ன என்று வினவ, நான் ஆளவந்தாருக்கு ஏகலைவனன்றோ என்று பதில் சொல்லவே திருமாலையாண்டானும் திருக்கோட்டியூர் நம்பி சொல்லியதை ஒத்திருந்தது. நாம் ஆளவந்தாரிடம் கேளாத அர்த்தமெல்லாமல் இவரிடம் கேட்டோம் என்று அவரை வணங்கினாராம்.

வங்கிபுரத்து நம்பி திருமாலையாண்டானது சிஷ்யனாகி, பாஷ்யகாரரடம் ஞானோபதேசம் பெற்றார். நாலூராண்டான் என்பவர் ஆளவந்தாரிடம் ஆஸ்ரயித்துத் திருமாலையாண்டானிடம் ஞான ஜீவனம் பண்ணினார். பெரியாண்டான் என்பது திருமலையாண்டான் புதல்வன் சுந்தரத்தோளுடையான். பெரியாண்டான் திருத்தோரணம் தொடங்கி அழகர் திருவடிகளிலேயே பதினெட்டு வருடங்கள் இரவும் பகலும் தண்டனிட்டுக் கிடப்பார். ஆண்டான் கிடக்கிறாரோ பசுக்கிடக்கிறதோ, வழிபார்த்துப் போங்கள் என்று சொல்லுமாறு பகவதனுபவம் சலியாமல் பண்ணுவார். கிணற்றில்

விழுந்தவனை இரண்டு பேருமாக எடுத்தாற்போல, பாஷ்யகாரரும், எம்பாரும் என்னைக் கடாக்ஷித்தார்கள் என்று பெரியாண்டான் கூறுவார்.

அழகர் திருவோலக்கத்தில் பிள்ளையழகப் பெருமான் என்பவர் பெரியாண்டானைப்பார்த்து 'பரமபதம் எப்படி இருக்கும்' என்று கேட்க 'இப்படியேதான் இருக்கும். ஆனால் இங்கிருந்தால் முதுகு கடுக்கும் அங்கு பேனால் அது செய்யாது' என்றாராம். ஒரு பாக்கு மரத்தைப் பயிரிட்டு 16 ஆண்டுகள் பாடுபட்டாலும் பெறும் பலன் வெகு சொற்பமே. மிகத்தாழ்வானவருக்குச் சம்ஸாரத்தைப் போக்கி மிகச் சிறந்ததான பரமபதத்தைத் தருவதற்கு த்வயத்தை அருளிச்செய்த ஆச்சாரியரது திருவடிகளில் எப்போதுமே நன்றியில்லாத ஸம்ஸாரிகளுக்கு எத்தைச்சொல்லி என்ன பயன் விளையப்போகிறது என்று திருமாலையாண்டான் வெறுத்துக்கூறினார். எதிராஜர் திருமாலையாண்டானிடம் திருவாய்மொழி பெரிய திருமொழி முதலாயிரம் இயற்பா அனைத்தும் சந்தை கேட்டவர்.

திருமலையாண்டான் வாழித்திருநாமம்.

1. அம்புவியில் ஆளவந்தாரடியிணையோன் வாழியே.
   ஆரியனாம் அவர் பதத்தை அன்புசெய்தோன் வாழியே.
   வெம்பிவரும் வாதியரை வேர்களைந்தோன் வாழியே.
   மேதினியில் நாலூர்விளக்க வந்தான் வாழியே.
   எம்பெருமானெதிகாசர்க் கீடுரைத்தான் வாழியே.
   ஏற்றமுள்ள மாசி மகமிலங்க வந்தோன் வாழியே.
   வம்பவிழும் சோலைமலை வாழ வந்தோன் வாழியே.
   மாலாதராரியன் தாள் மாநிலத்தில் வாழியே.

2. வீசுபுகழ்ச் சங்காழி விளங்கு புயம் வாழியே.
   விண்ணுயர்ந்த மலையழகர் விரும்புமவன் வாழியே.
   மாசிமகம் இப்புவியில் வந்துதித்தோன் வாழியே.
   மறைப்பொருளை உடையவர்க்கு வகுத்துரைத்தோன் வாழியே.
   காசிப நற்குலத்துதித்த கருணை நிதி வாழியே.
   கையாழி சங்கதனால் கதிதருவோன் வாழியே.
   தேசு புகழ் ஆளவந்தார் திருவடியோன் வாழியே.
   திருமாலையாண்டான் தாள் செகதலத்தில் வாழியே.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பெரிய திருமலை நம்பி வைபவம்

இவர் இராமானுஜருக்கு மாதுலராகும் (தாய் மாமன்). இவரது மூத்த சகோதரி பூதேவி என்னும் காந்திமதிக்கும் ஸ்ரீபெரும்புதூர் கேசவ சோமயாஜுலுவுக்கும் பிறந்த மகனே எம்பெருமானாரான இராமானுஜர். இவரது இளைய சகோதரியான ஸ்ரீ தேவியை மதுரமங்கலம் கமல நயனபட்டருக்கு மணம் செய்து கொடுத்தார். அவர்களது குமாரர்கள் எம்பார் என்னும் கோவிந்தரும் அவரது தம்பி சிறிய கோவிந்தப்பெருமாளும் ஆவார்கள். இவர் எம்பெருமானாருக்கு ஒரு வருடகாலம் கீழத்திருப்பதியில் வால்மீகியின் இராமாயணத்தை காலட்சேபம் செய்தார். திருவேங்கடமுடையான் இவரைத் திருத்தகப்பனாராக அபிமானித்தார் என்பர். சைவராகு மாற்றப்பட்டுக் காளஹஸ்தியில் உள்ளங்கை கொணர்ந்த நாயனாராக இருந்த மருமகன் கோவிந்தரை மறுபடி ஸ்ரீ வைஷ்ணவராகத் திருத்தியவர் இவர். தம்முடைய குமாரர்களான பிள்ளை திருமலை நம்பியையும், பிள்ளானையும், இரு குமாரத்திகளையும் உத்தாரகரான எம்பெருமானார் திருவடிகளில் அபிமானம் வைக்கச் செய்தார். உடையவரது வாழ்க்கையோடு பின்னிப்பிணைந்ததே இவரது வாழ்க்கையாகும்.

எம்பெருமானார் தம் சீடர்களுடன் திருப்பதிக்கு யாத்திரை சென்றபொழுது ஆழ்வார்கள், தரிசிக்காத இடத்திற்குத்தானும் போக விரும்பாமல் அடிவாரத்திலே எழுந்தருளியிருக்கிற ஆழ்வாராதிகளைச் சேவித்துக்கொண்டு திருப்பதியில் விட்டலதேவனையும் மற்றும் முப்பது வைஷ்ணவர்களையும் தம் சீடராக்கிக் கொண்டு வாழ்ந்துவரும் நாளில் திருமலையிலிருந்து அனந்தாழ்வான் முதலிய வைணவர்கள் இதைக்கேள்விப்பட்டு கீழே இறங்கி வந்து எம்பெருமானாரை மலைக்கு எழுந்தருளுமாறு வேண்ட, அவரும் ஆழ்வார்கள் செல்லாத இடத்திற்கு தாமும் செல்ல விரும்பவில்லை என்று கூற உடனே உடனிருந்த ஏனைய வைணவர்களும் நாங்களும் 'ஏறோம்' என்று கூறவே உடையவரும் ஏற ஒருப்பட்டுத் திருமலையில் திருப்பரியட்டப் பாறையளவிலே ஏறியிருக்கும்பொழுது அவரை எதிர்கொண்டு, திருவேங்கடமுடையானது தீர்த்தப் பிரசாதங்களுடன் திருமலைநம்பியே அழைக்க வந்தார். அவரிடம் வேறு யாரேனும் சிறியவர்களை அனுப்பக்கூடாதா, தாங்களே வர வேண்டுமா என்று உடையவர் கேட்கத் திருமலை நம்பி, என்னைவிடச் சிறியவர்கள் யாரையும் காணவில்லை. ஆகவே நானே வந்தேன் என்றார்.

*உடையவர் அம்மலையழகில் மனமகிழ்ந்து இது பூலோக வைகுந்தமாயிருக்கிறது என்று ஆச்சர்யப்பட்டு திருமஞ்சனம் கண்டருளி, இவ்விடம் விண்ணோர் வெற்பாகையாலே, அமரர் முனிக் கணங்கள் போன்ற நித்ய சூரிகள் வாழுமிடம். நாம் இப்போதே இங்கிருந்து இறங்கவேண்டும் என்று கூற பெரிய திருமலைநம்பி திவ்ய தேசங்களில் மூன்று நாளாவது இருக்க வேண்டும் என்று கூறினார். ஆகவே உடையவரும் மூன்று நாட்களும் அமுது செய்யாமல் பகவானை அனுபவித்து, பிரபந்தப்பாடல்களை அனுசந்தித்து மகிழ்ந்தார். பின்னர் கீழிறங்கி கீழத்திருப்பதியில் மாதுலரான பெரிய திருமலை நம்பியின் திருமாளிகையில் உணவருந்தி அவரிடம் வால்மீகி இராமாயணம் பிரவசனம் கேட்டவாறு ஒரு வருடகாலம் தங்கி இருந்தார்.*

*பெரிய திருமலை நம்பியின் அவதாரஸ்தலம்: திருமலை (திருப்பதி) அவரது திரு நட்சத்திரம், சித்திரை மாதத்து சுவாதி ஆகும். ஆனால் இவரது வாழித்திருநாமத்தில் வைகாசிஸ்வாதி என்று வருவதால் நிச்சயிக்கக்கூடவில்லை. இவரது இதர திருநாமங்கள் ஸ்ரீ சைலபூர்ணர், பெரிய திருமலைநம்பி. இவரது குமாரர்கள் பிள்ளை திருமலைநம்பி, அப்புள்ளான் ஆவர். குமாரத்திகள் இருவருண்டு.*

*திருவாராதனப்பெருமாள்: மலை குனிய நின்ற பெருமாள். இவர் அருளிய அமலன் ஆதிப்பிரான் தனியன்*

'காட்டவே கண்டபாத கமலம் நல்லாடை உந்தி
தேட்டரு முதரபந்தம் திருமார்பு கண்டம் செவ்வாய்
வாட்டமில் கண்கள் மேனி முனியேறித் தனிபுகுந்து
பாட்டினால் கண்டு வாழும் பாணர்தாள் பரவினோமே'

*என்பது.*

## *வாழித்திருநாமம்*

வைகாசி சோதிநாள் வந்துதித்தான் வாழியே.
வண்திருவேங்கட முடையான் வரபுத்ரன் வாழியே.
அய்யன் ஸ்ரீ ஆளவந்தார் அடிதொழுவோன் வாழியே.
அனவரதம் மலைகுனியோர்க்கு அடிமை செய்வோன் வாழியே.
மெய்யன் இராமானுசாரியான் விரும்புமவன் வாழியே.

மிக்க திருமலையார்க்கெல்லாம் மேலாவான் வாழியே.
செய்ய தமிழ்வேதத்தின் சிறப்பறிந்தான் வாழியே.
திருமலை நம்பிகள் உபய திருவடிகள் வாழியே.

*ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.*

## திருவரங்கப் பெருமாளரையர் வைபவம்

எம்பெருமானார் அவதரித்த அதே வருஷத்தில் (கி.பி. 1017) வைகாசி கேட்டையில் யமுனாச்சாரியாருக்கும் ஸ்ரீரங்கநாயகிக்கும் முதல் குமாரராய் அவதரித்தவர். இவரைத் தம் ஆச்சாரியரான மணக்கால் நம்பியிடம் சிஷ்யராக இருந்து வருமாறு பணித்தார் ஆளவந்தார். நம் பெருமாள் ஸ்ரீரங்கநாதன் நியமனத்தாலே காஞ்சி யில் தேவப்பெருமாளைத் தமது இசையாலே மயக்கி வரம் பெற்று எதிராஜரை திருவரங்கத்திற்கு அழைத்து வந்தவர் இவர். ஸ்ரீரங்கநா தனுக்கு அரையராய் இருந்த இவர், எம்பெருமானாருக்கு அருளிச் செயல் சந்தையும் சரமோபாயமும் நல்வார்த்தைகளும் உபதேசித்த வர். இவருக்குச் சந்ததியல்லாமையால் தம் தம்பிகளான தெய்வத் துக்கரசு நம்பி, பிள்ளையரசு நம்பி, சொட்டை நம்பி ஆகியவர் களை எம்பெருமானாருக்கு சிஷ்யர்களாக்கினார்.

ஆகவே எம்பெருமானாருடைய ஆச்சாரியர்களான பெரிய நம்பி, திருக்கோஷ்டியூர் நம்பி திருமாலையாண்டான் பெரிய திருமலை நம்பி, திருவரங்கப்பெருமான் அரையர் ஆகிய ஐவரும், எம்பெருமானாரே எல்லோருக்கும் உத்தாரக ஆச்சாரியார் என்பது தேற்றத் தங்களுடைய தம்பிகளையும் குமாரர்களையும், குமாரத்தி களையும் எம்பெருமானாரிடமே அடைக்கலமாகக் கொடுத்தனர். எம்பெருமானார் திருவரங்கப்பெருமாள் அரையருக்கு மனது உகக் கும்படியாக ஆறுமாத காலம் பாலமுதம் பக்குவமாகக் காய்ச்சிக் கொடுத்தும் திருவத்யயன காலத்தில் மஞ்சள் காப்பரைத்து நீராடப் பண்ணுவித்தும் அவரை மகிழ்வித்ததனால் அவரும் 'வாரீர் எம்பெ ருமானாரே, உமக்கு சரம புருஷார்த்தம் சொல்கிறோம் என்று தொடங்கி தேவுமற்றறியாத மதுரகவிகளைப்போல நீரும் குருவே மேலான பிரம்மம். குருவே மேலான தவம், குருவே மேலான காமம். குருவே மேலான பிராப்யம், குருவே மேலான கல்வி. குருவே மேலான பிராபகம். அப்பரம்பொருளையே உபதேசிப்ப தால் குரு அதைக்காட்டிலும் உயர்ந்தவர். தீ மனம் கெடுத்தும், மருவித்தொழும் மனம் தந்தும், அறியாதன அறிவித்த ஆச்சார்யனே

உபாயோபாயம் என்ற விசுவாசத்துடன் 'பீதகவாடைப் பெருமானார் பிரமகுருவாகி வந்து என்று சொல்வது போல உறங்கும் பெருமாளே உலவும் பெருமாளாக வந்தாரென்றிரும்' என்று பஞ்சோபாய நிஷ்டையான் பரமபர்வார்த்த விசேஷத்தைப் பிரசாதித்தருளினார்.

திருவரங்கப் பெருமாளரையர் காஞ்சிபுரத்தில் வரதராஜப் பெருமாளைச் சேவித்து மிகுந்த பக்தியோடு 'என் நெஞ்சமே நான்' என்று தொடங்கி தொழுதெழு தொண்டர்கள் தமக்கு பிணியொழித்து அமரர் பெருவிசும்பருளும் பேரருளாளன் என்று பாலேய் தமிழில் பண்ணார் பாடல் இன்னிசையில் பாடிட பெருமாள் மிக மகிழ்ந்து அவருக்கு முத்துத் தாழ்வடம் போன்ற வெகுமதிகளை வழங்க முற்பட அரையர் தமக்கு இவையெல்லாம் தேவையில்லை. இராமானுசரை அடியேனுக்குத் தந்தருளு வேண்டும் என்று விண்ணப்பஞ்செய்ய பெருமாளும் முன்னர் எதுவும் தருவோம் என்று வாக்குக்கொடுத்ததை மறுக்க இயலாமல் இராமானுசரை அனுப்ப இசைந்தார். இராமானுசரும் பேரருளாளரைச் சேவித்து விடை கொண்டு, கூரத்தாழ்வாரையும் முதலியாண்டானையும் மடத்துக்குச் சென்று தனது திருவாராதனப்பெருமாளான பேரருளாளனை எடுத்துவரச் சொல்லித் திருக்கச்சி நம்பியிடமும், மற்றங்குள்ளோரிடமும் விடைபெற்றுக்கொண்டு பெரிய கோயிலுக்கு எழுந்தருளினார். இவ்வாறாக இராமானுசரைக் கோயிலுக்குக் கொண்டு வந்தவர் இவ்வரையரே. இவர் 115 ஆண்டுகள் வாழ்ந்திருந்தார். இவரது இதர நாமங்கள் ரங்கார்யர், குடிசொட்டை என்பன.

இவரது இசைப்புலமையும் பகவத் அனுபூதியும் சேர்ந்து திரு அத்யயன உத்சவத்தில் இவர் இசைத்து நாட்டியமாடி நடித்துக்காட்டிய பெருமாள் விபவாதாரத்தில் (இராம கிருஷ்ண அவதாரங்கள்) செய்தருளின. அபதாநங்களைக் கண்டு பெருமாள் மிகவும் மகிழ்ந்து இவருக்குக் 'கோயிலுடைய பெருமாளரையர் என்ற திருநாமத்தைச் சாத்தினார். உத்ஸவங்களிலெல்லாம் பெருமாள் தோளுக்கினியான் வாகனத்தில் உலா வரும்போது நம் நடையழகுக்கீடாகப் பாடிடும் என்று அருளிட இவரும் இசையில் ஏத்திக் கொண்டு வரக் கோயிலுக்கு எழுந்தருளுவார். அதிலிருந்து அடுக்குச் சாத்திக்கொண்டு அந்தந்தத் திருக்கோலத்துடனே உத்சவ காலங்களில் பெருமாளுடன் எழுந்தருளுகிற வைபவம் நடந்து வருகிறது. அரையர் அருளிய திருமாலை, திருப்பள்ளியெழுச்சித்தமிழ்த்தனியன்கள்.

மற்றொன்றும் வேண்டா மனமே - மதிளரங்கர்
கற்றினம் மேய்த்த கழலிணைக்கீழ் - உற்ற
திருமாலை பாடும் சீர்த் தொண்டரடிப் பொடியெம்
பெருமானை எப்பொழுதும் பேசு (திருமாலை)
மண்டங்குடியென்பர் மாமறையோர் மன்னியசீர்
தொண்டரடிப்பொடி தொன்னகரம் - வண்டு
திணர்த்தவயல் தென்னரங்கத்தம்மானைப்பள்ளி
உணர்த்தும் பிரான் உதித்த ஊர்'' (திருப்பள்ளி)

*என்பன.*

## *இவரது வாழித்திருநாமம்*

நாதமுனி குலந்திகழ நன்குதித்தோன் வாழியே.
நற்றமிழின் மறைக்கிசையை நவின்றுரைப்போன் வாழியே.
காதலரங்கேசரிரு கழல் பணிவோன் வாழியே.
கானவர நாவிசையால் களிப்பிப்போன் வாழியே.
ஏதமில் வண்கச்சியனை ஏத்திசைப்போன் வாழியே.
எதிபதியைப் பரிசாக ஏற்று வந்தோன் வாழியே.
தீதில் யமுனைத்துறைவன் சேவடியோன் வாழியே.
திருவரங்கப் பெருமாளரையர் திருவடிகள் வாழியே.

***ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.***

## *திருக்கச்சி நம்பிவைபவம்*

*இவர் சென்னைக்கு அருகிலுள்ள பூவிருந்தவல்லி என்ற ஊரில் வைசியர் குலத்தில் வீரராகவருக்கும் கமலைக்கும் நான்காவது குமாரராய் அவதரித்தார். சிலர் இவரை நான்காம் வர்ணத்தில் (சூத்திரர்) பிறந்தவராகவும் கூறுவர். அக்காலத்திலேயே க்ஷத்திரிய வைஸ்யர்கள் வேதாத்யயனம் முதலியவற்றை விட்டு விட்டதால் நாலாவது வர்ணமாகக் கூறியிருக்கலாம். இவரது இயற்பெயர் கஜேந்திர தாஸர் என்பது. இவர் பார்க்கவரான திருமழிசை யாழ்வாருடைய அருளாலே பிறந்தவராதலால் இவருக்குப் பார்க்கவப்பிரியர் என்றும் பெயரிட்டனர். இவர் ஆளவந்தாரது சிஷ்யர்களில் ஒருவர். அவர் அளித்த திருநாமம் பேரருளாளதாஸர் என்பது. கச்சியில் வாழ்ந்தமையால், திருக்கச்சி நம்பி, காஞ்சிமுனி, காஞ்சி பூர்ணர் என்றழைக்கப்பட்டார். இவர் காஞ்சி வரதராஜப் பெருமாளுக்குத் திருவாலவட்டக்கைங்கர்யம் செய்து கொண்டிருந்தார்.*

அப்பெருமான் ஒருவருக்கும் தெரியாமல் இவருடன் பேசிக் கொண்டிருந்தார் என்பது பிரசித்தம். அந்திமகாலத்தில் மோட்சம் விரும்பிய நம்பிக்கு, 'நீர் வீசினீர்' நான்பேசினேன் இரண்டும் சரியாயிற்று. ஒரு பரம பாகவதரின் அபிமானத்தைப் பெற்றாலே உமக்கு மோட்சம் என்று பெருமான் கூறிவிட்டார். அதற்குப்பின் மாறுவேஷத்தில் திருக்கோஷ்டியூர் நம்பியிடம் மாடு மேய்க்கும் கைங்கர்யம் செய்து 'நம் பையல்' என்று அவரால் அபிமானிக்கப் பெற்று அவ்வபிமானமே காரணமாக மோட்சம் பெற்றார் என்று கூறப்படுகிறது.

இராமானுஜர் இவரிடம் சீடராக வேண்டுமென்று ஆசைப்பட்டார். நம்பிமறுத்து விட்டார். இவர் உண்ட கலத்திலே உண்ண வேண்டும் என்று ஆசைப்பட்டார் இராமானுஜர். அதை இராமானுஜரது மனைவி நிறைவேறாமல் செய்து விட்டாள். தேவராஜப் பெருமாளிடமிருந்து ஆறு வாக்கியங்கள் பெற்றுக்கொடுத்து தர்ஸநார்த்தங்களை உறுதிப்படுத்திய மகானுபாவர் இவரே. தேவராஜப் பெருமானைப் பற்றிய எட்டு ஸ்லோகங்கள் கொண்ட தேவராஜாஷ்டகம் என்னும் துதி நூல் இவர் அருளிச்செய்தது. இராமானுஜர் கேட்டுக்கொண்டதற்கிணங்க, இவர் பேரருளாளரிடம் கேட்டு இராமானுஜருக்குச் சொன்ன ஆறு விஷயத்திற்கும் பேரருளாளர் கூறிய பதில் வருமாறு.

1) பரத்வம் நாமே, 2. பேதமே தர்ஸனம், 3) உபாயமும் பிரபத்தியே, 4) அந்திமஸ்மிருதியும் வேண்டா, 5) ஸரீராவசானத்தாலே மோட்சம், 6) பெரிய நம்பி திருவடிகளை ஆஸ்ரயிப்பதுவே என்று கூறியவற்றை நம்பி இராமானுஜரிடம் கூறி இதுவோ நீர் நினைத்திருந்தது என்று கேட்க இராமானுஜரும் ஆம் என்ன. இருவர் நினைவும் ஒத்திருந்தபடியை எண்ணி மகிழ்ந்தார். மேலே சொன்ன வாக்கியங்களின் பொருள் ஸ்ரீமானான நானே பரத்வம். உலகிற்கும் எனக்கும் பேதம் உண்டு என்பதே. என் மதம், என்னைச் சரணடைவதே என்னைப் பெறுவதற்குக் கண்ணழிவற்ற உபாயம், அப்படிச் சரணடைந்தவர்களுக்கு அந்திமகாலத்தில் என் நினைவு தேவையில்லை. இப்பிறப்பின் இறுதியிலேயே அவர்களுக்கு மோட்சம் உறுதி. பெரியநம்பியே இராமானுஜரால் ஆஸ்ரயிக்கத்தக்கவர் என்பது, இந்த ஆறு வார்த்தைகளையும் இராமானுஜருக்குக் கூறி 'ராமானுஜமாந்யர்' (இராமானுசரால் கௌரவிக்கப்பட்டவர்) என்னும் பெயரைப் பெற்றார். இவரிடம் சரண் புகுந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்குப் பிரபத்தியை அருளிச்செய்தார். அது

*பொறுக்காத அவனது உறவினர்கள் அவனைப் பிரித்துக் கொண்டு போய் பிராயச்சித்தம் பண்ண முயற்சிக்க, அவன் அவர்களிடமிருந்து தப்பிவந்து நம்பியிடம் சரண்புக, நீர் போகாவிட்டால் அவர்கள் என்னைப் பொல்லாங்கு கூறுவார்களே என்று நம்பி கூற, அத்தனையோ அடியேனுக்கு என்று சோகம் பொறுக்காமல் பிராணத்தியாகம் செய்தார் என்பர்.*

*திருக்கச்சி நம்பி அருளிய திருச்சந்தவிருத்தத் தனியன்கள்*

திருச்சந்தம் பொழில் தழுவு தாரணியின் துயர்தீர
திருச்சந்த விருத்தம் செய்திருமழிசைப் பரன்வருமூர்
கருச்சந்தும் காரமுகிலும் கமழ்கோங்கு மணநாறும்
திருச்சந்தத்துடன் மருவு திருமழிசை வளம்பதியே.

உலகு மழிசையும் உள்ளுணர்ந்து தம்மில்
புலவர் புகழ்க்கோலால் தூக்க - உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது.

*என்பனவாகும்.*

## *இவரது வாழித்திருநாமம்*

மருவாருந் திருமல்லி வாழவந்தோன் வாழியே.
மாசி மிருசீரிடத்தில் வந்துதித்தோன் வாழியே.
அருளாளருடன் மொழிசொல் அதிசயத்தோன் வாழியே.
ஆறுமொழி பூதூரர்க் களித்த பிரான் வாழியே.
திருவாலவட்டம் செய்து சேவிப்போன் வாழியே.
தேவராசாட்டகத்தைச் செப்புமவன் வாழியே.
தெருளாரு மாளவந்தார் திருவடியோன் வாழியே.
திருக்கச்சி நம்பியிரு திருவடிகள் வாழியே

***ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.***

## ***மாறனேரி நம்பி வைபவம்***

*மாறனேரி நம்பி ஆளவந்தார் சிஷ்யர்களிலே ஒருவர். பஞ்சம குலத்தில் பாண்டிய நாட்டில் புராந்தகம் என்னும் கிராமத்தில் ஆடிமாதம் ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவர். ஆளவந்தாருக்கு ஏற்பட்ட ராஜபிளவையை அவரிடம் பிரார்த்தித்து ஆசார்யப் பிரசாத*

*மாகப் பெற்றுக்கொண்டவர் இவர் என்று கூறுவர். இவர் தம் கடைசிக்காலத்தில் ஆளவந்தார் உகந்ததான இந்த தேகத்தை அவைஷ்ணவர்களான என் உறவினரிடத்தில் ஒப்படைக்காமல் நல்லடக்கம் செய்ய வேண்டும் என்று பெரியநம்பிகளிடம் பிரார்த் தித்தார். அதன்படியே, இவர் பரமபதித்தபின் (மரணமடைந்தவு டன்) பெரிய நம்பி தாமே அவரது அந்திமக் கிரியைகளைச் செய்தார். பஞ்சமரான அவருக்குப் பிராமணரான நீர் ஈமச்சடங்கு கள் செய்தல் தகுமோ என்று கேட்ட இராமானுஜருக்கு அவர் அளித்த பதில் பெரியநம்பி வைபவத்திலேயே கூறப்பட்டுள்ளது.*

### *மாறனேரி நம்பியின் வாழித்திருநாமம்*

ஆனிதனில் ஆயில்யம் அவதரித்தான் வாழியே.
ஆளவந்தார் திருவடிகள் ஆஸ்ரயித்தான் வாழியே.
மாநிலம் எதிராசர்மனம் வாழ்வித்தான் வாழியே.
மதிளரங்க நகரமதில் வாழ்ந்தருள் வோன் வாழியே.
தேனமருந் தென்மொழியின் சிறப்பறிந்தோன் வாழியே.
திகழ்ஞான பத்திகளால் சேர்ந்திருப்போன் வாழியே.
வானவரில் ஒருவரிங்கு மகிழ்ந்து வந்தோன் வாழியே.
மாறனேரி நம்பியிணை மலரடிகள் வாழியே.

### *ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்*

*ஆளவந்தார் சிஷ்யர்களில் இதுவரை எழுவரைப் பற்றிக்கண் டோம். இனி தெய்வ வாரியாண்டான், வானமாமலையாண்டான் அம்மங்கி போன்றவர்களைப் பற்றிய கிரந்தங்களில் சில குறிப்புக் கள் உள்ளன. அவற்றைச் சற்று விரிவாக்கிப் பார்க்கலாம்.*

## *தெய்வவாரி யாண்டான்*

*வகுளாபரண ஸோமயாஜியார் என்ற ஸ்ரீ வைஷ்ணவர் தெய்வ வாரி யாண்டானை எம்பெருமான் இங்கு வந்து அவதரிக்கக்கார ணம் என்ன என்று கேட்க, பாகவதாபசாரம் பொறுக்காமையால் என்றாராம். ஆளவந்தாரது பிரிவை சிறிது காலம் கூடப்பொறுக்க முடியாதவர் இவர். ஒருதரம் மடத்துக்காரியத்தை இவர் பொறுப் பில் விட்டுவிட்டு, ஆளவந்தார் திருவனந்தபுரம் சென்றுவிட மிகவும் மெலிந்துவிடவே உடனிருந்தோர் இவரைத் திருவனந்தபு ரத்திற்குக் கொண்டு போகத் தீர்மானத்தபோது, அந்த எண்ணத்தி*

லேயே உடல்நலம் தேறி வந்தது. பின்னர் ஆளவந்தாரை நேரில் பார்த்தவுடன் திருமேனி வாட்டம் தீர்ந்தது. ஆளவந்தார் இவரை திருவனந்தபுரம் போய் சுவாமிதரிசனம் செய்து வரச்சொன்ன போது, என்னுடைய திருவனந்தபுரம் ஏதோ என் எதிரிலேயே இருக்கிறது என்று ஆளவந்தாரைக்காட்டி, திருவனந்தபுரம் போக இசையவில்லையாம். **வனமாமலையாண்டான்** என்னும் ஆளவந் தார் சிஷ்யர் பகவத் பக்தர்கள் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் கௌஸ்துபமாலை போன்று இனிமையானவர்கள். அவர்களிடம் அபசாரப்படுவது கௌஸ்துப மாலையில் கரிக்கோடு கிழிப்பதை ஒத்தது என்றாராம்.

## அம்மங்கி

ஆளவந்தார், அம்மங்கியிடம் உபதேசித்த வார்த்தைகளை ஆளவந்தார் வைபவத்திலேயே தெரிந்து கொண்டோம். அம்மங்கி யிடம் உடையவர் திருக்கண்ணபுரத்திலிருந்து போய்வர விண்ணப் பித்தபோது அம்மங்கி அவரிடம் அக்கினி ஜ்வாலையில் அகப்படா தேகிடீர். அருநஞ்சு தின்னாதேகிடீர். அஸூசி மிதியாதே கிடீர். அபலைகளோடு செறியாதே கிடீர். ஆஸ்திகரோடுசேர்ந்து போருங் கிபீர் என்றாராம். அதன் விரிவாக்கம், அக்னி ஜூவாலையில் அகப்படாதேகிடீர் என்பது பௌத்தர்கள், ஜைனர்கள், அத்வைதி கள், சைவர்கள் முதலானோர் வேதத்துக்குப் புறம்பானவர்கள். இவர்களோடு வாதிடும்பொழுது பாம்பு, அக்னிபோன்றவற்றோடு பழகுவது போல நெருங்காமல் இருக்க வேண்டும் என்பது, அடுத்து அருநஞ்சுதின்னாதே கிடீர் என்பது ஸ்ரீ வைஷ்ணவர்களு டைய நாம ரூபங்களைத் தரித்துக்கொண்டு வைஷ்ணவத்தைக் கெடுப்பவர்களோடு கலந்தால் ஆத்மநாசத்தை விளைவித்து விடு வார்கள். இலுமிச்சம்பழமும் கற்பூரமும் கலந்து உண்டால் உயிரை முடிப்பதைப்போல இவர்களது உறவு ஆத்ம நாசத்தையே உண்டு பண்ணச் செய்யும் என்பது. அடுத்து அஸீசி மிதியாதே கிடீர் என்பது சரீரத்தை வளர்ப்பதிலேயே கவனம் செலுத்தும் சம்சாரிகள், கல், கட்டை போன்றவர்கள். அவர்களை விட்டு விலகிச்செல்ல வேண்டும் என்பது. அடுத்து அபலைகளோடு செறியாதேகிடீர் என்பது அனுகூலர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களாக இருந்த போதி லும், கொள்ளத்தக்கவை எவை, தள்ளத்தக்கவை எவை என்ற பாகுபாடு தெரியாத தெளியாத அறிவைப் பெற்றவர்களது உறவை விட வேண்டும் என்பது. அடுத்து ஆஸ்திகரோடு செறிந்து போகுங் கள் என்பது பகவத் பாகவத விஷயங்களை அனுபவிக்கத்தக்க

பூர்ணாதிகாரிகள். அவர்களது உறவு அனுபவிக்கத்தக்கது. ஆகை யால் அவர்ளோடு நெருங்கிப்பழக வேண்டும் என்பதாகும். வைத்த கையிலும் வாங்கிக்கொடுத்த கை தஞ்சம் என்றார் அம் மங்கி. அஞ்சேல் என்று அபயகரம் வைத்துக் காட்டிய பெருமாளு டைய கையைக்காட்டிலும், அவரிடம் உபயவிபூதிச் செல்வத்தை வாங்கின கையாகிற எம்பெருமானாருடைய கையே தஞ்சம் என்ற கருத்து விளங்குகிறது.

## எம்பெருமானார் வைபவம் (கி.பி 1017=1137)

இதற்கு முன்னர் இராமானுஜரது ஆச்சாரியர்களைப்பற்றி எழு திய பிரபாவத்திலேயே எம்பெருமானாரது இளமைக்கால பிரபா வங்கள் சிலவும் சொல்லப்பட்டன. இருந்த போதிலும் அவரது வாழ்க்கையின் ஆரம்ப காலத்தை மேலோட்டமாகப் பார்த்துவிட் டுப் பின்னர் அவர் வைஷ்ணவத்திற்குச் செய்த தொண்டைப்பற்றி விரிவாக எழுத உள்ளேன். ஆளவந்தாரின் சிஷ்யர்களாகவும் எம் பெருமானாரின் ஆச்சாரியாராகவும்) விளங்கியவர் பெரியநம்பி தொடங்கி, திருக்கோட்டியூர் நம்பி, திருமாலையாண்டான் பெரிய திருமலை நம்பி திருவரங்கப் பெருமாளரையார், திருக்கச்சி நம்பி, மாறனேரி நம்பி முதலிய எழுவர்களில், முன்னர் கூறிய ஐவரே உடையவரது ஆச்சாரியார்களாகவும் விளங்கினார்கள். இதில் நாம் முக்கியமாக கவனிக்க வேண்டியது இவர் பெரியநம்பி திருவடிக ளில் ஆஸ்ரயித்த போதே ஸ்வரூபசித்தி உண்டாகியிருக்க, இவர் ஏன் பலர் திருவடிகளிலும் விழுந்து உபதேசம் கேட்க வேண்டும் என்பதே.

இந்த வினா எல்லோர் உள்ளத்திலும் எழுவது இயல்பே. அவர்கள் தாமாகவே வந்து இவருக்கு உபதேசம் செய்வதற்குக் காரணம் என்னவாகும்? ஆளவந்தார்தம் திருவருள் செல்வத்தை அவர்தம் சிஷ்யர்கள் பலர் மூலமாகத் தனது ஆத்மபுத்திரரான இராமானுசரிடம் ஒப்படைக்கச் சொன்னது; ஒரு அரசன் தன் அரசச்செல்வத்தை பல அமைச்சர்களிடத்தே பகிர்ந்து கொடுத்துப் பின் அரசகுமாரர் அவற்றை நிர்வகிக்கும் பொறுப்புக்கு வந்தவுடன் அந்த ஐஸ்வர்யத்தை அரசகுமாரனிடம் ஒப்படைக்கச் சொன்ன தைப் போலாகும்; ஆளவந்தாரும் இவர்களிடத்தில் ஒவ்வொரு அர்த்த விசேஷத்தை உபதேசித்து வைத்து எம்பெருமானார் ஆளவந் தாரிடம் நேரில் உபதேசம் பெறமுடியாத இழவைத் தீர்த்தார் என்று கொள்ள வேண்டும். இவ்வாசார்யர்களுக்கு முன்னரே, ஆளவந்தார்

முதன்முதலாக இராமானுசரைக் கண்டவுடனேயே 'ஆம்முதல்வன் இவன்' என்று கடாட்சித்து (கிருபை செய்து) நாம் உங்களுக்குச் சொல்லும் பரம ரகஸ்யத்தை இளையாழ்வாருக்குச் சொல்லுங்கள் என்று நியமித்தபடியால் சிஷ்யனாக வேணும் ஆச்சார்யனாகவே ணும் அவரது இலட்சண சம்பந்தம் வேண்டும் என்று தாமாகவே இராமானுசரோடு தொடர்பை பெற்றுக்கொண்டார்கள். ஆகவே முன்புள்ள ஆச்சாரியர்கள் இவருக்கு ஆச்சாரியர்களாகத் திகழ்ந்து பெருமை பெற்றார்கள். பின்புள்ளவர்கள் இவரது சீடராகத் தோன்றி பெருமை பெற்றார்கள். ஒரு மாலையின் நடுவிலே பதிக்கப்பெற்ற மாணிக்கப்பதக்கம் போலே இருந்து அந்த மாலையை அழகுபடுத்துமாப்போலே, இராமானுச முனியாய் விளங்கி பரப்பிரம்மம் ஸ்ரீமத் நாராயணனே என்று அறுதியிட்டுத் தர்ஸனப் பிரவர்த்தனம் பண்ணிக்கொண்டு வந்தார் இராமானுஜர்.

மஹோப நிஷத்தில் ஆரம்பத்தில் நாராயணன் ஒருவன் முத லில் இருந்தான். பிரளயகாலத்தில் லீலா விபூதிகள் அழிந்து கிடந்தபோது இவன் ஒருவனாயிருந்து இன்புறவில்லை. அசித் தாய்க் கிடந்த பக்தசேதனரைக்கண்டு அவர்கள் உய்யும் வழியாக உலகைப்படைத்து இச்சேதனர்களுக்கு சரீர இந்திரியங்களைக் கொடுத்து, அஞ்ஞான இருளைப்போக்கும் சாஸ்திரத்தைக் கொடுத் தும் அவர்கள் திருந்தாமையாலே, தானே பலவிதமான அவதாரங் களை எடுத்தும், ஆழ்வார்களையும் ஆச்சாரியர்களையும் அவதரிக் கச் செய்யத் திருஉள்ளங்கொண்டான் ஸ்ரீயப்பதியான ஸர்வேஸ்வ ரன்.

உயிர்களாகிய பயிர்களைச் செழிப்பிக்க வேண்டித் தன் கரு ணைப் பிரவாகத்தைப் பருகும் காளமேகமாக ஆழ்வாராதிகளை யும் அந்நீரைத் தாங்கும் மலையாக நாதமுனிகளையும், அம்மலை யில் இருந்து விழும் அருவிகளாக உய்யக்கொண்டார், மணக்கால் நம்பிகளையும், அவ்வருவிநீர் பெருகும் ஆறாக ஆளவந்தாரையும் அவ்வாற்றிலிருந்து வெட்டப்பட்ட கால்வாய்களாக, பெரிய நம்பி, முதலான ஆச்சாரியர்களையும் அவதரிக்கச் செய்தான். எம்பெருமா னான ஸர்வேஸ்வரன், பெரிய நம்பி தொடங்கிய வாய்க்கால்களின் மூலம், அந்நீர் தேங்கும் பெரிய ஏரியாக விளங்கினார் இராமானு ஜர். அவ்வேரியிலிருந்து உயிர்களாகிய பயிர்களுக்கு நீரைப்பாய்ச் சும் மதகுகளாக எழுபத்தினாலு சிம்மாசனாதிபதிகளையும் அவத ரிப்பித்தார் என்பது எம்பெருமானாரது பாதுகையான எம்பார் கருத்து. இதுவரை எம்பெருமானார் வரை வந்துள்ள வைணவ

தர்சனத்தைச் சுருக்கமாகக் கண்டோம். இனி எம்பெருமானார் தொடக்கமாகக் காண உள்ளோம்.

ஆளவந்தாரது பிரதம சீடர்களில், ஒருவரான பெரியதிருமலை நம்பியிடம், ஆளவந்தார் தனக்குப்பின் இந்த வைஷ்ணவ தர்சனத் தைத் திறம்பட நடத்தக்கூடிய ஆச்சாரியரைக் கண்டுபிடித்து அவரி டம் தர்ஸன் நிர்வாகத்தை ஒப்புவிக்க வேண்டும் என்று கட்டளை யிட்டிருந்ததையே குறிக்கோளாகக் கொண்டு திருமலையில் வாழ்ந்து வருவாரானார். தம்முடைய இரு சகோதரிகளுக்கும் தகுந்த வரன்களைத்தேடி மூத்தவளான பூதேவியை, ஸ்ரீ பெரும்புதூ ரில் வாழ்ந்துவரும் ஸ்ரீ வைஷ்ணவரான கேசவ சோமயாஜி என்பவ ருக்கு மணமுடித்துக் கொடுத்தார். அவர்களுக்குப் பிறந்த பிள் ளையே இராமானுஜராகும். உலகிற்கே மங்களமளிக்கும் பிங்கள வருஷத்தில் வியாழக்கிழமையன்று சிம்ம லக்கனத்தில், மறைமுடி களின் முடிவை நிலநாட்டுவதற்காகவும், வேதத்திற்குப் புறம்பான செய்திகளைச்சொல்லும் மதங்கள் அழிவதற்காகவும் ஒளிமிகுந்த ஒரு மகா புருஷராய் அவதரித்தார் ஸ்ரீ இராமானுஜர். செய்தி அறிந்த திருமலை நம்பி ஸ்ரீபெரும்புதூருக்கு விரைந்து வந்து அற்புதமான மருமகனை ஆசீர்வதித்து குழந்தையின் ரட்சையின் பொருட்டு பஞ்சாயுதங்கள் கொண்ட ஐம்படைத்தாலியை அணிவித்து இளை யாழ்வார் என்ற திருநாமமும் சூட்டினார்.

இளையாழ்வாரும் உரிய காலத்தில் அன்னப்பிரசானம் உபநய னம் முதலான கிரியைகள் எல்லாம் செய்யப்பெற்று வேதத்தையும் கற்றுத்தேர்ந்து, சகல கலைகளும் கற்றுணர்ந்த பண்டிதராக விளங்கி னார். உரியகாலத்தில் தஞ்சமாம்பாள் என்ற பெண்ணையும் திரும ணம் செய்து கொண்டு, காஞ்சியில் வரதராஜப் பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்து வருகிற நாளில், திருப்புட்குழி என்ற இடத்தில் யாதவப்பிரகாசன் என்ற ஒரு அத்வைதிப்பிராமணர் வேதாந்தம் போதிக்கிறார் என்று கேள்விப்பட்டு, அவரிடம் மாணாக்கனாக இருந்து வேதாப்யாசம் செய்து வரும்பொழுது, ஒரு நாள் யாதவர், 'ஸர்வம் கல்விதம் பிரஹ்ம' (இவ்வுலகனைத்தும் பிரம்மமே) எனும் வேதவாக்கியத்திற்கு அவப்பொருளை உரைத்ததைக் கேட்ட இளையாழ்வார், உண்மைப் பொருளைக்கூறி வேதார்த்தசா ரத்தை அவருக்கு அறிவுறுத்தினார்.

இச்சம்பவத்தைத் திருவரங்கத்தில் ஆளவந்தார் கேள்விப் பட்டு, இராமானுஜரைக் காண வேண்டித்தன் சிஷ்யர்களோடு

காஞ்சிக்கு வந்து பேரருளாளரையும் பெருந்தேவித் தாயாரையும் வணங்கிப் பின் கோயிலில் சிஷ்யர்களால் சூழப்பட்ட யாதவரை யும், அவர்களிடையே ஒளிவீசும் முகமுடைய இளையாழ்வாரை யும் கண்டார். இந்த யாதவர் இராமானுஜருக்குச் சிஷ்யராகவே இருக்கத்தக்கவர் என்று எண்ணினார் ஆளவந்தார். ஸ்ரீ வைஷ்ணவர் கள் பல்கிப் பெருகுவதற்கு இளையாழ்வாரைக் காத்தருள்வீர் என்று பெருமாளை வேண்டிக்கொண்டு, அவரிடம் இப்பொழுது பேசினால் அவரது வேதபாடம் தடைப்படும். இவரே வைஷ்ணவ தர்சனத்தை விளங்க வைக்கும். ஆம் முதல்வன் என்று தீர்மானித்து, அவரிடம் பேசாமலேயே ஸ்ரீரங்கத்திற்குத் திரும்பிவிட்டார். இளை யாழ்வாரும் யாதவரிடம் பாடம் படித்து வரும் நிலையில் அந் நாட்டு அரசனுடைய புத்திரி பிசாசத்தால் பீடிக்கப்பட்டு, எவர் செய்யும் மந்திரத்திற்கும் கட்டுப்படாதிருக்கவே, அரசன் யாதவரு டைய மந்திரத்திற்குக் கட்டுப்படும் என்று நினைத்து யாதவரை அரண்மனைக்கு வரவழைத்தான்.

தன் அந்தரங்க சிஷ்யர்களோடு சென்ற யாதவரைக் கண்டு சிரித்து அவரை அவமானப்படுத்திய பிரம்மராட்சசன் இளையாழ் வாரைச் சரணடைந்து அரசனது புதல்வியையும் தன் பாபத்தையும் ஒருங்கே விட்டது. அதிஅற்புதமான இந்த நிகழ்ச்சியைக் கண்ட அரசன் இளையாழ்வாரைச் சிலாகித்துப் பரிசளித்தான். அவரும் அதைக் குருயாதவரிடம் அடக்கத்தோடு சமர்ப்பித்தார்.

இந்நிகழ்ச்சியால் இளையாழ்வாரிடம் பொறாமை கொண்ட யாதவர் அவரது கருத்தைப் பரீட்சிக்கும் நோக்கோடு வேதாந்த பாடங்களைப் போதித்து வந்தார். பின்னர் ஒருநாள் இளையாழ்வார் யாதவருக்கு எண்ணை தேய்த்துக்கொண்டிருக்கும்பொழுது 'கப்யா சம் புண்டரீகம்' என்று பரமாத்மாவின் திருக்கண்களை வர்ணிக்கும் ஸ்லோகத்துக்கும் அவப்பொருள் கூறுவதைக்கேட்டு இளையாழ் வார் துன்பக்கண்ணீர் உருக்க அது யாதவரின் தொடையைச் சுட்டது. யாதவர் சோகத்துக்குக் காரணம் கேட்க, ஆழமான நீரில் முளைத்த தாமரை போன்ற கண்களை உடையவன் என்று பொருள் இருக்க குரங்கின் ஆசனவாய் என்று தாழ்ந்த திருஷ்டாந்தம் சொன்னதாலே வருந்திக்கண்ணீர் வடித்தேன் என்று சொல்லவே, ஆத்திரமடைந்த யாதவர் இனி இங்கே படிக்கவர வேண்டாம் என்றார். இராமானுஜரும் குருவிடம் மன்னிப்புக் கோரினார்.

இதனாலெல்லாம் கோபமடைந்த யாதவர் இளையாழ்வாரை, ஒழித்துக்கட்ட வேண்டும் என்று தீர்மானித்தவராய், இளையாழ்வாரையும் கூட்டிக்கொண்டு கங்கா ஸ்நானத்தின் பொருட்டுக் காசி யாத்திரை செய்யும் வியாஜ்யத்தோடு அவரைக் கொலை செய்யப் புறப்பட்டார். நல்லொழுக்கமுடையவரான இளையாழ்வாரோடு கூடப்படித்த நண்பரும், அவருடைய சிறிய தாயாரின் பிள்ளையுமான கோவிந்தபட்டர், யாதவரது கெட்ட எண்ணத்தை நடுக்காட்டில் அந்தரங்கமாக இளையாழ்வாருக்கு அறிவித்து, அவரை நிறுத்தித்தான் மட்டும் காசியாத்திரை செல்லும் யாதவரோடு தொடர்ந்து சென்றார்.

நடு இரவிலே நடுக்காட்டிலே அகப்பட்ட இளையாழ்வார் மிக வருந்திய நெஞ்சினராய், பெருந்தேவியோடு விளங்கும் பேரருளாளரைச் சரண் புகுந்தார். கடவுட் தம்பதியரிருவரும் வேடவுருவோடு வந்து அவருக்கு ஆறுதல் சொல்லி, காஞ்சியை எளிதில் அடையலாம் என்று முன்னே வழிகாட்டிச்சென்று, இளையாழ்வாரிடம் வேண்டிப்பெற்ற சாலைக்கிணற்று நீரைத் தம் தேவியோடு கூடப்பருகி மறைந்தனர். விடியற்காலை வேளையில் அத்திகிரியின் புண்யகோடி விமானம் அருகில் தெரிவதைக்கண்டு நீர் பருகியவர்கள் பேரருளாளனும் பெருந்தேவித்தாயாருமே என அறுதியிட்ட இளயாழ்வார் பேரானந்தமும், பேராச்சரியமும் அடைந்தார். அன்றிலிருந்து அவ்வரதன் விரும்பிப்பருகிய சாலைக் கிணற்று நீரைத் தினந்தோறும் தாமே சுமந்து சென்று அபிஷேகத்துக்கு அளித்து மகிழ்ந்தார்.

யாதவரின் மந்திர சக்திக்கு வசப்பட்ட கோவிந்தரும் கங்கையில் நீராடும்பொழுது தமது உள்ளங்கையில் சிவலிங்கத்தைப் பெற்றவராய், தமது கிராமமான மதுர மங்கலத்துக்குச் சென்று அந்த லிங்கத்தை அங்குள்ள கோயிலில் பிரதிஷ்டை செய்து, காளஹஸ்திக்குச் சென்று அங்குள்ள சிவாலய கார்யங்களை மேற்பார்வை பார்த்துக்கொண்டு அங்கேயே தங்கி கோயில் பூசை செய்து கொண்டு வாழ்ந்து வருவாராயினார்.

காஞ்சி திரும்பிய யாதவரும் அங்கு இளையாழ்வாரைக் கண்டு வியந்து விருத்தாந்தங்களைக் கேட்டு அவரை அழைத்து மயக்கித் திரும்பவும் தம் சிஷ்யர்களோடு சேர்த்துப்பாடம் சொல்லி வந்தார். திரும்பவும் யாதவர் உபநிஷத் வாக்கியத்திற்கு அவப்பொருள் சொல்லவே, அந்த வாக்கியம் சகல கல்யாண குணங்களும் பொருந்திய பிரம்மத்தையே சொல்கிறது என்று சரியான பொரு

ளைச் சொல்லி அவருக்கு அறிவுறுத்தி யாதவரிடம் படிப்பதை அடியோடு கைவிட்டார் இளையாழ்வார்.

யாதவரிடமிருந்து விடுபட்டு இளையாழ்வர், வரதரது சேவை யிலேயே இருக்கிறார் என்று கேள்விப்பட்ட ஆளவந்தார், அவரைச் ஸ்ரீரங்கத்துக்கு அழைத்துவருமாறு தமது சிஷ்யரான பெரிய நம் பியை அனுப்பினார். காஞ்சிக்குச் சென்று பெரிய நம்பியும் ஆளவந்தார் அருளிய 'ஸ்தோத்திர ரத்னத்தை' அனுசந்தித்து, இளை யாழ்வாரை உகப்பித்து, அவரால் அபிமானிக்கப்பட்டுத் தாமும் உகந்தார். பெரிய நம்பியோடு கூடிய இளையாழ்வாரும் ஆளவந் தாரை சேவிப்பதற்கு ஸ்ரீரங்கம் நோக்கிச் செல்லும்பொழுது வட திருக்காவிரியில் மிகுதியான வைணவர் திருக்கூட்டத்தைக் கண் டார். ஆளவந்தார் திருக்குமாரரான திருவரங்கப்பெருமாளரையர் முதலான அந்த வைணவர்கள் ஆளவந்தார் பரமபதமடைந்ததை விண்ணப்பிக்கக் கேட்ட இளையாழ்வார் மிகவும் மனம் வருந்தி னார். ஒருவாறு ஆறுதலடைந்தவராய் அவரது திருமேனியைத் தரிசிக்கும்பொழுது அவரது இடது கையில் மூன்று விரல்கள் மடங்கியிருப்பதைக் கண்டார்.

திருவிரல்கள் மடங்கியிருப்பதற்குக் காரணமான ஆளவந்தாரு டைய மூன்று மனக்குறைகளைப் பற்றிக்கேள்விப்பட்ட இளை யாழ்வார் அவருடைய மனக்குறையைத் தீர்ப்பதற்காக 1) வியாசரு டைய பிரம்மசூத்திரத்திற்கு பாஷ்யமெழுதி விவரிப்பேன். 2) அவ ருடைய தகப்பனாரான பராசர மகரிஷி பெயரையும், நம்மாழ்வார் பெயரையும் இருவருக்கு இடுவதன் மூலம் அவர்களுக்கு நன்றி செலுத்துவேன் என்று சபதம் செய்து அவரது திருவடிகளை வணங்கினார். அக்கணத்திலேயே ஆளவந்தாராது மூன்று விரல்க ளும் முன்போல் நிமிர்ந்தன. அதைக்கண்ட அனைவரும் இவரே வைதீகசிந்தாந்தத்தை நிலைநிறுத்துபவர்களுக்குத் தலைவராவார் என்பது உறுதி என்று நிச்சயித்தார்கள்.

ஆளவந்தாரை உயிரோடு சேவிக்காத மனக்குறையாலே, அரங் கநகரப்பனை சேவிக்காமலேயே காஞ்சிக்குத் திரும்பின இளை யாழ்வார் முன்போல் கோயில் கைங்கர்யங்களைச் செய்து கொண்டு வந்தார். ஒரு சமயம் தான் இனிச்செய்ய வேண்டியது என்ன என்று சிந்திததார். காஞ்சியில் வாழ்பவராய் பரம வைஷ்ணவராய் வரத னுக்கு அந்தரங்கராய் அவருக்குத் திருஆலவட்டக் கைங்கர்யம் செய்து வரும் திருக்கச்சி நம்பிடம் மிகவும் பணிவுடன் 'நம்பியே நான் நெஞ்சில் கொண்டுள்ள அர்த்தங்களைத் (கருத்துக்களை)

தேவப்பெருமாளிடமிருந்து அறிந்து அவை பெருமாள் உகந்தவை தாமா என்பதை எனக்குச் சொல்லுவீர் என்று பிரார்த்தித்தார். அவை என்ன என்பதையும் அதன் தத்வார்த்தத்தையும், திருக்கச்சிநம்பி வைபவத்திலேயே கண்டோம்.

இளையாழ்வாரும் பெரிய நம்பியை ஆச்சாரியராகக் கொள்வ தற்காக, ஸ்ரீரங்கத்திற்குச் செல்கின்றவர். வழியில் மதுராந்தகத்தில் சீதையோடு கூடிய ஏரிகாத்தராமனைச் சேவித்திருக்கையிலே, ஆளவந்தாரின் மற்ற சிஷ்யர்களால் இளையாழ்வாரை ஆட்கொள்ளும்படி நியமிக்கப்பட்டு, மதுராந்தகத்தை அடைந்திருந்த பெரிய நம்பியையும் அங்கேயே தெய்வச் செயலால் சந்தித்து அவருடைய இணையடி வணங்கி, தங்களுக்கு ஏற்பட்ட நியமனத்தை விசாரித்து அறிந்தபின், அந்த மதுராந்தகம் கோயில் மகிழமரத்தடியிலேயே பெரிய நம்பியை இளையாழ்வார் ஆச்சார்யராக ஆஸ்ரயித்தார். சங்க சக்கராங்கனம் ஊர்த்வபுண்டரதாரணம் (12 திருநாமங்கள் அணிதல்) தாஸ்ய நாமம். யாகஸம்ஸ்காரம், மந்திர ரத்னமாகியத்வயம் திரு அஷ்டாட்சரம் என்னும் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பெரியநம்பி இளையாழ்வாருக்குச் செய்தருளினார். இராமானுச முனி என்று அவருக்குத் தாஸ்யநாமம் வழங்கப்பட்டது.

பின்னர் அவ்விடத்திலிருந்து இராமானுஜரும் ஆசார்ய பெரிய நம்பியும் காஞ்சியை அடைந்து வரதராஜரை வணங்கியபின் இராமானுஜருடைய இருப்பிடத்தை அடைந்தனர். மிகவுகந்த பெரிய நம்பி பிரபந்தத்தில் (திராவிட வேத சாரம்) முதல் இரண்டாயிரமும், வியாசருடைய பிரம்ம சூத்திரத்தின் பொருளையும் ராமானுஜருக்கு உபதேசித்தார். மனைவியோடு வந்துள்ள அவரை இராமானுசரும் அவருக்கு வேண்டிய கைங்கர்யங்களைச் செய்து ஆராதித்து வந்தார். பின்னர் ஒரு நாள் இராமானுஜர் இல்லாத நேரத்தில் அவரது தேவிக்கும் பெரியநம்பி தேவிக்கும் மனகிலேசம் உண்டாகவே, இராமானுசர் திரும்பி வருமுன் மனைவியை அழைத்துக் கொண்டு ஸ்ரீரங்கம் சென்றுவிட்டார் பெரியநம்பி. விபரமறிந்த இராமானுஜர் மனைவியைக் கோபித்துத் தாய்வீட்டிற்கு அனுப்பி விட்டு துறவறம் மேற்கொண்டார். பேரருளாளப் பெருமான் சன்னிதியில் தேவப்பெருமாள் அவருக்கு எதிராஜர் என்ற தாஸ்ய நாமத்தை அளித்து அவரது துறவறத்தை ஏற்றுக்கொண்டார். அதற்குப்பின் எதிகட்கிறைவனான இராமானுஜர் திரிதண்டத்தை உடையவராய் சிகை, யஞ்ஞோபவீதம், காஷாயம் ஆகியவற்றோடு கூடியவராய், மந்திரரத்னமான த்வயத்தை அனுசந்திப்பவராய் வர்ணாஸ்ரம தர்மப்படி நடப்பவராக வாழ்ந்து வருவாராயினார்.

அக்காஞ்சியிலேயே கூரத்தாழ்வானும் ராமானுஜருடைய மருமக்களான வாத்ஸ்யகுலத் தலைவரான நடாதூராழ்வானும் வரதூலகுலத் தலைவரான முதலியாண்டானும் இராமானுஜரை ஆஸ்ரயித்தனர். ராமானுஜரான எதிராஜர் அவர்களுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்கள் செய்வித்தார். ஆளவந்தாரது அருள்நோக்கால் சுத்தியடைந்த யாதவப் பிரகாசரும், எதிராஜர் சிஷ்யராகி கோவிந்த ஜீயர் என்ற தாஸ்ய நாமம் பெற்று, எதிராஜர் பணித்தவண்ணம் சந்யாசிகளின் தர்மத்தை விளக்கும் 'யதிதர்மசமுச்சயம்' என்ற நூலை இயற்றினார். அதில் 1) ஸந்யாச விதி, 2) ஸந்யாசம் செய்துகொள்ள வேண்டிய காலம், 3) ஸந்யாசியின் சரீரத்திலுள்ள சிகை முதலிய அடையாளங்களும் சரீரத்திற்கு வெளியிலுள்ள தண்டம் முதலிய அடையாளங்களும், 4) ஸந்யாசஸ்வீகாரக்ரமம், 5) ஸந்யாசி முக்கியமாக அனுஷ்டிக்க வேண்டிய யோகாப்யாசம் முதலியவை, 6) ஸந்யாசி இரவும் பகலும் செய்ய வேண்டிய கிரியைகள், 7) ஸந்யாசிக்குரிய சமம், தமம் முதலான ஒழுக்கம், 8) யதிகளுக்குரிய சாதுர்மாஸ்ய விரதம் முதலியவை, 9) ஸந்யாசி ஓரிடத்தில் இருக்கைக்கும் ஸஞ்சரிக்கைக்கும் உரிய தேச காலங்கள், 10) ஸந்யாசிக்கு அக்ருத்ய கரணமும், கிருத்யா கரணமும் நேரிட்டால் செய்ய வேண்டிய பிராயச் சித்தங்கள், 11) ஸந்யாசி சரீர விவேகத்திற்குப்பின் செய்ய வேண்டிய ஸம்ஸ்காரங்கள் என்ற பதினோரு பாவங்களும் விளக்கப்பட்டுள்ளன.

கோபிகள் காமத்தினாலும், கம்ஸன் அச்சத்தினாலும், சிசுபாலன் துவேஷத்தினாலும் வ்ருஷிணி குலத்திலுள்ளவர்கள் ஸம்பந்தத்தினாலும் பாண்டவர்கள் ஸ்நேகத்தினாலும் நாங்கள் பக்தியினாலும் புனிதமடைந்தோம் என்றபடி இராமானுஜருக்குப் பண்ண எண்ணிய துவேஷமே. இறுதியில் அவருக்கு உஜ்ஜிவிதமான நல்வழியைக்காட்டியது. ஒரு சமயம் ஆளவந்தாரது முதல் குமாரரான திருவரங்கப் பெருமாளரையர் காஞ்சிக்கு சென்று வரதனை வணங்கி அவரிடமிருந்து ராமானுஜரை வரமாகப் பெற்று அழைத்துக்கொண்டு ஸ்ரீரங்கத்துக்குப் புறப்பட்டார். அவர்களுடன் கூரத்தாழ்வான் முதலியாண்டான் போன்ற அந்தரங்க சிஷ்யர்களும், உடன் வந்தனர். மதுராந்தகப்பெருமாளை வணங்கியபின் ஸ்ரீரங்கம் வரும்பொழுது பெரிபெருமாளான ஸ்ரீரங்கநாதனது ஆக்ஞை (கட்டளை)ப்படியே அவரை எதிர்கொண்டழைக்க பெரியநம்பி முதலான கோஷ்டிகள் வந்து கோயில் மரியாதைகளைச் செலுத்தி அபிமானம் செய்யப்பட்டவராய் பெரிய பெருமாளையும் பெரிய பிராட்டியாரையும், பரிவாரத்தேவதைகளையும் வணங்கி ஸ்ரீரங்க ஸ்ரீகார்ய நிர்வாஹத்திற்குத் தலைவரானார்.

பெரிய பெருமாளும் இராமானுஜரைத் தம் தாமரைக் கண்க ளால் குளிர நோக்கி ஜோதி வாய்திறந்து 'பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்' என்ற உபயவிபூதி ஐஸ்வர்யத்தையும் எமது கோயில் நிர்வாஹத்தையும் உமக்கும் உம்முடையார்க்கும் தந்தோம். நம் வீட்டின் கார்யத்தையெல்லாம் ஆராய்ந்து நடத்தும் என்று திருவாய்மலர்ந்து அருளி உடையவரென்ற தாஸ்ய நாமத்தை யும் வழங்கித் திரு விக்ரமன் வீதியில் வடக்கு மாடத்திருவீதியில் கீழ்க்கண்டத்தில் முதல் மனையான சேரன் மடத்திலே உடைய வரை வாழப்பண்ணினார். அங்கு வாழ ஆரம்பித்த காலத்திலிருந்து சுமார் அறுபத்தைந்து ஆண்டுகளாக திருவரங்கன் செல்வம் முற்றும் திருத்திவைத்த வரலாற்றைக் காண உள்ளோம்.

ஆழ்வானை தர்ஸன நிர்வாஹத்துக்குத் தமக்கு உதவியாக நியமித்து முதலியாண்டானை உள்துறைக் கைங்கர்யத்திலே நிய மித்தார். தாம் திருக்கொட்டார வாசலுக்குத் தென்புறத்தில் உமிக் கட்டில் குறட்டிலேயிருந்து திருவிடையாட்டப் பிரபாவமும், மேல் முகம் கீழ்முகங்களான திருத்தோப்புகளில் விசேஷங்களும் திருக் கொட்டாரத்தில் மரியாதைகளும் அறிவறியாக விசாரித்து, படித்த னம் முதலானதுகளும் திட்டம் பண்ணி நாள்தோறும் கணக்குக ளைப் பெருமாளிடம் பெருமாள் பெரிய அவசரம் செய்தருளிய பின்பு, ஏகாந்தமாக ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்து ஸ்ரீ கார்யம் விசாரித்து ஒழுங்குபடுத்தினார். இவரது கண்டிப்பை விரும்பாத விஷமிகள் உபாதைகளை உண்டாக்கியதையும் பொருட்படுத்தா மல், அகளங்க நாட்டாழ்வான் சமர்த்தராகையாலே திருவிடையாட் டம் விசாரிக்கின்ற பணியை அளித்து ஆலிநாடன் திருவீதியில் பெரிய திருமண்டபத்தின் குறட்டின் மேலே மண்டபங் கட்டுவித் தார்.

ஒருநாள் ஆண்டான் தத்யாநத்தோடு நாவல்பழம் அமுது செய்ததினால், அழகிய மணவாளப் பெருமாள் முகம் வாடியிருப்ப தைக் கண்டு ஆண்டானைக் கோபித்து, கருடவாகன பண்டிதரைக் கொண்டு பெருமாளுக்குச் சிகிச்சை அளித்துத் தன்வந்திரியைப் பிரதிஷ்டை செய்து அந்தக்கோயில் கார்யத்தைக் கவனிக்க கருட வாஹன பண்டிதருக்குக் கட்டளையிட்டு தினமும் இரவில் திருக் காப்புச் சேர்க்கிறதிற்கு முன்பாக குடிநீர் பாலமுது செய்தருளும்படி திட்டம் பண்ணித் திருவரங்கத்திருப்பதி வைகாநஸமாயிருக்கலா காது என்று முன்போல பாஞ்சராத்திரமாக மாற்றி ஏகாயநருக்கு ஐந்து பேருக்கு தீக்ஷை சாதித்து பாகவத நம்பியார் என்ற பெயரும்

வளங்கி, தோதவத்தித் தூய மறையோரான (வெள்ளை வஸ்திரம் தரிப்பவர்) கொடுவாளெடுப்பார் கையிலே பூட்டும் திறவுகோலும், தளையிடுவார் முத்திரையான கருடமுத்திரையும் சாதித்து ஆரிய பட்டான் காவலும், பல்லவன் விருப்பரையன் கணக்குமாக நடந்து வர ஏற்பாடு செய்தார்.

ஸ்தலத்தார் அனுமானித்த படியே வேளாளனான விழுப்பரை யனுக்கு கோயில் கணக்கனுக்குள்ள சடகோபதாஸன் என்ற தாஸ்ய நாமத்தை வழங்கி, ஸ்தல சம்பிரதி என்ற பெயரையும் நாட்டி, அவரவர்களுக்குக் கைங்கர்யங்களும் நிர்ணயம் பண்ணி முன்னர் கொடுவனர், கொடவர், கொடு வாளெடுப்பார், பாடுவார், தளையி டுவார் என்று ஐந்து கொத்திலே பரிஜனங்கள் அடங்கி நடந்து வந்ததைப் பத்துக்கொத்தாகப் பெருக்கி நடத்த வழிவகுத்தார். அவை யாவன முதல் கொத்தாக திருப்பதியார் என்பவர் முன்னால் கோயில் சம்பந்தமற்றுத் தன்னுடைய திருவடிகளை ஆஸ்ரயித்த திவ்ய தேசத்து வாசிகளாவார். திருப்பாற்கடல் தாஸர், திருக்குரு கைப்பிரான் போன்றவர்களுக்குக் கைங்கர்யம் நிர்ணயித்தார். இரண்டாம் கொத்தாக கொடவரில் திருத்தாழ்வரை தாஸர் வம்ச ரான அஞ்சுதிருநாமத்துக்கு, திருக்குருகூர் தாஸர், நாலுகவிப் பெருமாள் தாஸர், ஸடகோபதாஸர். திருக்கலிகன்றி தாஸர், ராமா னுஜதாஸர் என்ற திருநாமம் சாதித்து அவர்களுக்குக் கோயில் கைங்கர்யங்களையும் நிர்ணயம் பண்ணி திருப்பணி கொள்வார் என்று குறிப்பிட்டார். மூன்றாம் கொத்தாக பாகவத நம்பிமாரை பிரதிஷ்டிப்பித்து அவர்களுக்குக் கைங்கர்ய மரியாதை செய்வித் தார். நான்காவதாக கொடுவாளெடுப்பாரில், பெரியபெருமாள் திருவரங்கமாளிகையார் போன்றோருக்கு ஆஸ்ரயணாதிகளைப் பண்ணுவித்து உள்ளூரார் என்று பெயரிட்டார்.

அடுத்துப் பாடுவாரான நாதமுனி அரையர்களுக்கும் ஆஸ்ரய ணாதிகளைச் சாதித்து கைங்கர்யங்களையும் நிர்ணயித்து விண்ணப் பஞ் செய்வார் என்று குறிப்பிட்டார். ஆறாவதாக திருவரங்க வள்ளலார் தூயமணி வேழம் என்ற தம்முடைய சிஷ்யர்களுக்கு திருமஞ்சனம் முதலான கைங்கர்யங்களை உண்டு பண்ணி திருக்கர கக் கையார் என்று பெயரிட்டார். தளையிடுவாரான சேனைநாதப் பிரஹ்மராயர் முதலானோருக்கு ஆஸ்ரயணாதிகளை சாதித்து அவர் களுக்குப் பூர்வம் அந்தந்த பிரபுக்கள் பேர் கொடுத்துக் களை விளங்கும்படி பண்ணி அவர்களை ஸ்தாநத்தார் என்று குறிப்பிட் டார். அடுத்து ஸ்ரீ பாஷ்யம் முதல் சகல வேதாந்தங்களையும்

தினமும் ஸந்நிதியில் திருவாராதனை காலங்களில் விண்ணப்பம் செய்யும்படி தன்னுடைய சிஷ்யர்களான கருட வாகன பண்டிதர், பெரியநம்பி, ஆழ்வான், கோவிந்தப்பெருமாள் திருவரங்கத்தமுதனார், பிள்ளான், போன்றவர்களை நியமித்து அவர்களைப் பட்டான் கொத்து என்று பெயரிட்டார். ஆரியபட்டாளையும் ஒரு கொத்தாக்கி அவர்கள் கைங்கர்யத்தையும் திட்டம் பண்ணினார். புண்டரீக தாஸர் கைங்கர்யத்தையும் ஒரு கொத்தாக்கி தாஸன் கொத்து என்றழைத்தார்.

இவ்வாறு பத்துக்கொத்துக்கும் கைங்கர்யம் நிர்ணயம் பண்ணி தேசாந்திரிகளான ஏகாங்கிகள் நான்கு பேருக்கும் சில கைங்கர்யங்களை நியமித்துத் தங்கப்பிரம்பு 4, வெள்ளிப்பிரம்பு 2, தலைவளைசல் பிரம்பு 2 ஆக எட்டுப்பிரம்புக்கும் திருநாமதாரிகளை நியமித்துத் தேசாந்திரிகளான சாத்தாத முதலிகளுக்கும் கைங்கர்யங்களை நியமித்து திருவரங்கச்செல்வம் சிந்தாமே மங்காமே பொங்கும்படி ஆராய்ந்து கொண்டுவந்தார். திருநகரியிலிருந்து திரு அத்யயன உத்ஸவத்துக்கு ஆழ்வார் வரமுடியாமற்போகவே, தாமே கோயிலில் மங்கை மன்னனைத்தவிர ஏனைய ஆழ்வார்களையும் நாதமுனியையும் பிரதிஷ்டை செய்து பெருமாள் அருளப்பாடு, அரையருக்கு அருளப்பாடு முதலியன சாதிக்கும்படி பண்ணினார்.

இவ்வாறு கோயில் கைங்கர்ய பரரையும் அவரவர்க்குரிய பொருத்தமான கைங்கர்யங்களையும் திட்டம் செய்தருளி ஆழ்வார்களையும் பிரதிஷ்டை செய்து அவர்களுக்கு திருநட்சத்திர உபாஸனங்களையும் ஸ்ரீ பாஞ்சராத்ர ஆகமப் பிரகாரம் நடக்கத் திட்டம் பண்ணி பெருமாளுக்குத் திருவாராதனம் நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ, மாஸோத்ஸவ, வ்ருஷோத்ஸவ, மகோத்ஸவங்களையும் விஸ்தாரமாக நடத்தியருளினார். திருவீதியில் சிறியதாக ஒரு கோசாலை கட்டுவித்து அஞ்சுகிராமத்தை அழித்து வனமாக்கி ஆநிரை காத்த பெருமானைப் பிரதிஷ்டை செய்து பிருந்தாவனத்தைப்போல பசுக்கள் இருக்குமாறு பண்ணினார்.

இவ்வாறு அரங்கனால் அளிக்கப்பட்ட உபயவிபூதி சாம்ராஜ்யத்தை பெரிய நம்பியின் அருள் நோக்கால் (கடாட்சம்) கிடைத்ததாக எண்ணி, அவரது திருவடிகளை வணங்கி அவருக்கு வசப்பட்டவராய் விளங்கினார் உடையவர். பின்னர் பெரியநம்பி சொற்படி திருக்கோட்டியூர் நம்பியின் திருவடிகளை வணங்கி, திருமந்திரார்த்தத்தையும், கீதாச்ரம ஸ்லோகார்த்தத்தையும், அவரிடமிருந்து உபதேசம் பெற்று, அவர் ஒருவருக்கும் சொல்லாதே கொள்ளும் என்று

சொன்ன ஆணையையும் மீறி, திருக்கோஷ்டியூரிலேயே பலருக்கும் திருமந்ரத்தை உபதேசித்தார் இராமானுஜர். திருக்கோஷ்டியூர் நம்பியும் ராமானுஜரது திருஉள்ளத்தில் பொங்கும் கருணையை அப்போதே அறிந்து எதிகட்கிறைவரை 'எம்பெருமானாரே' என்று அழைத்துக் கொண்டாடி மிகவுகந்தவராய் இந்தத் தர்ஸனம் இன்று முதல் உமது பெயராலேயே 'எம்பெருமானார் தர்ஸனம் என்ற பெயர் பெற்று விளங்கும் என்று கூறினார்.

ஆகவேதான் வைணவம் அது முதல் இராமானுஜர் தர்சனம் அல்லது எப்மெருமானார் தர்ஸனம் என்ற பெயரில் விளங்குகிறது.

மறுபடியும் பெரியநம்பி நியமனப்படி திருவரங்கப் பெருமாளரையரை அணுகி வணங்கி அவரிடமிருந்து நம்மாழ்வார் திருவாய்மொழியையும் அதன் சாரார்த்தத்தையும் மற்ற ஆழ்வார்களின் பிரபந்தங்களையும், ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ரரத்னம், சதுஸ்லோகி என்ற இரு ஸ்தோத்ரங்களையும் அவற்றின் பொருளையும் பெற்றார். மறுபடியும் பெரியநம்பி ஏவியபடி திருமாலையாண்டானை அணுகி அவரிடமிருந்து திருவாய்மொழி, திருமங்கையாழ்வாரது பெரிய திருமொழி, மற்றும் முதலாயிரம், இயற்பா ஆகிய அனைத்துப் பொருளையும், கற்றார். இப்படிக் கற்று வரும்பொழுது சிற்சில இடங்களில் இப்படியும் அர்த்தம் இருக்கலாம் என்று எதிராஜர் அவரிடம் கூறினார். அதைக்கேட்ட ஆண்டான் திருக்கோஷ்டியூர் நம்பியிடமும் பெரிய நம்பியிடமும் ஆளவந்தார் அருளாத அர்த்தங்களை இவர் இப்படி விசுவாமித்ர சிருஷ்டியாகச் சொல்கிறாரே என்று குறைபட இவர் சொன்னவையும் ஆளவந்தார் வேறுஉருக்களில் அருளிச் செய்யப்பட்டவையேயாகும். ஆளவந்தார் திருஉள்ளம் உகக்காதது இவர் நெஞ்சில் தோன்றாது' என்று அவர்களால் கொண்டாடப்படவே பட்டார் எதிராஜர்.

இவ்வண்ணமாக ரகஸ்யார்த்தங்களோடுகூடிய உபய வேதாந்தங்களையும், ஆசார்யர்களிடமிருந்து கற்று கூரத்தாழ்வான், நடதூராழ்வான், முதலியாண்டான் முதலிய சிஷ்யர்களோடு மிகவுகந்து திருவரங்கத்தில் வாழ்ந்தார் எதிராஜர். அதற்குப்பின் ஆத்ரேய குலத்துதித்த பிராண தார்த்திஹரர் என்னும் கிடம்பியாச்சான், எதிராஜரிடம் சீடனாக வந்து சரணடைந்தார். தனது அத்தைக்கும் இராமானுஜரின் மாமாவான பெரிய திருமலை நம்பிக்கும் பிள்ளையான பிள்ளானை இராமானுஜருக்கு அறிமுகப்படுத்தி, அவருடைய நல்லொழுக்கத்தையும் எதிராஜ பக்தியையும், அவருக்குக்

கைங்கர்யம் செய்வதில் உள்ள விருப்பத்தையும் விண்ணப்பித்து இந்த யதிராஜரையே திருவேங்கடமுடையானாக நினைத்து அடை வாயாக என்று திருமலை நம்பி அவனுக்குச் சொன்னவார்த்தையை யும் ஆச்சான் இராமானுஜருக்குக் கூறினார். இளம் வயதினரான அப்பிள்ளானைக் கருணையோடு நோக்கி, அப்போதே கிடாம்பி ஆச்சானுக்கு எல்லா மந்திரங்களையும் அவற்றின் பொருளையும் உபதேசித்து அவரையும் தம் சீடராகக் கொண்டருளினார்.

அப்போது ஒரு சமயம் அவரிடம் விரோதம் கொண்ட ஒருசிலர், அவர் மாதுகரத்துக்கு (உஞ்சவிருத்தி) வரும்பொழுது விஷங்கலந்த பிட்சையை இடுவதை உணர்ந்த எதிராஜர் மூன்று தினங்கள் உணவே கொள்ளாமல் உபவாசமிருந்தார். விஷயத்தைக் கேள்விப்பட்ட பெரிய நம்பியும், திருக்கோஷ்டியூர் நம்பியும் பதறியபடியே திருவரங்கம் வந்தார்கள். அவர்களை எதிர்கொண்ட ழைக்க வந்த எதிராஜர், நடுப்பகலில் காவேரி மணலில் அவர்க ளைக் கீழே விழுந்து வணங்கா நிற்க, அவரது திருமேனியின் பரிவாலே கிடாம்பியாச்சான் பதறிக்கோபிக்க, உம்முடைய திருமே னியில் பரிவுடைய இந்த கிடாம்பியாச்சானால் தயாரிக்கப்பட்ட பிட்சையையே நீர் தினந்தோறும் கொள்வீர் என்று நம்பிகளிருவ ரும், யதிராஜருக்கு நியமித்தனர். அதுமுதல் அவரும் அப்படியே செய்து வந்தார்.

தனது சிறிய தாயாரின் பிள்ளையான கோவிந்தபட்டரின் கருத்தைத் திருத்தித் திரும்பவும் வைணவத்திற்குக் கொண்டு வருவதற்காக பெரிய திருமலை நம்பியிடம் எதிராஜரால் அனுப் பப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் அங்கு சென்று திரும்பிவந்து கோவிந் தபட்டர் உள்ளங்கை கொணர்ந்த நாயனாராயிருந்த நிலை போய், சிவலிங்க சம்பந்தம் கழியப்பெற்று பெரிய திருமலைநம்பியின் திருவடித்தாமரையில் வண்டு போலாயினார் என்னும் நற்செய் தியை எதிராஜருக்குத் தெரிவித்தனர். அதற்குப்பின் எதிராஜர் வேதார்த்த ஸங்க்ரஹத்தையும், பிரம்மசூத்ர வியாக்யானங்களான வேதாந்த சாரதீபங்களையும் கீதாபாஷ்யத்தையும் அருளி, கூரத்தாழ் வான், முதலியாண்டான் முதலான சிஷ்யர்களுக்கு உபதேசித்தார்.

ஆதியந்தமற்ற வேத வாக்கியங்களுக்கு முரண்படாத பொருளை விளக்குவதன் மூலம், வியாசருடைய பிரம்மசூத்திரங்க ளுக்கு உண்மைப்பொருளை விளக்கும் ஸ்ரீ பாஷ்யத்தை அருளிச் செய்து ஆளவந்தாரின் மனோரதமான தனது பொறுப்புகளில் முதலாவதை நிறைவேற்றினார். அதற்குப்பின் ஒரு பங்குனி உத்தி

ரத்திருநாளில் ஸ்ரீரங்காநாயகியும் ஸ்ரீரங்கநாதனும் சேர்த்தியிலே பேரானந்தத்தோடு திருமஞ்சனம் கண்டருளிய பின்னர், அவர்களைச் சரணமடைந்து அதை விளக்கும் கத்யத்ரயத்தையும் அருளிச் செய்தார் எதிராஜர். ஸ்ரீ பாஷ்ய கீதாபாஷ்ய சாரதீப வேதார்த்த ஸங்க்ரகங்களால் தத்வஹித புருஷார்த்தங்களை அறிந்தவனாய், மூன்று கத்யங்களாலும் ஸ்ரீமன் நாராயணனைச் சரணமடைந்தவனாய், அந்த ஸ்ரீயப்பதிக்கே கைங்கர்யம் செய்யும் அதிகாரிக்கு அந்த லக்ஷ்மிபதியை அடையும் வரையில் செய்ய வேண்டிய நித்யகைங்கர்யங்களை நித்யகிரந்தம் என்னும் நூலின் மூலம் தெரிவித்தார்.

அதற்குப்பின் யதிராஜர் பல சிஷ்யர்களோடு கூடியவராய், காஞ்சி மார்க்கமாகப் பக்தியோடு பேரருளாளனைச் சேவித்துப்பின் திருவேங்கட மலைக்குச் சென்றார். அங்கு பெரிய திருமலைநம்பி என்கிற ஆச்சாரியரால் எதிர்கொண்டழைக்கப்பட்டு அவரை வணங்கி அவரிடமிருந்து தீர்த்தப்பிரசாதம் பெற்று அவருடைய அருள்நோக்கினால் அலர்மேல் மங்கையுறை மார்பனை சரணடைந்து, அத்திருமலையிலேயே ஒரு வருட காலம் வாழ்ந்து அத்திருமலை நம்பியிடமிருந்து பலவிதமான அரும் பொருள்கள் நிறைந்த வால்மீகி வழங்கிய ஸ்ரீராமாயணத்தை உபதேசம் பெற்றார். அவர் தம்முடைய குமாரர்களான பிள்ளானையும் பிள்ளை திருமலை நம்பியையும் எம்பெருமானாரது சீடர்களாக்கினார். அவர்கள் இருவரும் எதிராஜரிடமிருந்து எல்லா அர்த்தங்களையும் உபதேசமாகப் பெற்றனர். திருமலைநம்பியின் பிள்ளையான பிள்ளானை திருமலைநம்பி எதிராஜருக்கு அபிமானபுத்திரராகத் தத்துக் கொடுத்தார்.

யதிராஜரும் நம்பியால் அளிக்கப்பெற்ற அப்பிள்ளானையும், தானே யாசித்துப்பெற்ற சிறிய தாயாரின் பிள்ளையான கோவிந்த பட்டரையும் அழைத்துக்கொண்டு காஞ்சி மார்க்கமாகவே ஸ்ரீரங்கத்தை அடைந்தார். அந்த கோவிந்தபட்டர் இல்வாழ்க்கையில் ஈடுபாடின்றி வீஷய வைராக்கியம் உள்ளவராய் இருப்பதைக் கண்டு அவருக்கு ஸந்யாச தர்மத்தையும் அவர் வேண்டிக்கொண்டபடி தனது பெயரைச் சுருக்கி எம்பார் என்ற தாஸ்யநாமத்தையும் வழங்கினார் எம்பெருமானார். ஸ்ரீரங்கநாதரின் அருட்பிரசாதத்தாலே கூரத்தாழ்வானுக்குப் பிள்ளையாகப் பிறந்தார். பிஞ்சாய்ப் பழுத்தவரான பட்டர். அந்தப்பிள்ளைக்கு பராசர மகரிஷி பெயரைச் சூட்டி, அவரால் இயற்றப்பட்ட விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தையும் அரங்கேற்றி ஆளவந்தாரது இரண்டாவது மனோரதத்தை நிறைவேற்றினார் எதிராஜர்.

ஒரு சமயம் தம் மடத்தில் இருந்துகொண்டு திவ்யப் பிரபந்தத்தில் ஒரு பாசுரத்தின் பொருளைப்பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டிருந்த யதிராஜரைக்கண்டு, பிள்ளான் அவர் ஆராய்ந்து கொண்டிருக்கும் பொருள் இதுவன்றோ என்று உரைத்தார். தாம் முடிவுகட்டிய பொருளும் பிள்ளான் கூறிய பொருளும் ஒத்திருப்பதைக் கண்ட எதிராஜரும் மிக்க ஆச்சர்யமடைந்தவராய், நாதமுனிகளின் ஞான வம்சத்தில் பிறந்த பெருமையினால் இவர் இந்தப்பொருளை அறிந்தார் என எண்ணி 'என் ஞானபுத்திரரே' என்று அணைத்துக் கொண்டார். எதிராஜரான இராமானுஜருக்கு ஞான புத்திரர் என்றும் அவரது பாதுகை என்றும் புகழ் பெற்றவரான பிள்ளான் நம்மாழ்வாருடைய திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படி வியாக்யானம் அருளிச் செய்தார். பிள்ளான் என்ற பெயருடைய அவருக்கு நம்மாழ்வாரின் திருநாமமான திருக்குருகைப்பிரான் என்னும் பெயரை இட்டு அவர் அருளிய ஆறாயிரப்படி வியாக்யானத்தையும் அரங்கேற்றி ஆளவந்தாரது மனோரதத்தை நிறைவேற்றினர். அநந்தரம் எம்பார் திருத்தம்பியார் சிறிய கோவிந்தப்பெருமாளுக்கு ஒரு குமாரர் அவதரித்தருள அதைக்கேட்டுவுகந்து அக்குமாரருக்கு 'பராங்குச நம்பி' என்று நம்மாழ்வார் திருநாமத்தைச் சூட்டி ஆளவந்தாரது மூன்றாவது மனோரதத்தையும் நிறைவேற்றினார் எதிராஜர்.

அதற்குப்பின்னர் எதிராஜருக்கும், யக்ஞமூர்த்தி என்ற அத்வைதிக்கும் விவாதம் நடந்தது. இவ்விவாதத்தில் தோற்றவர்கள் வென்றவர்கள் மதத்தைப் பின்பற்ற வேண்டும் என்பது உடன்பாடு. ஸ்ரீரங்கத்தில் பதினெட்டுநாள் விவாதப்போர் நடந்தது. மனம் சோர்ந்த எதிராஜரது கனவில் அவரது ஆராதனமூர்த்தியான வரதராஜர் தோன்றி அபயமளித்தார். அவரது அருள் பெற்ற எதிராஜர் பதினெட்டாவது நாள் மாயாவதி மதத்தலைவரான யக்ஞமூர்த்தியை வாதத்தில் வென்று, அருளாளப்பெருமாள் அருளால் வென்றமையால், அவருக்கு அப்பெருமானின் திருநாமத்தையும் தமது பெயரையும் சேர்த்து அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்னும் தாஸ்யநாமத்தையிட்டார். எதிராஜர் சிஷ்யராகி அவரும் 'ஞான சாரம்' 'பிரமேய சாரம்' என்ற இரு பிரபந்தங்களையிட்டருளினார். அவற்றில் ஸச்சிஷ்யனுக்கு (நல்ல சிஷ்யன்) ஸதாசார்யனே பரதேவதை. அவன் திருவடிகளில் கைங்கர்யமே பரமப்ராப்யம். (பெருந்தனம்) அவன்தான் பகவதவதார விசேஷம் என்ற கருத்துக்களை அருளிச் செய்தார்.

அதற்குப்பின்னர் எதிராஜர் திக்விஜயம் செய்ய எண்ணி, பல சிஷ்யர்களோடு புறப்பட்டு ஆங்காங்கு சென்று பிற மதத்தினர் அனைவரையும் வென்று காஷ்மீர தேசத்திலுள்ள ஸரஸ்வதி பீடத்தை அடைந்தார். அங்கு அவருடைய பிரம்மசூத்திரப்பாஷ் யத்தை சிரசாவகித்த ஸரஸ்வதி தேவி, இதுவே ஸ்ரீபாஷ்யம். மிகச்சிறந்த பாஷ்யத்தைச் செய்த நீர் இனி ஸ்ரீ பாஷ்யகாரர் என்றே புகழ் பெறுவீர் என்று கூறி அந்த ஸ்ரீ பாஷ்ய ஸ்ரீ கோசத்தையும் தனது ஆராதன மூர்த்தியான ஹயக்கிரீவரையும் அவரிடம் ஒப்ப டைத்தாள். அவற்றையும் ஏற்றுக்கொண்டு தனது திருவாராதனப் பெருமாளான வரதராஜனோடு தினந்தோறும் ஆராதித்துக் கொண்டு, திருவேங்கடமலைக்கு மீண்டும் எழுந்தருளினார்.

பக்தனான தொண்டைமான் சக்கரவர்த்தியின் வசம் சங்கு சக்கரங்களைக் கொடுத்திருப்பதைப் பற்றாகக்கொண்டு ஸ்ரீநிவாசன் சிவனே யொழிய விஷ்ணு அல்ல என்று சைவர்கள் வாதம் புரிய முற்பட, அவர் விஷ்ணுவே என்பதை நிலைநாட்டினார் எதிராஜர். ஆனால் சைவர்கள் பிடிவாதம் பிடித்தமையால் அனைவரும் கூடிச்சேர்ந்து நிச்சயித்து சங்கு சக்கரங்களையும், சூலத்தையும் கர்ப்பக்கிரகத்தில் வைத்துக் கதவைச்சாத்தி எல்லோரும் ஒன்றாக இருந்துகாவல் காத்து, காலையில் ஒன்றாகவே வந்து கதவைத்தி றந்து உள்ளே புகுந்து திருவேங்கடமுடையானைக் கண்டனர். சூலத்தை விடுத்துச் சங்கு சக்கரங்களைத் தரித்துக்கொண்டிருந்த ஸ்ரீநிவாசனைக்கண்ட சைவர்கள் உடனே ஓடிவிட்டார்கள். யதிராஜ ரும் திருமலைநம்பியும் மிக உகந்தனர். திருமலைநம்பியால் பரிபூரணமாகக் கடாட்சிக்கப்பட்ட எதிராஜர், எல்லா சிஷ்யர்களோ டும் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளி, வேதாந்த சித்தாந்தத்தை நிலைநாட் டுவதில் வல்லவரானார். பிற மதத்தவர்கள் அதனால் பொறாமை கொண்டனர்.

பிற மதத்தவர்களால் துர்ப்போதனை செய்யப்பட்ட சோழரா ஜன் சிவனைக்காட்டிலும் மேலானவன் இல்லை என்று ஏட்டில் எழுதிக் கையெழுத்திடுமாறு நல்லவர்கள் அனைவரையும் துன் புறுத்தி வந்தான். அவன் இதற்காக எதிராஜரை அழைத்து வரத் தன் சேவகர்களை அனுப்பினான். சிஷ்யர்கள் மூலம் இச்செய்தி ஸ்ரீரங்கத்தை எட்டியது. இதைச் செவியுற்ற கூரத்தாழ்வான் காஷா யத்தையும் திரிதண்டத்தையும் தரித்தவராய் பெரியநம்பியோடு கூட ராஜசபைக்குச் சென்றார். நடதூராழ்வான் முதலானோரோடு கூடியவராய் யதிராஜரும் வெள்ளை வஸ்திரம் சாத்திக்கொண்டு

மேற்குத் திக்கை நோக்கிப் புறப்பட்டார். அரங்கநகரப்பனே வழித் துணையாகக் கூடச் சென்றான்.

ஒரு மலையடியிலே இவரது சிஷ்யரான திருமலை நல்லா னின் சிஷ்யர்களான வேடமுதலிகள், மிகவும் தளர்ந்து வந்த எம்பெருமானார் கோஷ்டியை வரவேற்று உபசரித்து குளிர்போக்கி உண்ண தேனும் தினைமாவும் அளித்தனர். பின்னர் பக்கத்திலுள்ள ஒரு ஊரில் உள்ள அந்தணர் இல்லத்திற்கு அழைத்துச்சென்று, அங்குள்ள கட்டளைவாரி என்ற அந்தணனகத்திலே 'அமுது செய் யப் பண்ணுவியுங்கள்' என்று கூறிவிட்டுச் சென்றனர். அவனது பார்யை முன்னரே எதிராஜர் சிஷ்யையாதலால், முதலில் எதிரா ஜரை அடையாளக்காண மாட்டாது திகைத்தவள் பின்னர், தன் ஆத்மாவை உய்வித்த எதிராஜர் என்று கண்டு, தன் கணவனை எம்பெருமானாரது சிஷ்யனாக்கி, தன் வீட்டில் அவர்கள் சிலநாள் தங்கிப்போகுமாறு உபசரித்து, பின்னர் அவருக்கு வேண்டிய காஷாயம் திரிதண்டம் முதலியவற்றையும் சமர்ப்பித்தாள். சாஸ்தி ரங்களில் சொல்லப்பட்ட முறையில் மறுபடியும் ஏற்றுக்கொண்டு எம்பெருமானார், எம்பெருமான்களுக்குத் திருவாராதனம் செய்து வந்தார். இவ்வாறு வழிநடந்து மேல்நாட்டை (மைசூரை) அடைந் தார் எதிராஜர்.

அந்த தேசத்து அரசன் விட்டலதேவராயனும், அவனது மக ளுக்குப் பிடித்திருந்த பிசாசை ஓட்டிய எதிராஜரது திறமையான பக்தியில் ஈடுபட்டுத் தானும் வைணவனாக மாறி விஷ்ணுவர்த்த னன் என்ற நாமமேற்று அவரது சீடரானான். எதிராஜரை அவனுக்கு அறிமுகம் செய்த தொண்டனூர் நம்பி போன்ற சில அந்தணர் தலைவர்களும் எதிராஜரது சீடர்களானார்கள். அவ்வரசனை வசப்ப டுத்தியிருந்த ஜைனர்களும் எதிராசரால் வாதில் தோற்கடிக்கப்பட்டு அரசனால் தண்டிக்கப்பட்டனர். தொண்டனூர் நம்பிக்கு 'நம்பிதம் பிரான்' என்ற திருநாமம் வழங்கப்பட்டது. எம்பெருமானாரது மஹாப்பிரபாவம் எல்லோருக்கும் தெரியலாயிற்று.

இவ்வாறு எம்பெருமானார் சிங்கர் கோவிலில் இருக்கும்பொ ழுது அவர்கள் கனவில் தோன்றிய திருநாராயணன், யாதவாத்ரியில் பூமிக்கு அடியில் இன்ன அடையாளமுள்ள இடத்தில் நான் புதைந்து இருக்கிறேன். என்னை அங்கு பிரதிஷ்டை செய்வாய். ஊர்த்வ புண்டரத்திற்கு (திருநாமம்) வேண்டிய வெள்ளை மண் ணையும் எடுத்துக்கொள்வாய் என்று அவரிடம் கூறி அருளினான். அப்போது எதிராஜரும் மிகவும் உகந்தவராய் கல்யாண ஸரஸ்ஸில்

நீராடிப் பரிசுத்தி பெற்றவராய், அவ்வடையாளங்களைக் கொண்டு திருநாரணனோடு கூடிய விமானத்தைக் கண்டுபிடித்து, அக்கோயி லிலே மூலமூர்த்தியான திருநாரணனைப் பிரதிஷ்டை செய்தார். வெள்ளை மண்ணையும் சிஷ்யர்களைக் கொண்டு எடுத்துத் தரித் துக்கொண்டு திருநாராயணனின் உத்ஸவ மூர்த்தியான ராமப்பிரிய ரைத் தேடிக்கொண்டு டில்லிக்குச் சென்றார். அங்கு டில்லி அரச னான சுல்தானின் பெண்ணின் அந்தப்புரத்தில் இருந்த அப்பெரு மாளை 'என் செல்லப் பிள்ளாய் வருக' என்று கூவினார். ஓடிவந்து மடியில் ஏறிய ராமப்பிரியரை அழைத்துக் கொண்டுவந்து திருநாரா யணபுரத்தில் உற்சவ மூர்த்தியாகச் சேர்த்து, அந்தச்செல்வப்பிள்ளை யான திருநாரணனுக்கு உற்சவம் முதலானவற்றைச் செய்து இன்புற் றார். அப்பெருமானைத்தேடி வந்த சுல்தானின் பெண் அங்கேயே ஒன்றுபட்டு மறைந்தாள். அவளையும் ஆண்டாளைப்போல துலுக் கநாச்சியார் என்று வணங்குகின்றனர்.

பெரிய நம்பியும் கூரத்தாழ்வானும், தர்சனத்திற்காக (வைண வத்திற்காக) தர்சனத்தை (கண்களை) இழந்ததைக் கேள்விப்பட்டு மிக வருந்திய எதிராஜர் பெரியநம்பி பரமபதமடைந்த போதிலும், கூரத்தாழ்வான் க்ஷேமமாயிருப்பதையும், சோழ அரசன் விரைவி லேயே துர்மரணம் அடைந்ததையும் கேள்விப்பட்டு ஸ்ரீரங்கச் செல்வத்திற்கு உபத்திரவம் நீங்கியதை எண்ணி ஆனந்தமடைந்தார். அதற்குப்பின்னர் கல்யாண தீர்த்தம் சிறப்படைந்தது. அந்நகரமும் திருநாராயணபுரமாயிற்று. அங்குள்ள ஸ்ரீயப்பதியும் ஸம்பத்குமார் (செல்வப்பிள்ளை) ஆனார். யதிராஜரின் ஜயஸ்தானமாயிற்று அவ் வூர். மேலும் எதிராஜர் தமது திருவடிகளைச் சரண்புகுந்த ஜனங்க ளின் நன்மைக்காக தமது அர்ச்சாமூர்த்தியை (மூலவரை) அவர்க ளுக்கு அளித்தார். அதனால் கிரேதாயுகத்தில் நாராயணாத்ரி என்றும் திரேதாயுகத்தில் வேதாத்ரி என்றும் துவாபரயுகத்தில் யாதவாத்ரி என்றும் அழைக்கப்பட்டு வந்த யாதவாத்ரி, இராமானுஜர் பெய ரால் யதுகிரி என்றும் பெயர் பெற்றது.

செல்வப்பிள்ளையையும் யதுகிரி நாச்சியாரோடு கூடிய திருநா ராயணனையும் வணங்கி, அங்குள்ள சிஷ்யர்களை (திருநாராய ணனை) முறையாகப் பூஜிக்கும்படி நியமித்து விட்டு சில அந்த ரங்க சிஷ்யர்களோடு திரும்பிய எதிராஜர் ஸ்ரீரங்கத்திற்குச் சென்று ஸ்ரீரங்கநாதனை ஆனந்தக்கண்ணீரோடு வணங்கினார். குலோத் துங்க சோழன் மனந்திருந்தி உடையவரிடம் மன்னிப்புக்கேட்டு திருவரங்கச் செல்வத்தைத் திருப்பிக்கொடுக்க வாங்கி முதலியாண்

டானுக்குத்தான ஸாஸனம் பண்ணுவித்து அந்த விருத்தாந்தத்தை (சம்பவத்தை) ஆர்யபட்டாள் வாசலிலே சிலாசாசனம் செய்தார். இவ்வாறு ஆண்டானைக் கொண்டு, ஸ்ரீகார்யம் நடத்தி வருகையில் பெரிய நம்பி குமாரருக்கு ஆளவந்தார் மடத்தையும், ஆழ்வானுக்கும் ஆண்டானுக்கும் மனைகளையும் ஸ்ரீ சேநாபதி பட்டையமும் ஸாதித்தருளினார். இவ்வாறு எம்பெருமானார் முதலிகளுடன் வாழ்ந்தருளி நூறு சாதுர்மாஸ்யா நந்தரம் (நூறு ஆண்டுகாலம்) கழித்து ஸதாபிஷேகமும் கண்டருளி எதிராஜன் என்னும் பேர் பெற்று தம் சிஷ்யரான ராமானுஜதாசன் மூலம் தன்னுடைய விக்ரகத்தைப் பண்ணுவித்து தன் சக்தியை அதில் ஆதானம் பண்ணிக் கந்தாடை ஆண்டானைக் கொண்டு ஸ்ரீபெரும்புதூரில் பிரதிஷ்டை செய்தார்.

அவதாரங்களெல்லாம் ஒத்திருக்க ராம கிருஷ்ணாஅவ தாரங்களுக்கு முக்யத்வம் உண்டானாற்போல, திவ்ய தேசங்களெல்லாம் ஒத்திருக்க கோயில், திருமலை, பெருமாள் கோயில், திருநாராயண புரத்திற்கு முக்கியத்வம் உண்டாவதைப்போல, ஆச்சார்யர்கள் எல்லோரைக்காட்டிலும் எம்பெருமானாருக்கு முக்கியத்வம் ஏற்பட்டது. பின்னர் அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீரங்கத்திற்குத் திரும்பிச்சென்று ஸ்ரீரங்கநாதரை ஆனந்தக்கண்ணீர் ததும்ப வணங்கினார். பின்னர் அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள்; ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கான திருஅத்யயன உத்ஸவம் ஆழ்வார் திருநகரியிலிருந்து நம்மாழ்வார் எழுந்தருள இயலாமையால் தடைப்பட்டு விட்டது என்று அவரிடம் கூறினார்கள். அந்த ஸ்ரீரங்கத்திலேயே நம்மாழ்வார் விக்கிரகம் ஒன்றைப் பிரதிஷ்டை செய்வித்து, அவரைக்கொண்டு அரங்கநகரப்பனுக்கு இருபது நாள் அத்யயன உத்ஸவத்தைச் செய்வித்து பிற்காலத்தில் மற்ற ஆழ்வார்களின் பிரபந்தங்களையும், தன் விஷயமான இராமானுஜ நூற்றந்தாதியையும் சேர்த்துத் திருவரங்கன் செவிசாத்துப்படி செய்தார். மற்றைய ஆழ்வார்களுக்கும் ஆண்டாளுக்கும் விக்கிரகப் பிரதிஷ்டையும் செய்து வைத்தார்.

அதைப்போலவே மிகச்சிறந்த திவ்ய தேசங்களிலும் ஆழ்வார்களுடையவும் ஆண்டாளுடையவும் விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்து அத்யயன உத்ஸவமும் நடக்கும்படி செய்தார். எம்பெருமாளுக்கு ஏற்பட்டதான பாஞ்சராத்திர ஆகமவிதி திருவாராதனம், ஆளவந்தார் காலத்திற்குப்பின் வைகானஸ ரீதியாக மாறி நடந்ததை மாற்றி உடையவர் முன் போலவே பாஞ்சராத்திர விதிப்படி

நடக்கும்படி பண்ணுவித்தார். உடையவர் திருவரங்கப்பெருமாள ரையரிடத்திலே திருவாய் மொழியை பண் இசை தாளத்துடன் ஓதி அப்படியே பாடவல்ல பல விண்ணப்பஞ் செய்வாரை (அரையர்களை) ஏற்படுத்தி, அவர்களுக்குத் தனி அலங்காரமும் மான்யங்களும் வழங்கினார். பிள்ளை உறங்காவல்லி தாஸரைப் பெரிய பெருமாளது அடியாராக்கி, பெருமாளுக்குத் திருமேனிக் காவலராய் நியமித்தார். அவருடைய மருமக்களான வண்டரும், சுண்டரும் மடத்திற்குத் ததியாராதனத்துக்கு அழுதுபடி முதலா னவை நடத்திக்கொண்டு வந்தார்கள்.

உடையவர், திருவரங்கப்பெருமாள் அரையர் சந்நிதியில் ஆள வந்தாரது ஸ்தோத்ரத்திற்கு ஆசார்யன் உபாயம் என்னும் அர்த்தத் தைப் பெற்றுலட்சுமணமுனி என்ற நாமத்தையும் பெற்றார். உடை யவர் கொங்குப்பிராட்டி என்ற பெண்மணிக்கு இருமுறை த்வ யத்தை உபதேசித்துத் தன் திருவடி நிலைகளை அருளிச்செய்தார். உடையவர் திருவேங்கட யாத்திரைக்கு எழுந்தருளும் வழியில் திருவெள்ளரை, திருக்கோவலூர் ஆகிய கோவில்களைச் சேவித்து அங்கிருந்து புறப்பட்டு அஷ்ட ஸஹஸ்ரநாமம் (எண்ணாயிரம்) குடியைச்சேர்ந்த யக்ஞேசர் (எச்சான்) என்பவர் ரஜோகுணம் மிகுந் தவராய் இருக்கையாலே அவர் வீட்டில் அமுதுண்ண மறுத்து, சாத்வீகையான பருத்திக் கொல்லையம்மாள் வீட்டில் எழுந்தருளி, அமுது செய்தார். பின்னர் எச்சானையும் அவன் தவறை உணர்ந்து திருந்தும்படி செய்தார்.

உடையவர் தம் தர்சனத்தை நிலைநாட்ட திக்விஜயங்கள் செய்தார். திருமாலிருஞ்சோலை அழகரை மங்களாசாசனம் செய்து, தென்மதுரையில் கூடலழகரையும், ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ் வாரையும், வடபெருங்கோயிலுடையானையும், ரங்கமன்னாரை யும் ஆண்டாளையும் மங்களாஸாஸனம் செய்தார். ஆண்டாள் பாரித்தபடியே நூறுதடா நிறைய அக்கார அடிசிலும், நூறுதடா நிறைய வெண்ணையும் சமர்ப்பித்து ஆண்டாளின் அருள்நோக்கை யும் அவளால் கோயிலண்ணர் என்று சிறப்பாகச் சொல்லப்படும் சன்மானத்தையும் பெற்றார்.

பின்னர் திருப்புளியங்குடி முதலான திவ்ய தேசங்களைச் சேவித்து, திருக்குருகூரில் நம்மாழ்வாரையும், பொலிந்து நின்ற பிரானையும் மங்களாஸாஸனம் செய்தார். 'மதுரகவிகள்' என்று திருநாமமாயிருந்த ஆழ்வார் திருவடிநிலைகளுக்கு 'இராமானுசன்' என்று திருநாமம் ஆக வேண்டும் என்று உடையவர் பிரார்த்தித்

தை ஆழ்வார் அங்கீகரித்தார். உடையவர் திருக்கோளூரில் வைத்த மாநிதிப் பெருமாளைச் சேவிக்கச் சென்றபொழுது அங்குள்ள ஒரு சிறு பெண்ணோடு ஸம்வாதம் செய்து அவளது பிரபந்த அறிவினை மெச்சி அக்குடும்பத்தை ரட்சித்தார். பின்னர் நவ திருப்பதிபெரு மாள்களையெல்லாம் வணங்கி, வானமாமலை, திருக்குறுங்குடி எம்பெருமான்களையும் மங்களாசாசனம் செய்தார். திருக்குறுங்குடி நம்பிக்கு ஆசார்சயராக இருந்து த்வயத்தை உபதேசித்து 'வைஷ் ணவ நம்பி' என்ற தாஸ்ய நாமத்தையும் சாத்தியருளினார். திருவண் பரிசாரம், திருவட்டடாரம், திருவனந்தபுரம் போன்ற குட்டநாட் டுத் திருப்பதிகளையும் மலைநாட்டுத் திருப்பதிகளையும் மங்களா சாசனம் செய்தார். சோழராஜாவால் இடிக்கப்பட்ட தில்லைச்சித்திர கூடத்திலிருந்து ரகசியமாக எடுத்துச்செல்லப்பட்ட கோவிந்தராஜப் பெருமாளின் உத்சவ மூர்த்தியை வேங்கடமலை அடிவாரத்தில் பிரதிஷ்டை செய்து முறைப்படி ஆராதனைக்கு ஏற்பாடு செய்தார். நம்மாழ்வார் முதலான ஏனைய ஆழ்வார்களையும், பிரதிஷ்டை செய்தபின் வெற்றி வீரராய் சிஷ்யகோடிகளோடு திருவரங்கத்திற் குத் திரும்பச் சென்று பின் மற்ற மதங்களைப் பற்றியிருந்த ஜனங்களைத் தன் அடியார்களாக்கி சிஷ்யர்களுக்கு முறைப்படி ஒவ்வொரு கைங்கர்யத்தையும் பிரித்துக்கொடுத்து கவலை நீங்கப் பெற்றவராய் இன்புற்றிருந்தார் எதிராஜர்.

உடையவர் தெற்கிலுள்ள திவ்யதேசத்துப் பெருமான்களை எல்லாம் சேவித்து மங்களாசாசனம் செய்தபின் வடநாட்டிலுள்ள பத்ரிஹாஸ்ரமத்தில் நர நாராயணனையும், சாளக்ராமத்தில் மலை யையும், மற்றும் அயோத்தி, மிதிலை, காசி, ஜகன்னாதம் முதலிய இடங்களில் பெருமான்களையும், சேவித்து மங்களாசாசனம் செய் தார். வாரங்கல் என்ற பட்டிணத்தில் 'பாஞ்சாலராயன்' என்ற பெருமாளை பிரதிஷ்டை செய்தார். ஸ்ரீகாகுளத்தில் ஸ்ரீவல்லபன் என்னும் எம்பெருமானுக்கு தெலுங்குராயன் என்று திருநாமம் சாத்தினார். இவ்வாறு உடையவர் வடநாடு தென்னாடு முதலிய எல்லா இடங்களுக்கும் சென்று வைணவத்திற்குச் சேவை செய்த பாங்கினை எல்லாம் ஸ்ரீபிள்ளை லோகம் ஜீயர் அருளிய 'ஸ்ரீ ராமானுஜார்ய திவ்ய சரிதை' என்ற மணிப்பிரவான நடையில் எழுதப்பட்ட நூலில் காண்கிறோம்.

எம்பெருமானாருக்கு கூரத்துஆழ்வான் தாளிணைகள். முதலி ஆண்டான் பாதுகைகள், எம்பார் பாதச்சாயை (திருவடி நிழல்) அருளாளப்பெருமாள் எமுபெருமானார் ஆத்மஸமர். பிள்ளை

உறங்காவில்லிதாசர் (பாஹிசமர்) தோழர். பெரிய நம்பி தொடக்க மான ஐந்து ஆசார்யர்கள் ஐந்து தலைகள். திருக்குருகைப் பிரான் பிள்ளான் புத்திரஸமர் ஆவார்கள். ஆழ்வார்களுடைய அருளிச்செ யல்களைக் கொண்டு பாஷ்யகாரர் ஸ்ரீ ஸூத்ர பாஷ்யத்தை அருளிச் செய்து அதைக் கிடாம்பி ஆச்சான் கிடாம்பிப் பெருமாள் முதலா னோர் மூலமாக சாரதா பீடத்துக்கு அனுப்பினார். ஸரஸ்வதி தேவி அதைத் தலையில் தரித்து ஸ்ரீ பாஷ்யகாரர் என்று எம்பெருமானாருக் குத் திருநாமம் சாத்தினாள் என்பதை முன்பே கண்டோம். உடைய வர் ஓர் ஊமைக்கு தம்முடைய திருமேனியை ரக்ஷகமாகக் காட்டிய ருள அதைக்கண்ட கூரத்தாழ்வான்தான் ஊமையாய் பிறக்கவில் லையே என்று தம்மை வெறுத்தார். முதலியாண்டான் தன் குமார னுக்கு இராமானுஜன் என்று திருநாமம் சாத்தினார். கந்தாடையாண் டான் என்று பிரசித்தி பெற்ற அவரை ஆட்கொண்ட வில்லி ஜீயரது சீடனாக்கினார். ஏனைய சீடர்களும் தம் குமாரர்களுக்கு உடையவ ரது திருநாமம் இட்டனர். அவ்வாறு செய்த ஒரு வைணவ வண்ணானுடைய பிள்ளைக்கும் இராமானுசர் அருள் புரிந்தார்.

இவ்வாறு உபய கைங்கர்ய நிர்வாஹகராய் செங்கோல் செலுத்தி உபயவிபூதியிலும் தம்முடைய சிறு முறி செலுத்தி, 74 ஆச்சார்யார்களும் எழுநூறு ஜீயர்களும் பன்னீராயிர ஏகாங்கிகளும் அனேக வைணவர்களும் சேவிக்க திருவரங்கத்திருப்பதியிலே வாழ்ந்து கொண்டிருந்தார்.

எம்பெருமானார் திருவடிகளில் சரணமடைந்த முதலிகளான எழுபத்துநாலு ஆச்சார்யர்களாவது, ஆளவந்தார் குமாரர்களில் சொட்டை நம்பி தொடங்கி பெரியநம்பி குமாரர், திருக்கோஷ்டியூர் நம்பி குமாரர், திரு மாலையாண்டான், பெரிய திருமலைநம்பி முதலிய ராமானுசரது ஆச்சார்ய குமாரர்களும், கூரத்தாழ்வான் முதலியாண்டான் முதலான அவரது சிஷ்யர்களின் குமாரர்களுமாக எழுபத்து நாலு சிம்மாசனாதிபதிகளையும் நியமித்தார். அவர்களில் முக்கியமானவராக நால்வரை ஸ்ரீ பாஷ்ய சிம்மாசனாதிபதிகளாக வும் அந்நால்வரிலும் தன் ஞான புத்திரனான பிள்ளானை உபய வேதாந்த பாஷ்ய சிம்மாசனாதிபதியாகவும், ராமானுஜாச்சாரியார் நியமித்தருளினார். அந்த 74 சிம்மாசனாதிபதிகளுடன் எழுநூறு ஸந்யாசிகளுடனும், பன்னீராயிரம் பரமஏகாந்திகளுடனும், முன் னூறு கொற்றியம்மையார்களுடனும், எண்ணிறந்த ராஜாக்களா லும், மற்றும் பல சாத்தின. சாத்தாத முதலிகளாலும் பிள்ளையு றங்கா வில்லிதாசர் முதலான திருநாம தாரிகளாலும் பொன்னாச்சி

யார் போன்ற திருநாம தாரிஸ்திரீகளாலும், ஆச்ர்யமான சிஷ்ய ஸம்விருத்தி பெற்றவராய் விளங்கினார்.

பெரியவர்களான கூரத்தாழ்வான் முதலியாண்டான், தம்பி யான எம்பார், ஞானபுத்ரரான பிள்ளான் அனைவரையும் தம் அருள்நோக்கால் ஆசிர்வதித்து மகிழ்ந்தார். சில சிஷ்யர்களால் பிரார்த்திக்கப்பட்டவராய் (உத்ஸவ மூர்த்திகளான) தம் அர்ச்சா விக்கிரங்களை முறையே ஸ்ரீரங்கத்திலும், ஸ்ரீ பெரும்புதூரிலும் திரு நாராயணபுரத்திலும் பிரதிஷ்டை செய்து சீடர்களின் விருப்பத் தைப் பூர்த்தி செய்தார்.

இப்பொழுதும் எனக்கு இடமின்றி விரட்டியதால், நான் எனக்குச் சமயம் வாய்க்கும்பொழுது, உமது மதத்தையும் கலக்கு வேன் என்று ஆணையிடுகிறேன் என்று கலிபுருஷன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, ஆதிபுருஷனான ஸ்ரீயப்பதியைச் சரண டைந்து எனது தர்சனம் (மதம்) தடையற்றதாய் வாழக்கடவது என்று அருள்புரியுமாறு பிரார்த்தித்தார் எதிராஜர். தனதுஅந்திம தசையில் தன் குலதெய்வமான தேவப்பெருமாளையும் ஸரஸ்வதி அளித்த ஹயக்கீவனையும் தன் ஞானபுத்திரரான பிள்ளானுக்கு அளித்தார் மூவுலகிலும் சிறப்புறப் புகழடைந்தவரான எதிராஜர்.

இப்படியிருக்கிற உடையவர் திருவடிகளில் நித்ய கைங்கர்யம் பண்ணும் முதலிகள்:- கூரத்தாழ்வானும் முதலியாண்டானும், நடதூரதாழ்வானும், பட்டர்வர்க்கமும் ஸ்ரீபாஷ்யத்திற்கு உசரத்து ணையாக இருப்பவர்கள். அருளாளப் பெருமாள் எம்பெருமானார் திருவாராதனம் செய்தருளுவார். கிடாம்பிப் பெருமாளும் கிடாம்பி யாச்சானும் திருமடைப்பள்ளிக்குக் கடவராயிருப்பர். வடுகநம்பி எண்ணைக்காப்புச் சாத்துவார். கோமடத்துச் சிறியாழ்வான் கலசப் பானையும் ஸ்ரீபாதாட்சையும் எடுப்பார். அவரது சீடரான பிள்ளை உறங்கா வல்லிதாசர் கருவூலம் (பணப்பற்றுகள்) நோக்குவார். அம்மங்கி பாலமுதம் காய்ச்சுவார். உக்கலாழ்வான் பிரசாதம் எடுப்பார்.

உக்கலம்மாள் திரு ஆலவட்டம் பரிமாறுவார். மாருதிப் பெரியாண்டான் திருக்கைச் செம்பு பிடிப்பார். மாருதிச்சிறியாண் டான் மடத்திற்கு அமுதுபடி கறியமுது, நெய்யமுது முதலானவை நடத்திப்போகுவார். தூயமுனிவேழம் திருமஞ்சனமெடுப்பார். திரு வரங்க மாளிகையார் ஸ்ரீ பண்டாரம் நோக்குவார். பிள்ளை உறங்கா வல்லிதாசர் சீடர்களான வண்டரும் சுண்டரும் கைக்கு ஆயிரம்

பொன்னுக்கு ராஜசேவகம் பண்ணி மடத்துக்கு திருக்கை வழக்காக் கியருள்வார்கள். இராமானுச வேளைக்காரர் திருமேனிக்காவலாய் இருப்பார்கள். அகளங்க நாட்டாழ்வான் பிரதிபக்ஷ நிரஸனம் பண்ணுவார்.

இவ்வாறு நூற்றிருபது பிராயங்கள் வரை வாழ்ந்திருந்து திருவரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்த இராமானுஜர், வாழ்க்கையில் அருசி பிறந்து, எம்பெருமானிடம் என்னைக் காலக் கழிவு செய்யாமல் உன் பொன்னடி சேர்த்து, ஒல்லைவேறே போகவிடாது, எஞ்ஞான்றும் விடாதொழிய வேணும் என்று பிரார்த்திக்க அரங்கனும் இற்றைக்கேழாம் நாள் அப்படியே செய்கி றோம் என்று திருவாய் மலர்ந்தருளினார். பின்பு எதிராஜர் மடத்தி லுள்ள அனைத்துக் கொத்திலுண்டானவர்களையும் சித்த மகிழ்ச்சி யுடன் அனுப்பியருளி, சிஷ்யவர்க்கங்களுக்கு அர்த்த விசேஷங்க ளையெல்லாம் மூன்று நாளாக உபதேசித்து, இவ்வர்த்தங்களை யெல்லாம் நீங்களும் விஸ்வசித்து உங்களைப் பற்றினார்க்கும் பரம்பரை பரம்பரையாய் உபதேசியுங்கள் என்று அருளினார். பின்னர் தாம் அற்றைக்கு நாலாம் நாள் பெரிய பெருமாள் திருவடிகள் ஏறப்போகிறோம் என்பதை எல்லோர் மனமும் கலங்கு மாறு கூறவே அவர்கள் நாங்களும் கூட வருவோம் என்று கூற, உடையவர் அப்படிச்செய்தால் அவர்களுக்குத் தம்மோடு சம்பந்தம் இராது என்று சொல்லித் தேற்றித் தரிக்கப்பண்ணினார்.

பின்னர் அந்தத் தர்சனத்தைத் தனக்குப்பின்னர் ஏற்று நடத்து மாறு பெரியபட்டருக்கு (பராசரபட்டர்) கட்டளை இட்டருளி, திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலான முதலிகளை பட்டருக்கு இஷ்டமாயிருங்கள் என்று ஆக்ஞாபித்து கோயில் அனைத்துக்கொத் தையும் (ஊழியர்களையும்) அழைப்பித்து (அபராத க்ஷாமணம்) மன்னிப்பு வேண்டினார். அவர்கள் எவ்வாறு நாங்கள் தரித்திருப் போம் என்று துக்கிக்க அணியரங்கரனிருக்க உங்களுக்கு ஒரு தாழ்வில்லை என்று கூறி எல்லோரும் பட்டரை முன்னிட்டு ஆராய்ந்து போருங்கோள் என்று கூறிப் பட்டரைப்பார்த்து பெரிய பெருமாள் திருவாராதனத்தையும் பெருக்க நடத்திக்கொண்டு நம் முடைய தர்சனத்தையும் நன்றாய் நடத்திக்கொண்டு வாரும் என்று கூறியருளினார்.

பின்னரும் அவர்களைப்பார்த்து ஒருவன் பிரபந்நனானால் அவனது ஆத்ம யாத்ரை ஈஸ்வரா தீனமாகையாலே அதற்கு வருந்தக்கூடாது. வருந்தினால் ஆத்ம சமர்ப்பணம் பொய்யாகிவி

*டும். அவனது தேகயாத்திரை கர்மாதீனமாகையாலே அதுக்கும் வருந்தக்கூடாது. வருந்தினால் நாஸ்திகன் என்றாகிவிடும். ஆகவே உபயயாத்திரையிலும் இவனுக்கு அந்வயமில்லை என்று அருளிச் செய்து பின் முதலிகளை நோக்கி நீங்கள் அனுவந்திக்க வேண்டியது மூன்று விஷயங்களுண்டு என்று கூறினார்.*

*அவை யாவன அனுகூலர், பிரதிகூலர், அனுபயர் என்பதா கும். அவை என்ன என்பதையும் விளக்கி தெளிவுபடுத்தினார். பின்னர் பட்டரிடம் மேல்நாட்டிலுள்ள வேதாந்தியென்ற வித் வானை வாதில் வென்று நம் தர்னத்திற்குக் கொண்டுவர வேண்டும் என்று ஆணையிட்டு பின்பு திருக்கண்களைச் செம்பளித்தருளி; பரவசமான பொலிவுடன் எம்பார் திருமடியில் திருமுடியும், வடுகநம்பி திருமடியிலே திருவடிகளுமாக கண் வளர்ந்தருளினார். ஆயிரஞ்சுடர்வாய் அரவணையோடே நம்பி மூத்த பிரானைப் போல எம்பெருமானாரான இவரும் கூடியருளினார்.*

இவ்விருத்தாந்தத்தை,

பின்பும் அன்பருடன் களித்த சீர்பெரும்புதூர் எதிராசன்
இன்பமுடன் இசைந்தொரு நூற்றிருபதாண்டிங்கிருந்ததன்பின்
அன்பன் ஆழ்வான் ஆண்டான் நற்குமாரர்க்கு அடியாமுடி புனைந்து
மன்பதையை வாழ்வித்தாங்கமருமென வாழ்வித்தருளி
ஆராமஞ் சூழ் அரங்கர்தமை, மலர்மாமகளை மடியிறைஞ்சித்
தாரீர் சரணந்தனை யென்னத் தந்தோமெனலும் எதிராசர்
பாரோர் பரவும் பாகவதர் பிரிவால் பிரிவில் படர்கூரச்
சீரோர் திருநாடடைந்திருந்த சீடனுடனே சேர்ந்தனராம்

*என்ற வரிகள் விளக்குகின்றன.*

*பின்னர் திருக்குருகைப் பிரான் பிள்ளான் (உடையவரது ஞானபுத்ரர்) உடையவருக்கு அந்திமக்கிரியைகள் நடத்தினார். அவர் திருமேனியை ஆழ்வார் திருமேனியைப்போல கோயிலுக் குள்ளேயே பள்ளிப்படுத்தி வைத்தார்கள்.*

### *பாகவத அபசாரங்கள் பற்றிய எம்பெருமானார் கருத்துக்கள்*

*ஒரு அதிகாரிக்கு த்வய மொழிய மந்திரமில்லை. மிதுநமொ ழிய வஸ்து வில்லை. மிதுந கைங்கர்ய மொழியப் புருஷார்த்த*

மில்லை. ஆசார்ய அபிமான மொழிய மோக்ஷோபாயமில்லை. பாகவத அபசார மொழிய மோக்ஷ விரோதியில்லை என்பது எம்பெருமானாரது வைதிகக்கொள்கைகள். பாகவத அபசாரம் பன்னிரண்டு வகைப்படும். அவை யாவன: முறையே ஜன்ம நிரூபணம் (உயர்ந்த ஜன்மம் என்ற செருக்கு) சரீர நிரூபணம் (புருஷ, ஸ்திரி விலங்கு, பறவை) என்ற பாகுபாடு; பாவ நிரூபணம் (பாலன், விருத்தன்) என்ற பாகுபாடு, ஆஸ்ரம நிரூப ணம் (பிரம்மச்சாரி, ஸந்யாசி போன்ற பாகுபாடு) அவயவ நிரூபணம் (நொண்டி, முடம் என்ற பாகுபாடு) ஆலஸ்ய நிரூப ணம் (விண்ணப்பஞ் செய்வார் என்ற பாகுபாடு) வாஸநிரூபணம் (கோயில், திருமலை, பெருமாள் கோயிலில் வாழ்பவர் என்ற பாகுபாடு) பந்து நிரூபணம் (சொந்தம், உறவு அல்ல என்ற பாகுபாடு, பிரகாஸ நிரூபணம் (ஆசார்யர்களையும் கைங்கர்யர்க ளையும் சமமாகக் கருதுதல், பிரகார நிரூபணம் (நந்தவன கைங்கர் யம் செய்யும் தொண்டர்களைக் கேவலமாக நினைத்தல்) வர்த்தக நிரூபணம், தோஷநிரூபணம் எனக்கொண்டனர். பகவத் அபசாரத் தைவிடப் பாகவத, அபசாரம் மிகக் கொடுமையானது. பாகவத அபசாரம் ஒன்று செய்தால் அது பலவாகப் பெருகும். இவற்றைத் தாம் பண்ணுவது கூடாது என்பதோடன்றித் தன் மதிப்புக்குரிய ஆச்சார்யனே பண்ணினாலும், ஆச்சார்யன் செய்யும் வரம்பு மீறிய செயல்களைச் சிஷ்யன் ரஹஸ்யத்தில் உணர்த்த வேண்டும் என்கிற படி ஆச்சார்யனும் பாகவத அபசாரம் செய்யாதிருக்கும்படி எடுத் துச்சொல்ல வேண்டும். வைஷ்ணவர்கள் ஒருவருக்கொருவர் அப சாரம் செய்தால் அவர்களை நல்லமுறையில் கெஞ்சி விலக்க வேண்டும். அவர்கள் தனிமையில் செய்த குற்றங்களை வெளிப்ப டுத்தக்கூடாது பிரகிருதி வாசனையால் குற்றம் செய்து மன்னிப்புக் கேட்டவர்களை வெளிப்படுத்துதல் பாகவத அபசாரமாகும்.

எம்பெருமானார் தீர்த்தமாடி சேவித்தெழுந்து வருகிறவர்; பிள்ளை உறங்காவில்லிதாசர் கையைப்பிடித்து வருவதற்குக் கார ணம் கேட்க, பிராமண குலத்தில் பிறந்தவர்களுக்கு, நாம் உயர்ந்த குலத்தில் பிறந்தும் அடிமை செய்கிறோமே என்ற வருத்தமும் தயக்கமும் வரும். ஆனால் பிறருக்குக் கைங்கர்யம் செய்யவே பிறந்த சூத்திர வர்ணத்தவருக்கு, அந்த வருத்தம், தயக்கம் ஏற்ப டாது. உள்ளத்தால் பரிசுத்தமான அவருடைய ஸ்பரிசம் தமக்கும் வர்ணாஸ்ரம அபிமானத்தைப் போக்கி பரிசுத்தியளிக்கிறது என்றார் இராமானுஜர்.

1. உடையவர் பிள்ளை உறங்காவில்லிதாஸர் விஷயமாக முதலி யாண்டானுக்குப் பணித்த பத்து வார்த்தைகள் வருமாறு. முதல் வார்த்தை - நாட்டாரோடியல் பொழிந்து நாரணனை நண்ணி இருப்பார்கள். அதாவது ஆச்சார்யன் உலகைத் திருத்துவதற்காக, உலகாரோடு உழல வேண்டியிருக்கிறது. சாத்தாத முதலிகளுக்கு இந்தக்கடமை இல்லையாகையால், எப்பொழுதும் நாரண னையே பற்றி இருக்கும் பெருமை அவர்க்குண்டு.

2. அடுத்ததாக, ஆச்சார்யர்கள் தெப்பக்கையரைப்போல; அதாவது நாம் பெருமாள் கோயில், திருமலை, கோயில் போன்ற இடங்க ளில் நிரந்தரமாக வசிக்க இல்லாமல் திருப்பதிகள்தோறும் புகுந்து நிற்போம். சாத்தாத முதலிகள் மேற்சொன்ன முக்கிய திவ்ய தேசங்களில் நிரந்தரமாய் வாழும் புண்ணியம் பெற்றவர் கள்.

3. அடுத்து நாம் கலக்கமும் தேற்றமுமாய், மடலெடுப்பது நோன்பு நோற்பது போன்ற செயல்களைக் கலங்கின நேரத்திலும், தேறி னபோது மங்களாஸானம் செய்பவர்களாயும் இருப்போம். சாத் தாத முதலிகள் பெரியாழ்வாரைப் போலக்கலக்கமில்லா நற்றவ முனிவர்கள்.

4. அந்தரத்துக்கும் (கரைக்கும்) கடலுக்குமுள்ள தன்னேற்றம்போல 'ஆவார்யார் துணையென்று அலைநீர்க்கடலுள் அழுந்தும் நாவாய் (திருவா 6:1:6) போலச் சம்சாரமாகிற கடலிலும், மழையிலும் பெருங்காற்றிலும் அலைப்புண்டு, சம்ஸாரத்தி லுள்ள லாபநஷ்ட இன்பதுன்பங்களை அடைகின்றோம். அவர் கள் கரையிலே நங்கூரம் பாய்ச்சப்பெற்று நிலயாயிருக்கும் கப்பல் போல 'தருதுயர்தடாயேல் உன் சரணல்லால் சரணில் லை' என்றபடி எம்பெருமானாகிற கரையைப்பற்றி நிலையாயி ருபபார்கள்.

5. அணுவுக்கும் மகாமேருவுக்கும் உள்ள தன்னேற்றம்போல் நாம் பண்டைக்குலமான பிராஹ்மண்யத்தைப்பற்றி நின்று, குடி, கோத்திரம், சூத்திரம் முதலானவற்றில் உழல்கின்றோம். அவர் கள் தொண்டர்க்குலத்துக்குரிய ஜீவ பர ஸம்பந்த ஞானத்தையும், அதற்குரிய அனுஷ்டானத்தையுமே, குடி, கோத்ரம், சூத்திரம் முதலான அனைத்துமாகக் கொண்டிருப்பார்கள்.

6. நாம் வேதமாகிற கரும்பைக் கடித்துப் பல் முறிவுபடுகிறோம். அவர்கள் அதன் சாரமான கல்கண்டு (த்வயம்) சுவைத்து இன்புறுகிறார்கள்.

7. மண்ணுக்கும் விண்ணுக்கும் உள்ள தன்னேற்றம்போல நாம் 'பலநீ காட்டிப் படுப்பாயோ' என்றும் 'திருமாலே இனிச்செய் வதொன்றறியோம்' என்றும் பயப்பட்டுக் கலங்குவோம். அவர் கள் 'நம்புவார்பதி வைகுந்தம் காண்மின்' அவன் செய்வன செய்துகொள்க என்றும் இருப்பார்கள்.

8. இரவுக்கும், பகலுக்குமுள்ள தன்னனேற்றம் போல, நாம் அந்திதோறும் காயத்ரி மந்திரத்தைச் சொல்லா நிற்போம். நாம் வேதமாகிற அந்தகாரத்திலே தடுமாறி நிற்போம். அவர்கள் அவன் பேராயிம் ஓதின விளக்கொளியாலே கீதையின் செம் மைப்பொருள் (சரம ஸ்லோகம்) வழிநடப்பார்கள்.

9. ரத்னத்துக்கும் பாஷாணத்துக்கும் உள்ள தன்னேற்றம் போல் நாம் அந்திதோறும் மந்திரத்தைச் சொல்வோம். அவர்கள் மந்திரத்தைச் சிந்திப்பார்கள் (காயத்ரி).

10. பதிவிரதைக்கும் பரநாறிக்குமுள்ள தன்னேற்றம்போல நாம் ஆக்நேயாதிகளுக்கு (இதரதேவதைகளுக்குச் சேஷமாய் இருப் போம். அவர்கள் அவனுக்கு மட்டுமே சேஷமாய் இருப்பார்கள்.

இந்தத் தன்னேற்றங்களை பெருமாள் பக்கமும், நம்பெருமாள் பக்கமும் பெரிய நம்பியிடத்தும் காணலாம். எம்பெருமானாருக்கு ஒரு நிர்ப்பந்தம் உண்டு. பிறருடைய துர்க்கதியைக் கண்டால் திருஉள்ளத்தில் இரங்கி அருளிச் செய்வது த்வயத்தை. அடியார், தொண்டர் போன்ற பிரபந்ந ஜனங்களுக்குக் கூடஸ்தர் என்று பெயர். ஆகவே நம்மாழ்வார், மங்கை மன்னன் தொடக்கமான ஆழ்வார்களும் எம்பெருமானார் முதலான ஆச்சார்யர்களும் உப தேச அனுஷ்டானங்களினாலே பிரபத்தி மார்க்கத்தைத் தலைப்பெ றுத்தி வளர்த்தவர்களாகையாலே பிரபந்த ஜன கூடஸ்தர் என்று அழைக்கப்பட்டனர்.

வாமனாவ தாரத்திலே தன்னுடைமையைப் பெறுவதற்குத் தான் அர்த்தியானாற்போலே, அர்த்தியாய் நின்று பாஷ்யகாரர் பக்கலிலே வேதாந்தார்த்தம் கேட்டு சிஷ்யனாய், நாமும் நம் இராமானுசனை உடையோம் என் கையாலே, ஸ்ரீ வைஷ்ணவநம்பி என்று திருநாமமாய் வாமனாதார அம்சமாகப் புராணஸித்தராய் இருக்கிற நம்பியுடைய திருப்பதி என்று காட்டவே திருக்குறுங்குடி என்னாதே வைஷ்ணவவாமநம் என்றது.

எம்பெருமானாரது அந்திம தசையிலே, எங்களுக்குத் தஞ்ச

மாய் இருப்பதொன்றை அருள வேண்டும் என்று முதலிகள் கேட்கவே 'எல்லோரும் பாஷ்யத்திலே வாஸனை பண்ணுகையே நமக்குப் பிரியம். அது இயலாதவர்கள் நத்தவனம் அமைத்துத் திருப்படித்தாமம் (துளஸிபுஷ்பம்) பறித்துத் திருமாலை எடுக்கையும் பிரியமாய் இருக்கும். அது எல்லோராலும் செய்ய முடியாததால் 'த்வயம்' மந்திரத்தை ஜபித்து, ஸ்மரித்து அதையே விசுவாசியாய் இருப்பது மிகவும் பிரியமாய் இருக்கும் என்றார்.

விஷ்ணுவானவர் அனைவருக்கும் சேஷியாய் இருப்பவர். நற்குணங்களுக்கு இருப்பிடமான நம்மாழ்வார் அவருடைய திருமேனியாவார். கைங்கர்யச்செல்வம் நிறைந்த எம்பெருமானார் அந்த நம்மாழ்வாருடைய திருவடித்தாமரையணையாய் விளங்குகிறார். அந்த எம்பெருமானாரிடத்திலேயே ஆச்சார்ய ஸப்தம் நிறைபொருளாய் இருக்கிறது. அவருடைய அபிமானமே ஆத்ம ஜீவனத்தை விரும்பும் எல்லாச் சேதனர்களுக்கும் ஸம்ஸாரக்கடலிலிருந்து கரையேறும் உபாயமாகும். அவரது குணானுசந்தானமே போது போக்குக்கு விஷயம். அவருக்கு முன்னும் பின்னும் உள்ளமற்றஆச்சார்யர்களுக்கு உபகாரத்வம் உண்டே ஒழிய உத்தாரகத்வம் கிடையாது. அவர்கள் எல்லோரும் அவ்வெதிராசனால் சத்தைப் பெற்றவர்கள். ஆகவே அவ்வெம்பெருமானாருடைய திருவடிகளையே ஸம்ஸாரம் அடியோடு நீங்குவதற்கு ஆஸ்ரயிக்க வேண்டும் என்று நம் ஜீயர், வாதிகேஸரி அழகிய மணவாள ஜீயர் கூறுவர். ஸோமாஸி ஆண்டான் வடுகநம்பி போன்ற பலரும் இக்கருத்தையே அருளியுள்ளார்கள்.

'ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம்
யதிராஜோ ஜகத்குரு'

என்று கணியனூர் சிறியாச்சான் சத்தியம் பண்ணினார்.

இராமானுஜாச்சாரியரிடம் காணும் முக மலர்த்தி, அர்ச்சாவதாரத்தில் விளைவதால்; குளிரக்கடாக்ஷித்தல், வாய்திறந்து பேசுதல், வாரிஅணைத்தல், போன்ற பேறுகள், அவரோடு ஒரே காலத்தில் வாழ்ந்த முதலியாண்டான், கூரத்தாழ்வான், அவரது குமாரர்பட்டர், எம்பார், திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலானோருக்கு, எல்லையற்றதும், நினைத்தற்கரியதுமான ஆஸ்ரித வாத்சல்யம், சௌலப்யம் முதலியன உள்ளங்கை நெல்லிக்கனிபோல நேரில் காணலாமாயிருந்தது. எம்பெருமானாருக்கு முற்காலத்தில் இருந்த

மணக்கால் நம்பி, உய்யக்கொண்டார், ஆளவந்தார், நாதமுனி முதலியோருக்கு அம்முகமலர்த்தி அப்ரதக்ஷணமாகவே இருந்தது.

முதலிகள் ஆழ்வானிடம் எம்பெருமானார் ஆளவந்தார் இருவரில் யாருக்குச் சிறப்புண்டு என்று வினவியபொழுது, ஆளவந்தார் எம்பெருமானாருக்கு ஆச்சார்யார் ஆனபோதிலும் அவருடைய கிருபா கடாக்ஷத்தாலேயே எம்பெருமானார் உய்வு பெற்றவரானாலும், ஆளவந்தாருக்கே சிறப்பு இருந்தபோதிலும், ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்கள் கூறும் என்ற கிருபாமாத்ர பிரசந்நாச்சார்யாத்வம், காரேய் கருணை இராமானுசரிடத்திலேயே நிலை நிற்கையாலே இவர்க்கே சிறப்பு என்றார் ஆழ்வான்.

### யதிராஜரது நித்ய கர்மங்கள்

உடையவர் பெருமாளுடைய ஸ்ரீகார்யம் ஆராய்ந்துகொண்டு பகலில் ஸ்ரீபாஷ்யம் காலட்சேபம் செய்து இரவில் திருப்பள்ளியேறினால், திருவாய்மொழி சேவித்தபடியே கண் வளர்ந்தருளுவார். இரவில் உறங்காவில்லிதாஸர், ஸ்ரீ குணதாஸர் போன்ற இராமானுஜ வேளைக்காரர் இவருக்குக் காவலாயிருப்பர். காலையில் அவரை வைணவ முதலிகள் இராமனுஜ சுப்ரபாதம் ஓதி துயிலெழுப்புவார்கள். உடையவர் கண்விழித்தபின், பிரபந்தப்பாடல்களை அனுசந்தித்துப் பின்பு நீராடுவார். திருவீதியிலுள்ள ஆசார்ய புருஷர்கள் வணங்கி நிற்க காவேரியிலிருந்து மடத்துக்கு எழுந்தருளுவார். எல்லாத் திவ்யதேசத்துப் பெருமான்களுடைய பவித்திரங்களைத் திருமுடியிலும், கழுத்திலும் சாத்திக்கொண்டு பல்லாண்டு, பள்ளியெழுச்சி, பாவை, ஸ்தோத்ரதனியன்களை அனுசந்தித்துக் கொண்டு திருமண் காப்பணிந்து தியானத்தில் ஈடுபடுவார். பின்னர் பேரருளாளன் தொடங்கி அழகிய மணவாளனை மங்களாசாசனம் செய்ய கோவிலுக்குச் செல்வார். நம் பெருமாளுக்கு ஸகல கைங்கர்யங்களும் காலாகாலங்களில் நடக்கும்படி பத்துக்கொத்திலுள்ளவர்களுக்கும் கட்டளை இட்டபின் கோயிலிலிருந்து மடத்திற்கு வந்து பேரருளாளர் திருவராதனம் பூர்த்தி செய்து தளிகை மாறியபின் சிஷ்யர்களுக்குத் தீர்த்தப்பிரசாதம் வழங்கியபின் தாமும் ஸ்ரீவைஷ்ணவர்களும் (பிரஸாதப்படுதல்) உணவு உட்கொள்ளுவர். அதன் பின்னர் ஆளவந்தாரை நினைத்துத் தியானம் செய்தபின்பட்டரையும், ஸ்ரீராமப்பிள்ளையையும் கொண்டு இராமாயணம் படிக்கச் சொல்லிக் கேட்பார். சாயங்காலம் காயத்ரிஜபம் செய்து அனுஷ்டானங்களை முடித்தபின் பேரருளாளன் முன்பு பல்லாண்டு

முதலியனவற்றைச் சிஷ்யர்களை சேவிக்கச் சொல்லுவார். பின்னர் அழகிய மணவாளனைச் சென்று சேவித்து கோயில் முழுவதும் திருவிளக்கேற்றி ஸந்நிதியில் பொன்குத்து விளக்கிலே நெய்விளக் கேற்றி, மலர்மாலைகள் சாத்தி இளநீர் அமுது செய்வித்தருளுவார். இரவிலும் பகலைப்போலவே திருவாராதனம் நடத்துவித்து திருவ ரங்கச் செல்வரை எழுந்தருளுவித்து நடைப்பலிகளை நடத்தி யாகசாலை ஹோமங்களை நடத்தச் செய்வார்.

பள்ளி கொள்ளுமிடத்தில் செல்வரை எழுந்தருளச்செய்து சம்பா அமுது செய்வித்து தன்வந்திரி வம்சத்தவர் தயாரித்த கஷாய மும் அமுது செய்வித்து, ஸ்ரீரங்கநாயகியார், கோவிலையும் அலங்க ரிப்பித்து என் திருமகள் சேர் மார்பனானை' சேர்த்தியிலே எழுந்தரு ளப்பண்ணி, பலவிதமான சுகந்தங்களைச் சாத்துவித்து வெள்ளிக் கிடாரங்களிலே பாற்குழம்பு சேர்த்து அமுது செய்வித்து அரம்பை யர்கள் தாலாட்ட யாழ்குழல் வீணை வாசிக்க பெருமாள் பள்ளி கொண்டருளும்படி செய்து சங்கு சக்கரத்தாழ்வார்களை பள்ளிய றைக்குக் காவலடைத்து ஸ்ரீநிதி இருக்கும் இடத்திற்கு திருக்காப்புச் சேர்ப்பித்து புறப்படுவார். மடத்தில் பேரருளாளர்க்கும் எல்லாம் செய்து பின்பு தாமும் பள்ளி கொள்வார்.

*எம்பெருமானார் அருளிய பெருமாள் திருமொழித்தனியன்*

**பெருமாள் திருமொழித்தனியன்**

இன்னமுத மூட்டுகேன் இங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள் - பொன்னஞ்
சிலைசேர் நுதலியர் வேள் சேரலர் கோன். எங்கள்
குலசேகரனென்றே கூறு

**பெரிய திருமொழி, திருவாய்மொழி தனியன்கள்**

வாழிபரகாலன் வாழிகலிகன்றி
வாழிகுறையலூர் வாழ்வேந்தன் - வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங் கொள், மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்
முந்துற்றநெஞ்சே முயற்றித் தரித்துரைத்து
வந்தித்து வாயார வாழ்த்தியே - சந்த
முருகூரும் சோலை சூழ் மொய்பூம் - பொருநல்
குருகூரன் மாறன் பேர்கூறு

### *திருவெழு கூற்றிருக்கை தனியன்*

சீரார் திருவெழு கூற்றிருக்கையென்னும் செந்தமிழால்
ஆராவமுதன் குடந்தைப்பிரான் றனடியிணைக்கீழ்
ஏரார் மறைப்பொருளெல்லாமெடுத்திவ்வுலகுய்யவே
சேராமர்சொன்ன வருள்மாரிபாதம் துணை நமக்கே.

*எம்பெருமானார் மகிமையைத் தெரிவிக்கும் பாசுரங்களில் ஒருசில:*

'அழுக்கென்றிவையறிந்தேன் அம்பொன் அரங்கா
ஒழித்தருள்வாய் உள்ளில் வினையை பழிப்பிலா
என்னாரியர்க்காக எம்பெருமானர்க்காக
உன்னாருட்காக உற்று'

*என்பது விளாஞ்சோலைப்பிள்ளை என்ற வைணவ சீலர் அருளியது.*

### *மாமுனிகள் அருளிய உபதேச ரத்ன மாலைப்பாசுரங்கள்*

இன்றுல் கீர் சித்திரையிலேய்ந்த திருவாதிரைநாள்
எற்றையினும் இன்றிதனுக் சேற்றமென்தான் - என்றவர்க்குச்
சாற்றுகின்றேன் கேண்மின் எதிராசர் தம் பிறப்பால்
நாற்றிசையும் கொண்டாடும் நாள் (உ. தே. மா 27)
ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களிலும்
வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர் - ஏழ்பாரு
முய்ய எதிராசர்உதித்தருளும் சித்திரையில்
செய்ய திருவாதிரை - (உ.தே. மா 28)
எந்தையெதிராசரிவ்வுலகில் எந்த மக்கா
வந்துதித்த நாளென்னும் வாசியினால் - இந்தத்
திருவாதிரை தன்னின் சீர்மைதனை நெஞ்சே
ஒருவாமல் எப்பொழுதும் ஓர் (உ. தே.மா. 29)

### *பிள்ளை உறங்கா வில்லிதாஸர் அருளிய பாடல்*

நன்றுந்திருவுடையோம் நானிலத்தில் எவ்வுயிர்க்கும்
ஒன்றும் குறையில்லை ஓதினோம் - குன்றம்
எடுத்தானடிசேர் இராமானுசன்தாள்
பிடித்தார் பிடித்தாரைப்பற்றி' என்பதாகும்.

*இராமானுஜரைப்பற்றி அவரது சிஷ்யப்பிரசிஷ்யர்கள் அருளிய ஸ்லோகங்கள் வடமொழியில் உள்ளவையாதலால் அவை எழுதப்படவில்லை.*

## *எம்பெருமானார் பற்றிய வாழித்திருநாமங்கள்*

சீராரும் எதிராசர் திருவடிகள் வாழி.
திருவரையிற் சாத்திய செந்துவராடை வாழி.
ஏராரும் செய்ய வடிவு எப்பொழுதும் வாழி.
இலங்கிய முந்நூல் வாழி இணைத்தோள்கள் வாழி.
சோராத துய்ய செய முகச்சோதி வாழி.
தூமுறுவல் வாழி துணைமலர்க் கண்கள் வாழி.
ஈராறு திருநாம மணிந்த எழில் வாழி.
இனி திருப்போடெழில் ஞானமுத்திரை வாழியவே.

அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியவே.
அடர்ந்து வரும் குதிட்டிகளை யறத்துறந்தான் வாழியவே.
செறுகலியச் சிறிதுமறத்தீரத்து விட்டான் வாழியவே.
தென்னரங்கர் செல்வமுற்றும் திருத்திவைத்தான் வாழியவே.
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியவே.
மாறனுரை செய்த தமிழ் மறைவளர்த்தோன் வாழியவே.
அறம்மிகு நற்பெரும்புதூர் அவதரித்தான் வாழியவே.
அழகாரும் எதிராசர் அடியிணைகள் வாழியவே.

சங்கர பாற்கர யாதவ பாட்டப் பிரபாகர் தங்கள் மதம்
சாய்வுற வாதியர் மாய்குவரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறு நமக்கிலையென்று மிகத்தளர்நாள்
மேதினி நஞ்சுமையாறு மெனத்துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளி பராங்குச முன்னவர் வாழ்வு முளைத்திடு நாள்
மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்று முவந்திடுநாள்
செங்கயல் வாவிகள் சூழ்வயல் நாளும் சிறந்த பெரும்பூதூர்ச்
சிமானிளையாழ்வார் வந்தருளிய நாள் திருவாதிரை நாளே

அத்தகிரி யருளாளரடி பணிந்தோன் வாழியவே.
அருட்கச்சி நம்பியுரை யாறு பெற்றோன் வாழியவே.
பக்தியுடன் பாடியத்தைப் பகர்ந்திட்டோன் வாழியவே.

பதின்மர் கலையுட் பொருளைப் பரிந்து கற்றோன் வாழியவே.
சுத்த மகிழ்மாறனடி தொழுதுய்ந்தோன் வாழியவே.
தொல் பெரிய நம்பிசரண் தோன்றினான் வாழியவே.
சித்திரையில்லாதிரை நாள் சிறக்க வந்தோன் வாழியவே.
சீர்பெரும்புதூர் முனிவன் திருவடிகள் வாழியவே.

எண்டிசை யெண்இளையாழ்வார் எதிராசன் வாழியவே.
எழுபத்து நால்வர்க்கெண்ணான் குரைத்தான் வாழியவே.
பண்டை மறையைத் தெரிந்த பாடியத்தான் வாழியவே.
பரகால னடிஇணையைப் பரவுமவன் வாழியவே.
தண்டமிழ்நூல் நம்மாழ்வார் சரணானான் வாழியவே.
தாரணியும் விண்ணுலகும் தானுடையோன் வாழியவே.
தெண்டிரைசூழ் பூதூரெம்பெருமானார் வாழியவே.
சித்திரையிற் செய்ய திருவாதிரையோன் வாழியவே.

***ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.***

*எம்பெருமானாரது வரலாற்றை ஓரளவுக்குத் தெரிந்து கொண்ட நாம் அவரது சீடர்களான கூரத்தாழ்வான் தொடக்கமாக மணவாள மாமுனிகள் ஈறாக உள்ள சிஷ்ய பரம்பரைகளை ஆசார்ய பரம்பரையாகக் காண வேண்டும். முதலில் நாம் காண இருப்பது இராமானுஜரது பவித்ரமான கூரத்தாழ்வான் பற்றியது.*

**கூரத்தாழ்வான் வைபவம்**

*இராமானுஜரது திரிதண்டம், பவித்ரம் என்று சொல்லப்படுகின்ற பிரதம சீடர்களான முதலியாண்டான், கூரத்தாழ்வான் என்ற இருவரில் முதலில் காண இருப்பது கூரத்தாழ்வான் வைபவம். ஜீவகாருண்யம், ஆச்சார்ய பக்தி, பகவத்பக்தி, வைராக்யம், பாண்டித்யம், ஸத்கர்மானுஷ்டானம் (நல்ல காரியங்களையே செய்தல்) முதலிய எண்ணிறந்த நற்குணங்களுக்கும் பிறப்பிடமென்ன அமைந்த கூரத்தாழ்வானது திவ்ய சரிதத்தை, தினந்தோறும் அனுசந்திப்பது ஸ்ரீவைஷ்ணவர்களது கடமையாகும்.*

*கச்சிமாநகருக்கு வடமேற்கிலுள்ள கூரம் என்னும் நகரில் முன்னோர் அனுசந்தித்தபடிகலியுகம் 4180-ம் ஆண்டில் சௌம்ய வருஷத்தில் தைமாதம் அஸ்த நட்சத்திரத்தில் வடமான் குலத்தில் இம்மகான் அவதரித்தார். இவரது இயற்பெயர் திருமறுமார்பன் என்பது. இவரது தகப்பனார் அனந்தர். தாயார் பெருந்தேவி நாயகி.*

தேவியார் - ஆண்டாள். பகவத் விஷயத்திலே மிக்க ஊக்கமுடைய வரான போதிலும் எம்பெருமானாருக்குத் தாம் சிஷ்யராகையால், அவருக்கு நேர் ஸ்தானத்தில் குருவாக இருந்து உபதேசிக்க விரும் பாமல் ஏனைய முதலிகளுக்கு (சீடர்களுக்கு) உபதேசிக்க, அவர் கள் அதைக்கேட்டு அப்படியே எம்பெருமானார் முன் விண்ணப் பம் செய்வதாக ஒரு நியதி ஏற்பட்டு, முதலிகளுக்கு 'உயர்வர உயர்நலம்' உடையவன் என்ற திருவாய்மொழிப்பாசுரம் தொடங்கி னவாறே மதியெலாமுள் கலங்கி மயங்கித் தரையில் விழுந்தார். பர சமயவாதிகள் பிரமத்திற்குக் குணமென்பதே கிடையாது. நிர்குணமென்கிறார்களே, ஆழ்வார் முதலடியிலேயே உயர்வற உயர்நலமுடையவன் என்கிறபடி என்னே! என்று சொல்லிக் கொண்டே மோகித்தவாறு மூர்ச்சித்து விழ முதலிகள் ஓடிச்சென்று இராமானுசரிடம் விவரத்தைக்கூற, அவரும் ஓடிவந்து 'எத்திரம் உரலினோடு இணைந்திருந்தேங்கிய எளிவே, என்று ஆறுமாதம் மோகித்துக் கிடந்த நம்மாழ்வாரைக் காணப் பெறாத குறைதீர, இன்று கண்ணாரக் காணப்பெற்றோமே என உள்ளமெலாமுருகிக் குரல் தழுத்து ஆழ்வான், ஆழ்வான் எனக்கூவித் தட்டி எழுப்பி உணர்த்தத், தொடங்கும்போதே உயர்வர உயர்நலமுடையவனென் பதே என்று சொல்லிக்கொண்டே எழுந்தார். உருக்கத்திலே நம் ஆழ்வாரைப்போன்றே இருந்தமையால் எம்பெருமானார் 'ஆழ் வான்' என்று ஏகவசனமாகத் தட்டி எழுப்பினார். அது முதல் இவருக்கு ஆழ்வான் என்று திருநாமம் வழங்கலாயிற்று. கூரத்தில் பிறந்தமையால் கூரத்தாழ்வான் என்று அழைக்கப்பட்டார்.

ஆழ்வானின் வைபவத்தைக்காட்டிலும் அவரது தேவியார் ஆண்டாளின் வைபவம் அளவற்றிருக்கும். சாஸ்திரங்களில் தமக்கு ஏதாவது சந்தேகம் தோன்றினால் தேவியாரைக் கேட்டுத் தெரிந்து கொள்வது வழக்கம் என்று பெரியோர் கூறுவர். கூரல்மா நகரில் பெருஞ்செல்வராக வாழ்ந்த இவர் தம் செல்வத்தினால் பல ஏழைகளையும், சாதுக்களையும் மற்றும் பலரையும் பலவகையால் போஷித்துக்கொண்டு மகா தர்மவானாய் இருந்து வந்தார். நாள்தோ றும் பெருமாள்கோயில் (காஞ்சி) திருக்கதவுகள் இரவில் மூடப் பட்ட பின்பே இவரது மாளிகைக் கதவுகள் இரவில் மூடப்படும். ஒரு நாள் திருவிழாவை முன்னிட்டுகோயில் கதவு மூடுவதற்குத் தாமதமாயிற்று. ஆனால் ஆழ்வார் பணியாட்கள் குறித்த நேரத்தில் அவர் வீட்டுக்கதவை மூடி விட்டனர். அந்த மணியோசையைக் கேட்ட பேரருளாளன் தனக்கு ஆலவட்டக் கைங்கர்யம் செய்யும் திருக்கச்சி நம்பியிடம் நமது இரவுத் திருவாராதனம் முடியுமுன்பே

கதவுகள் சாத்தப்படுகின்றனவே என்று கேட்க, அவர் கூரத்தாழ்வானது வீட்டுக்கதவுகள் மூடப்பட்டன என்று சொன்னாராம்.

அதைக்கேட்ட தேவர்பிரான் ஆழ்வான் செல்வமோ நம்மை இவ்வாறு மயக்கிற்று என்றாராம். இந்த உரையாடலைப் பின்னர் கேட்டறிந்த கூரத்தாழ்வான் தமது அந்திம காலத்துக்கு வேண்டிய சிறிதளவு செல்வத்தை மாத்திரம் வைத்துக்கொண்டு பாக்கியையெல்லாம் ஏழை எளியவர்களுக்கு தானம் செய்துவிட்டு இனித்தான் ஓர் நல்லாசிரியரை அடைந்து உய்வு பெற விரும்பி, விசிஷ்டாத்வைத சித்தாந்த ஸ்தாபகரான உடையவர் இராமானுஜ முனிவரைச் சரணடைந்து, பஞ்ச சம்ஸ்காரங்களைப் பிரார்த்தித்துப் பெற்று அவரது திருவடிகளை விட்டு நீங்காமல், சாமான்ய சாஸ்திரங்களையும், அத்யாத்ம சாஸ்திர சம்பிரதாயங்களையும் ஓதியும், ஓதுவித்துக்கொண்டும் வாழ்ந்து வருவாராயினார்.

இவ்வாறு இருக்கும் காலத்தில் திருவரங்கப்பெருமாள் அரையர், இராமானுசரைத் திருவரங்கம் அழைத்துச்சென்ற பொழுது, அவரை விட்டகல முடியாத கூரத்தாழ்வானும், அவருடையே பிரதான சீடராய், சகல சாஸ்திர நிபுணர் என்று எல்லோராலும் போற்றப்படுபவராய், அவரோடேய வாழ்ந்து வந்தாராதலால், அவர் முன்னர் தம் ஊரிலே தம் அந்திமகாலத்துக்காகச் சேமித்து வைத்த சிறு பொருளையும், அவசியமற்றது என்று கருதியதால், இராமானுசரது அனுமதி பெற்றுக் கூரல் நகருக்கு வந்து அப்பொருளைப் பரம பாகவதற்களுக்கு தானம் செய்துவிட்டுத் தமது தேவியாரான ஆண்டாளையும் கூட்டிக்கொண்டு, திருவரங்கத்துக்கு நம்பெருமாள் சந்நிதிக்கு வரும் வழியில், மதுராந்தகம் சமீபத்தில் காட்டுவழியில் தேவியார் பயமாக இருக்கிறதே என்று கூற, மடியில் கனம் இருந்தாலல்லவா வழியில் பயம் வரும். நீ ஏதேனும் விலைமதிப்புள்ள பொருள் வைத்திருக்கிறாயா? என்று கேட்க ஆண்டாளும், தாங்கள் வழக்கமாக உணவு கொள்ளும் பொன்வட்டிலை மட்டும் கொணர்ந்தேன் என்று கூறவே, ஆழ்வானும் அப்பொன் வட்டிலை வாங்கித் தூர எறிந்துவிட்டு, மதுராந்தகத்து ஏரிகாத்த பெருமாளைத்தொழுது ‘த்வயம்’ விளைந்த இடம் என்று அந்த மகிழமரத்தைச் சேவித்துப்பின் மறுநாள் தொடங்கி பயணகதியாய், வழியிலுள்ள திருப்பதிகளைச் சேவித்துக்கொண்டு திருவரங்கம் சென்று முன்போலவே உடையவர் பாதத்தில் அத்தாணிச் சேவகராய் வாழ்ந்து வந்தார். பொன்வட்டில்தனை எறிந்த புகழினைப் பெற்றார்.

## திருவரங்கத்தமுதனாரைத் திருத்திப் பணிகொள்ளுதல்

ஒரு நாள் கோயில்கொத்தி (ஊழியர்கள்)லுள்ள வர்களுக்குத் தலைவராயிருந்த திருவரங்கத்தமுதனார் உடையவரை அணுகி, மகாபாபியான என்னைத் திருத்திப் பணிகொள்ளத்தக்க ஒரு சாத்வீகரை நியமித்தருள வேண்டும் என்று வேண்டிக்கொள்ள உடையவரும் ஆழ்வானை அக்காரியத்திற்கு நியமித்தார். இவருடைய தாழ்வுகளைப் பாராமல் இவரை அனுகூலராக்கி, நம் பக்கலிலே கொண்டு வந்துசேரும் என்று கட்டளையிட, ஆழ்வானும் அவரை ஆறுமாதகாலம் உபதேசம் பண்ணி பரிபக்குவராக்கி உடையவரிடம் அழைத்துவர, உடையவரும் அவ்வமுதனாரை, ஆழ்வான் திருவடிகளில் ஆஸ்ரயிப்பித்தார். இந்நன்றியை மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்சமுக்குறும்பாங்குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண் கூடிய பின் என்று குறிப்பிடுகிறார். தாம் அருளிய இராமானுச நூற்றந்தாதியில்.

அமுதனார் ஆழ்வானது சீடனாகி வாழ்ந்து வருகிற காலத்திலே, அமுதனாரது தாயார், ஆச்சாரியன் திருவடியடையவே (இறந்துவிடவே) பத்து நாளும் கடந்தபின் ஏகாஹத்துக்கு (ஈமச்சடங்கின்போது ஆத்மா நற்கதி பெற வேண்டிச் செய்யவேண்டிய ஒரு சடங்கு) ஒருவரை அனுப்புமாறு வேண்ட, உடையவரும் ஆழ்வானை 'நீர் போய் வாரும் என்ன, ஆழ்வானும் சிறிதும் தயங்காமல் சென்றார். அமுதனாரும் ஆச்சாரியார் இங்கனே எழுந்தருளுவதே என்று மிகவும் தாழ்ந்து, ஏஹாக்கரத்திலே அமுது செய்யப்பண்ணுவித்து, அபரிமிதமான பொருள்களைச் சமர்ப்பிக்க, ஆழ்வானும் அவற்றையெல்லாம் அங்கீகரித்து பின் அவற்றைத் தெருவிலே பொன் மழையாக இறைத்துவிட்டு காவேரியிலே நீராடி திருமண் காப்பிட்டு உடையவர் முன்வந்து சேவித்து நிற்கவே, உடையவரும் அங்கு கிடைத்தது என்ன என்று கேட்கவே, ஆழ்வானும் அவை அனர்த்தமாகையாலே அப்பொழுதே கழிந்து போயின என்று நடந்தவற்றைக் கூறினார். இவ்வாறு பணத்தாசையேயில்லாத ஒருவர் இருக்கிறாரே என்று உடையவரும் மிகவும் ஆனந்தமடைந்தார். அவர் அமுதனார் வீட்டிற்கு ஆழ்வானை அனுப்பியதற்குக் காரணம் நம் பெருமாள் கோயில் திறவுகோல் அமுதனாரது கைவசம் இருந்ததனால் அதை உடையவர் ஒரு உபாயமாகக் கைப்பற்ற எண்ணி, ஆழ்வானிடம் நீர் போய் ஏகாஹத்தில் புசித்து முடிவில் சந்நிதித்திறவு கோலைப் பெற்றாலன்றி சர்வம் சம்பூர்ணம் என்று சொல்ல வேண்டாம் என்று

நியமித்தனுப்ப ஆழ்வானும் அப்படியே செய்து திறவுகோலை அமுதனாரிடமிருந்து பெற்று வந்து உடையவரிடம் சமர்ப்பித்தார்.

## திருக்கோட்டியூர் நம்பி பக்கம் ஆழ்வான் சந்தேகம் தெளிந்து வருதல்

எம்பெருமானார் கோஷ்டியில் உபய வேதாந்த கிரந்த காலட்சேபம் நடக்கையில், ஆத்மாவுக்கு ஞானானந்தங்களும் சேஷத்வமும் நிருபகமாகச் சொல்லப்பட்டது. இவற்றுள் அந்தரங்க நிருபகம் எது என்ற சர்ச்சை எழ, எம்பெருமானார் இதை ஆச்சார்யார் மூலமாக வெளியிடக்கருதி ஆழ்வானை திருக்கோஷ்டியூர் நம்பியிடம் சென்று அறிந்துவாரும் என்று அனுப்பிவிட நம்பியும் ஆறு மாத காலமாக ஆழ்வான் காத்திருந்தும் பதிலனுப்பாததால், தான் உடையவர் பக்கம் போகப்போவதாக ஆழ்வான் சொல்லவே நம்பி அவரை அழைத்து மயர்வற மதிநல மருளப்பெற்ற நம்மாழ்வார். 'அடியேனுள்ளான் என்றருளிச் செய்தபடி கண்டாயே' என்று மொழிந்தருள, ஆழ்வானும் 'தந்யோஸ்மி என்றெழுந்தருளினார். இதன் கருத்து யாதெனில் அடியேனுள்ளான் என்ற பாசுரம் திருவாய்மொழி (★8:2)ம்பாட்டு. ஆத்மாவிலுள்ளான் என்று சொல்லாமல், என்னுள்ளான் என்றும் சொல்லாமல், அடியேனுள்ளான் என்று அடிமையை விட்டு ஆத்மாவை நிரூபித்தமை தோற்ற அருளிச்செய்ததாலே, ஆத்மாவுக்கு ஞானானந்தங்களைக்காட்டிலும் சேஷத்வமே மகத்தான நிரூபகமென்றதாயிற்று. அதாவது ஞானத்தைவிட சரணாகதியே பிரபத்தியே, சிறந்ததாயிற்று என்பதாகும்.

## ஆழ்வான் பௌராணிககைங்கர்யம் பெறுதல்

ஆழ்வான் எந்நாளும். மாதுகரம் (உஞ்சவிருத்தி) பண்ணின பொருளை வைத்தே தேக யாத்திரை (வாழ்வது) நடத்துவது வழக்கம். ஒருநாள் விடாமல் மழை பெய்ததால் வெளியே செல்ல முடியாமல் 'நாண்மலர், கொண்டு உன்பாதம் நண்ணா நாள் எனக்குப் பட்டினி நாளே என்றபடியே அருளிச்செயல் அனுசந்தானமே தாரகமாகக் கொண்டு வேறு உணவின்றியே கண்வளர்ந்திட, அன்றிரவு பெரியபெருமாள் அமுது செய்கிறபொழுது திருச்சின்ன ஒலிகேட்ட ஆழ்வானது தேவி ஆண்டாள், உமது பக்தர் பட்டினியாயிருக்க நீர் குலவிக்குலவி அமுது செய்கிறீரே என்று மனத்தளவில் நினைத்ததை உணர்ந்த எம்பெருமான் தனக்குக் கைங்கர்யம் செய்

கிற உத்தம நம்பிக்கு அர்ச்சகர் மூலம் தாம் அமுது செய்த அக்கார அடிசிலை ஆழ்வானுக்குக் கொடுக்குமாறு கட்டளையிட கோயில் மரியாதைகளுடன் அவர்கள் கொண்டு வருவதைக்கண்ட ஆழ்வான் பதறி எழுந்து எதிர்கொண்டு தனக்கும் தேவிக்குமாக இரு திரளை களை எடுத்துக்கொண்டு மிகுதியை அனுப்பிவிட்டார். தசரதனது பத்தினியர் புத்திரகாமேஷ்டி யாகத்தில் பெற்ற பாயசத்தை உண்ட தால் ராமலட்சுமணாதிகள் பிறந்ததைப்போல, இப்பொழுது இவர்க்கும் திரு பராசர பட்டர் திரு வேதவியாச பட்டர் (ஸ்ரீராமப் பிள்ளை) என்ற இரு திருக்குமாரர்கள் பிறக்க ஏதுவாயின.

சோழராஜ சபையில் நேர்ந்த கஷ்டங்களுக்குப்பிறகு திருவரங் கம் திரும்பிய ஆழ்வான், அரங்கனைச் சேவிக்கக் கோயிலுக்குச் சென்றபொழுது சோழனது காவலர்கள் இராமானுஜரது சம்பந்தம் உள்ளவர்கள் கோயிலுக்குள் நுழையக்கூடாது என்று தடுத்துவிட ஆழ்வான் எல்லோருக்கும் உண்டாகும் ஆத்ம குணம் ஆச்சார்ய சம்பந்தத்துக்கு ஏதுவாக இருந்தது. என்னுடைய ஆத்மகுணம் ஆச்சார்ய சம்பந்தத்தை அறுத்துக்கொள்ள ஏதுவாகிவிட்டதே என்று வருந்தி அன்றே கோயில் வாசத்தை விட்டொழித்து திருமாலிருஞ் சோலைக்கு தேவியோடு பயணகதியாய்ப் புறப்பட்டு வழியிலே தங்கள் மனக்கவலையை மறக்குமாறு பகவானது ஸ்வரூப, ரூப குண விபூதிகளை நினைந்து நெஞ்சு கனிந்து ஸ்ரீவைகுண்ட ஸ்தவம், அதிமானுஷஸ்தவம் என்ற இரு ஸ்தோத்ரங்களை அருளிச் செய்தார். நூறு ஸ்லோகங்களைக் கொண்ட ஸ்ரீவைகுண்ட ஸ்தவம். இவர் அருளிய பஞ்ச ஸ்தவங்களில் முதலானது. இதனை அடுத்த அதிமானுஜ ஸ்தவத்தில், நரசிம்மாதி அவதாரங்களைச் சுருக்கமாக வும் இராம கிருஷ்ணாவதாரங்களைப் பெருக்கமாகவும் பேசி அனுபவித்தார். இதுவரை உலகில் வெளிவந்த சம்ஸ்கிருத வாங்ம யங்களில் இவற்றுக்கு ஈடில்லை என்னும்படி சொல் நோக்கு, பொருள் நோக்கு, தொடை நோக்கு, நடை நோக்கு அமைந்துள் ளது என்று வித்வத் ரஸிகவிவேகிகள் (சகல கலா வல்லுநர்கள்) ஒருமுகமாக விளம்பியுள்ளனர்.

இவ்வாறு அழகர் கோயிலை அடைந்து, அடிவாரம் தன்னில் அழகர் வடிவழகைப்பற்றி, முடியும் அடியும் படிகலனும் முற்றும் அனுபவித்து அவ்வெம்பெருமான் விஷயமாக 132 ஸ்லோகங்கள் கொண்ட 'சுந்தரபாஹுஸ்தவம்' அருளிச்செய்து திருவரங்கமாநகர் சோழன் கொடுமையிலிருந்து விடுபட்டு எம்பெருமானார் திரும்பி வந்து அவர் திருவடிநிழலில் தாம் வாழ வேண்டும் என்று பிரார்த்தித்துக்கொண்டு 12 வருடகாலம் அங்கு வாழ்ந்து வந்தார்.

### மீண்டும் திருவரங்கப் பெரிய கோயில் சேர்தல்

சோழமன்னன் மாண்டானென்று கேள்விப்பட்டு ஆழ்வான் அழகர் கோவிலைவிட்டு மீண்டும் திருவரங்கம் வந்தார். சோழன் உபத்திரவத்திற்குப் பயந்து திருநாராயணபுரத்திலிருந்த எம்பெரு மானாரும் சோழன் மடிந்ததை அறிந்து, அங்கிருந்து புறப்பட்டு, கோயிலுக்கு எழுந்தருளி, ஆழ்வானைப்பார்க்க அவர் திருமாளி கைக்கு வர, ஆழ்வானும், உடையவரை எதிர்கொண்டு அவர் காலடியில் விழுந்துகிடக்க, இருவரும் வார்த்தை ஒன்றும் பேச இயலாமல் இருந்தபின் உடையவர் ஆழ்வானிடம் இந்த வைணவ தர்சனத்திற்குக் கண் போன்றவரான உமக்குக் கண் போனதே என்று வருந்திப் பின் அவரையும் அழைத்துக்கொண்டு மடத்திற்குச் சென்றார். ஆழ்வான் தாம் அருளிய மூன்று ஸ்தவங்களையும் படிக்கக் கேட்டுமகிழ்ந்தவராய் அவரைப்பார்த்து நாம் காஞ்சிக்குச் சென்று பேரருளாளரிடம் உமக்குக் கண்பார்வை தருமாறு வேண்டி வருவோம் என்று கூறி காஞ்சியில் வரதராஜஸ்தவத்தைப் பேரருளா ளர் திருமுன்பு விண்ணப்பஞ் செய்து முடிக்கிறபோது உடையவர், கவனியாதிருக்கும்பொழுது, ஆழ்வான் உடையவர் திருஉள்ளப் படிதனக்குக் கண் வேண்டிக்கொள்ளாமல் நான் பெறும் பேறு நாலூரானும் பெற வேண்டும் என்று வேண்டிக்கொண்டார். அச் சோழராஜனை அடுத்திருந்த நாலூரானுடைய முயற்சியே பெரிய நம்பி திருநாடு அலங்கரிப்பதபற்கும் (இறப்பதற்கும்) ஆழ்வான் கண் இழப்பதற்கும் காரணமாகும். அத்தகைய படுபாவியான நாலூரானுக்குக் கொடிய நரகம் நிச்சயம் கிடைக்குமாதலால், வைணவ குலத்தில் பிறந்த ஒருவன் படுகுழியில் விழலாகாது என்று இரக்கமுற்று, நம்மாலல்லது அவன் உய்வு பெற வழி யில்லை என்று அறுதியிட்டு, பரம துரோகியான அவனுக்கும் நற்கதி வேண்டினார். இச்சிறந்த குணம் ஆழ்வான் ஒருவனுக்கே அசாதாரணமாக அமைந்துள்ளது என்பது மிகத்தெளிவான உண்மை யாகும்.

ஆழ்வான் பிரார்த்தித்ததை பேரருளாளன் அங்கீகரித்ததைக் கேட்ட எம்பெருமானார் பதறி பேரருளாளரான நீர் என் நினை வைத் தலைக்கட்டவில்லையே என்றும், ஆழ்வானை நோக்கி, 'நீர் ஸ்வதந்திரராய் என் நினைவைத் தலைக்கட்டாதே உபயோகமற்ற ஒன்றை வேண்டிக்கொண்டீரே என்றும் வெறுத்துரைத்து இனி என் செய்வது என்று மனக்குறைபட்டு நிற்க, அதனை உணர்ந்த பேரரு ளாளன், 'இராமானுஜா' ஆழ்வான். நம்மையும் உம்மையும் காணு

மிடத்து உட்கண்ணால் காணக்கடவன்' என்று வரமருளினார். அவ்வாறு இருப்பதைச் சோதித்துத் தேர்ந்து தெளிந்த உடையவர் திருஉள்ளமுகந்தவராய் ஆழ்வானுடன் மீண்டும் கோயிலுக்கே எழுந்தருளினார். ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவர்கள் சிலர் ஆழ்வானிடம் மகாபாபியான நாலூரானுக்கு நற்கதிவேண்டிக்கொண்டதற்குக் காரணம் வினவ, அப்படிப்பட்ட பாவிகளுக்கன்றோ இரங்க வேண்டுவது, மீனுக்குத் தண்ணீர் வார்த்துப்பலனென்ன என்றார். இதைக் கேட்டவர்கள் எம்பெருமானாரிடத்தில் கூடக்காணக்கிடைக்காத நற்குணங்கள் ஆழ்வானிடத்தில் அழகாக அமைந்திருப்பதைக் கண்டார்கள்.

ஆழ்வானுடைய சிஷ்யர்கள் பலரில் பிள்ளைப்பிள்ளையாழ்வான் என்பவர் நற்குல நற்செல்வத்தால் மேன்மை பெற்ற செருக்கினால், பாகவதர்களிடம் வினயமின்றிக்கே அபசாரப்பட்டுக் கொண்டேயிருந்தார். இவரைத் திருத்திப் பணிக்கொள்ளத் தீர்மானித்த ஆழ்வான், ஒரு புண்ணிய தினத்திலே நீராடின பின்பு, அவரிடம் பிள்ளைப்பிள்ளாய் எல்லாரும் புண்ணிய காலமென்று தானம் வழங்குவார்கள். நீர் நமக்கு ஒரு தானம் வழங்க மாட்டீரோ என்று கேட்க, நான் எதைத்தானம் பண்ணுவது? எல்லாமே சாமியினுடையதேயன்றோ என்று கூறினார். அதற்குப்பதிலாக அவ்வளவு போதாது. மனமொழி, மெய்களால் பாகவத அபசாரப்படாமல் இருக்க வேண்டும் என்று கேட்டு அப்படியே அவரும் வாக்குறுதி செய்தார். பின்பு ஒருநாள் அவர் மானசீகமாக, ஒரு பாகவதரிடத்தில் அபசாரப்பட நேர்ந்தது. ஆனால் மிகவும் வருந்தியவர் மன, மொழி, மெய்களால், அபசாரப்படாதபடி இப்பொல்லா அழுக்குடம்புடனே இருப்பது அரிதாய் இருக்கிறது என்று வருந்தவே இத்தனை நற்குணம் இவருக்கு உண்டாயிற்றே என்று ஆழ்வானும் மகிழ்ந்து பிள்ளைப்பிள்ளாய், நெஞ்சினால் நினைத்தற்கு அனுதாபமுண்டாகியபடியால் எம்பெருமான் பொறுத்தருள்வான். ராஜதண்டம் நேருமென்ற அச்சத்தினால் சரீர மூலமாக ஒருவரையும் நலியமாட்டீர். ஆனபின்னர் மானஸீகமாகப் பட்ட அபசாரத்தை உமக்குக் கழித்துத் தந்தோம். இனி வாக்கை மாத்திரம் நன்றாகக் குறிக்கொண்டு நல்லமுறையில் வாழக்கடவீர்' என்று கூறினார்.

## ஆழ்வான் பட்டருக்கு ஆச்சாரியருமானது

எம்பெருமானின் அருளினாலே, ஆழ்வானுக்கு இரண்டு புத்திரர்கள் பிறந்தமையை முன்னரே கண்டோம். அக்குழந்தைகளைக்

காண வேண்டி உடையவர் ஆழ்வான் திருமாளிகைக்குச் சென்று தம் சிஷ்யரான எம்பாரை நோக்கிக் குழந்தைகளை எடுத்துக் கொண்டு வருமாறு சொன்னார். அவரும் பிரபந்ந குலக்கொழுந் தான அக்குழந்தைகளை எடுத்து வரும்பொழுது காப்பாக 'த்வயம்' மந்திரத்தை அனுசந்தித்து வாழ்த்திக்கொண்டே வந்து குழந்தை களை எம்பெருமானாருக்குக் காட்டினார். அவரும் மிகமகிழ்ந்து, இக்குழந்தைகளிடம் 'த்வயம்' பரிமளிக்கின்றதே, காரணம் என்ன' என்று கேட்க, எம்பாரும் குழந்தைகளுக்குக் காப்பாகத் 'த்வயானு சந்தானம்' செய்து கொண்டு வந்தேன்' என்று சொன்னார். அவ் வாறு எம்பார் காப்பிட்டதற்கு உகந்து எம்பாரிடம் அக்குழந்தை களை உய்யும் வகையை நாடிச்சென்று முறப்பட்டீராதலில் நீரே இவர்கட்கு ஆச்சாரியராகக் கடவீர் என்று நியமித்தார். அதன்படியே அத்திருக்குமாரர்களுக்கு எம்பாரே ஆச்சாரய கிருத்யங்கள் செய்தரு ளினாரென்றும், இதுபற்றியே எம்பெருமானார், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை என்றபடி ஆச்சார்ய பரம்பரை வருகிற தென்பது பிரசித்தமாயிருக்கும்.

இவ்வாறிருக்க ஆழ்வானுக்கும் ஆச்சார்ய பரம்பரையில் அனுப்பிரவேசம் (இடம்) உண்டானதே, அது எங்கனம் என்று கேட்டால், ஆழ்வான் தம் திருக்குமாரர்கட்குத் திருவாய்மொழிக் குப் பொருள் கற்பித்து வரும்பொழுது 'எண்பெருக்கந்நலத் தொண் பொருள் ஈறில, வன்புகழ் நாரணன் திண்கழல் சேரே' என்ற பாசுரம் வந்தது. அந்த அளவிலே இது திருமந்திர வார்த்தையை விவரிக்கிற தாகையாலே இம்மந்திரத்தின் அர்த்தத்தை ஆச்சாரிய ரனிடத்திலேயே கேட்டறிய வேண்டியதாகையால், தான் அவர்க ளுக்குச் சொல்லாது நிறுத்தி, இதனை உங்கள் ஆச்சாரியரிடம் சென்று கேட்டுக்கொள்ளுங்கள் என்று சொல்ல, அதனை விரை வில் அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலினால் அவர்கள் உடனே எழுந்து ஆச்சாரியரான எம்பாரிடத்திற்குப் போகப் புறப் பட்டார்கள்.

ஆனால் ஆழ்வான் அவர்களைத் தடுத்து நிறுத்தி 'மின்னின் நிலையில் மன்னுயிராக்கைகள்' என்றபடி யாக்கை நிலையாமை யைத் திருஉள்ளத்தில் கொண்டு அவர்களை அழைத்து இருந்து கேளுங்கள் என்று கூறித் திருமந்திரத்தைச் சொல்லி, இப்பாட்டின் பொருளையும் விவரித்து, இப்பாசுரத்தைத் திருமந்திரத்தின் அர்த்த மாக நினைத்திருங்கள் என்று பணித்தருளினமையால் தம் திருக்கு மாரர்களுக்கு ஆழ்வானும் ஒரு ஆச்சாரியராக அமைந்தருளினார்.

ஆகவேதான் பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யமருளிச் செய்தபொழுது ஆசார்யவந்தனம் செய்கிற முதல் ஸ்லோகத்தில் 'வந்தே கோவிந்த தாதௌ என்று எம்பாரையும் திருத்தகப்பனாரையும் தொழுகின் றேன் என்றருளிச்செய்து உபயஸம்பந்தம் தமக்கு உண்டான வழி யைக் காட்டுகிறார்.

பட்டர் சிறுவராக இருந்தகாலத்தில் ஒருநாள் தம் தகப்பனா ரான ஆழ்வானிடத்தில் திருவாய்மொழி அனுசந்திக்கும்பொழுது 'உறு மோ பாவியேனுக்கே' (8.10.3) என்ற பாசுரத்தில் 'சிறு மாமனிசராய் என்னை ஆண்டாரிங்கே திரியவே' என்றதைக் கேட்டு, சிறுமை பெருமை இரண்டும் ஒருசேர எவ்வாறு ஒரு பொருளுக்குப் பொருந்தும் என்று பட்டர் வினா எழுப்ப ஆழ்வான் வடிவு சிறுத்து மகிமை பெருத்தவர்களும் மனிதரென்று பார்க்கும் பொழுது சிறுமை தோன்றினாலும், பகவத் பக்தி, ஞானம், அனுஷ்டானம் முதலிய நற்குணங்களை நோக்கும் அளவில் நித்ய முக்தர்களுக்கு நேர்மேன்மை பெற்று விளங்குகிறவர்கள். அத்த கைய மகாபுருஷர்களையே ஆழ்வார் சிறுமாமனிசர் என்று குறிப்பி டுகிறார் என்று விளக்க, பட்டர் அது தகும் என்று இசைவு கொண்டார்.

ஆழ்வானுடைய குடும்ப காரியங்கள் அனைத்தையும் எதிரா ஜரே நிர்வகித்து (நடத்தி) வந்தார். ஆழ்வானது குமாரர்கள் இருவ ருக்கும் சகல வித்தைகளையும் புகட்டுவித்தபின் அவர்கள் விவாகத் துக்குரிய பருவத்தை அடைந்த அளவில் ஆண்டாள் ஆழ்வானைப் பார்த்து, இவர்களுக்கு விவாகம் செய்விக்க வேண்டாமோ என்று வினவ, ஆழ்வானும் உடையவரிடம் சென்று இப்புத்திரர்களுக்கு விவாகம் செய்விக்க வேண்டும் என்று சொல்கிறார்களே என்று விண்ணப்பம் செய்ய, அவரும் பெரிய நம்பி உறவினருக்குப் பெண் கொடுக்கும்படி வேண்ட முதலில் மறுத்தவர்கள் பின்னர் பெருமாள் தாமே கனவில் தோன்றி கன்னிகைகளைக் கல்யாணம் செய்து கொடுக்கும்படி கட்டளையிட அவர்களும் இசைந்து, ஆழ்வான் குமாரர்களுக்கு தங்கள் குமாரத்திகளை கன்னிகாதானம் செய்து கொடுத்துச் சிறப்பாக விவாகமும் நடந்தேறியது. இதனால் ஆழ்வானுடைய குடும்ப கார்யமனைத்தும் எம்பெருமானார் தலை யில் கிடந்தது என்பது விளங்கும்.

## அருளிச் செயல்களில் ஆழ்வானுடைய நிர்வாகம்

நம் ஆச்சாரியார்கள் எல்லோரும் சகல சாஸ்திரங்களிலும் வல்லவராக இருந்தபோதிலும், ஆழ்வார்களுடைய ஈரச்சொற்க

ளையே கொண்டு, சகல சாஸ்திரார்த்தங்களையும் அருளிச்செயல்க ளிலேயே நயிப்பித்து அனுபவிப்பார்கள். இந்த அனுபவம் ஆழ்வா னுக்கு அதிகமாகவே இருக்கும். திவ்யப் பிரபந்தங்களில் பல பாசுரங்களில் ஆழ்வானுடைய நிர்வாகம் அருமையாகக் கொண்டா டப்படும். உதாரணமாக, திருவாய்மொழியில் ஆழ்வார் நாயகிபா வனையிலே பேசுகின்ற பாசுரங்களில் மாசறுசோதி (5:3) என்ற பாசுரத்தை உபந்யசிக்கும்போது தலையால் வணங்கவும் மாங் கொலோ தையலார் முன்பே (5:3:7) என்ற ஈற்றடியின் பொருளை விவரிக்குமளவில் ஆமருவி நிறை மேய்த்தான் நம்பியார் என்ற பெரியவர் எழுந்து தலைவி, தலைவனைத் தலையில் வணங்குவ துண்டோ என்று கேட்க, ஆழ்வான் சீதா பிராட்டி, சிறிய திருவடியி டத்தில் சந்தேகம் சொல்லி அனுப்பும்பொழுது எனக்காக அவரைத் தலையால் வணங்கு என்று சொன்னது கண்டீரே என்று கூறியதைக் கேட்டு அப்பெரியவர் மகிழ்ச்சியடைந்தார். இதைப்போன்ற பல விஷயங்களைப் பிரபந்த வியாக்யானங்களில் காணலாம்.

### ஆழ்வான் அருளிய கிரந்தங்கள்

திருமாலிருஞ்சோலை யாத்திரையில் அருளிய மூன்று ஸ்தவங் களும் பின்பு எம்பெருமானார் நியமனத்தால் அருளிய வரத ராஜஸ்தவமும் பின்னர் அருளிய ஸ்ரீஸ்தவமும் ஆக மொத்தம் ஐந்து ஸ்தவங்களாகும். இவை தவிர வேறு வேறு சில ஸ்தோத்ரங்களும் அருளிச்செய்தார் என்பதை பட்டர் தம் தகப்பனார் அருளிச்செய்ததா கச் சொல்லும் ஸ்தோத்திரங்களிலிருந்தும் தெரிகிறோம். இவை தவிர பட்டரும் ஆழ்வானும் தாங்கள் அருளிச்செய்த நித்யகிரந்தங்க ளில் என்று இருக்கக் காண்கையில் ஆழ்வான் நித்யக்கிரந்தம் ஒன்றும் அருளியிருப்பதாக விளங்குகிறது. இவ்விடத்திலேயே ஆழ்வானுடைய ச்ரமஸ்லோக வியாக்யானத்தையும் நாம் குறிப் பிட வேண்டும். ஆனால் சரம ஸ்லோக வியாக்யானம் நமக்குக் கிடைக்கவில்லை.

### ஆழ்வான் திருநாட்டுக்குப்போக நியமனம் பெற்றதை எம்பெருமா னார் உணர்ந்து மகிழ்தலும் வருந்துதலும்.

ஆழ்வான் திருநாட்டுக்கு ஏகவரம்பெற்றதைக் கேட்டு வருந் திய உடையவர் முன்னர் தான் தம் ஆச்சாரியார் திருக்கோஷ்டியூர் நம்பியிடம் பட்ட அபசாரத்தால் நமக்கு நரகமே கிட்டும் என்று வருந்தினேன். ஆனால் இப்பொழுது ஆழ்வானோடு சம்பந்தமுடை யார் அனைவருக்கும் மேல்வீடு கிட்டும் என்று நம் பெருமாள்

நியமித்தபடியால், நமக்கு ஆழ்வானோடு சம்பந்தமுண்டாதலால் ஒரு குறைவுமில்லை என்று களிப்புற்றுத் தம் காஷாயத்தை ஆகாயத்திலே வீசியெறிந்து மகிழ்ச்சிக்குப் போக்குவிட்டதாகவும் சொல்வர்.

ஆனாலும் தனக்குயிரான ஆழ்வானைப் பிரிந்து எங்கனம் உயிர்தரிப்பது என்று திருஉள்ளம் நொந்து 'இப்படிச் செய்தீரே, எங்களையும் அரங்கனையும் மறந்து மேல்நாடுபோகத் தீர்மானித்த தேன் என்று கேட்க ஆழ்வானும் உடையவருக்கு முன்னே போய் உடையவரை எதிர்கொண்டழைக்கவே என்று கூற இப்படியும் ஒரு ஆச்சார்ய பக்தி உண்டோ என்று வியந்து 'உம்முடைய பேற்றுக்கு நாம் விலக்காகலாமோ? சுகமாக நித்யவிபூதியேற எழுந்தருளுவீர்' என்று சொல்லிச் செவியிலே த்வயத்தை அருளிச்செய்தார். பின்னர் ஆழ்வானது திருமுதுகைத்தடவி அஞ்சலித்து விடைகொடுத்தருளி னார்.

## ஆழ்வான் திருநாட்டுக்கு எழுந்தருளல்

உடையவரின் நிரூபணம் பெற்ற ஆழ்வான் உடையவரின் திருவடித் தாமரைகளைக் கண்களிலும் மார்பிலும் ஒற்றிக்கொண்டு ஸ்ரீ பாததீர்த்தம் கொண்டு 'இனி மடமே எழுந்தருள வேண்டும்' என விண்ணப்பம் செய்ய, வடவாற்றங்கரை வழியாக உடையவர் பின்னே செல்ல, இனி நில்லும் எனத் தண்டம் சமர்ப்பித்து மீண்டும் ஆழ்வான் திருமாளிகைக்கு அருகிலிட்ட திருக்காவணத்தின் நடுவே எழுந்தருளியிருந்து தம் தேவியார் ஆண்டாளைப்பார்த்து என்ன நினைத்திருக்கிறாய் என்று கேட்க, தேவரீர் திருஉள்ளத்தைப் பின் செல்வதன்றி வேறு நினைவுண்டோ என்று கூறிவிட ஆழ்வா னும், பட்டரையும் ஸ்ரீராமபிள்ளையையும் அருகிலழைத்து பெரு மாளும் நாச்சிமாரும் எழுந்தருளியிருக்க உங்களுக்கு ஒரு குறையு மில்லை. நம் பெருமாள் பெற்று வளர்த்தார் என்று இறுமாந்தி ராதே, எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்றிருங்கள். ஆண்டாளுக்குக் குறைவு வராமல் நடந்து கொள்ளுங்கள். பாகவத அபசாரப்படாமல் அவர்களை ஆதரித்துப் போங்கள் என்று உபதே சித்து அவர்கள் கண்ணீரைத் துடைத்து நீங்கள் பிராக்ருத சம்பந் தத்தை நினைத்து வருந்தினீர்களானால் உடையவர் திருவடி சம்பந் தத்தை தூஷித்தவர் ஆவீர்கள். ஆத்மஸம்பந்தத்தை நினைத்து வருந்துவீர்களானால் நம்முடைய ஒழிக்க ஒழியாத உறவை அறிந்தி லீர்கள் ஆவீர்கள் என்று அவர்களைத் தேற்றிப்பின் கோயிலுக்கு

நேரே, பிள்ளைப்பிள்ளையாழ்வான் மடியிலே திருமுடியையும், ஆண்டாள் மடியிலே திருவடிகளையும் வைத்துக்கொண்டு, ஆள வந்தார் திருவடிகளைச் சிந்தை செய்து கொண்டு அன்றே திருநாட்டுக்கு எழுந்தருளினார். பின்னர் எம்பெருமானார் எழுந்தருளித் திருக்குமாரர்களைக்கொண்டு சரம கைங்கர்யங்களைப் பெருக்க நடத்தியருளினார். மொழியைக்கடக்கும் பெரும்புகழாகிற திருமேனியோடும் அர்ச்சாவதாரத்திருமேனியோடும் இவ்விபூதி எங்கும் நிறைந்து விளங்குகிறாராகையால் நாமும் கண்கள் துஞ்சாதே கண்ணாரக்கண்டு களிக்கும் பாக்யம் பெற்றோம்.

### கூரத்தாழ்வான் வாழித்திருநாமங்கள்

சீராருந் திருப்பதிகள் சிறக்க வந்தோன் வாழியே.
தென்னரங்கர் சீரருளைச் சேருமவன் வாழியே.
பாராரும் எதிராசர் பதம் பணிந்தோன் வாழியே.
பாடியத்தின் உட்பொருளைப் பகருமவன் வாழியே.
நாராயணன் சமயம் நாட்டினான் வாழியே.
நாலூரான் தனக்கு முக்தி நல்கினான் வாழியே.
ஏராருந் தையிலத்துத் திங்குவந்தான் வாழியே.
எழில் கூரத்தாழ்வான் தன் இணையடிகள் வாழியே.

*ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்*

### திருவரங்கத்தமுதனார் வைபவம்

இவரது அவதாரஸ்தலம் திருவரங்கம். தகப்பனார் அணியரங்கத்தமுதனார். இவரது இதரநாமங்கள் மூங்கில்குடியமுதனார். இவரது நட்சத்திரம் பங்குனி ஹஸ்தம். இவர் 128 வருஷம் வாழ்ந்திருந்தார் என்பன இவரது வாழ்க்கைக் குறிப்புகள். ஜீயப்பதியான ஸர்வேஸ்வரனை அடைவதற்கு அடிநிலையாகச் சொல்லப்படுவது ஆச்சார்ய சம்பந்தம். அத்தகைய ஆச்சார்ய சம்பந்தம் பெற்று உய்ந்து போனவர் திருவரங்கத்தமுதனார். இவர் பல கலைகளும் பயின்று கோயிலில் புரோஹிதராய் செல்வாக்குடன் பெரியகோயில் நம்பி என்னும் பெயருடன் திகழ்ந்து வந்தார். பெரிய கோயிலில் உடையவர் பெரிய பெருமாளால் உபய விபூதிகளும் இஷ்டப்படி உபயோகித்துக்கொள்ளலாம்படி வழங்கப்பட்டமையால் கோயில் காரியங்களை உடையவர் ஆராய்ந்து வரலானார்.

அக்காலத்தில் பெரியகோயில் நம்பி ரஜோகுணம் மிக்கவராய். உடையவருக்குக் கீழ்ப்படியாமல் கோயில் நிர்வாஹத்திற்கு இடையூறுகள் பல செய்து வந்தார். அதனால் உடையவர் மனம் உடைந்து பெரிய கோயில் நம்பியைக் கோயிலின்றும் வெளியேற்றத் திருஉள்ளம் கொண்டிருந்தார். ஒரு நாள் பெருமாள் புறப்பாட்டிற்காகக் காத்திருக்கும்பொழுது, உடையவர் கனவிலே பெருமாள் முதிய வேதியனாகத் தோன்றி, பெரியகோயில் நம்பி வெகு நாட்களாக நம்மையே நம்பி இருக்கிறார். பிறகு தேவரீர் திருஉள்ளம் என்று கூறி மறைந்தார். உடையவர் தான் கண்ட கனவினைக் கூரத்தாழ்வானிடம் சொல்லி நம் திறத்துப் பகைமை பாராட்டும் பெரிய கோயில் நம்பியை வெளியேற்றலாகாது. இங்கேயே வைத்துக் கொள்ள வேண்டும் என்பது பெருமாள் திருஉள்ளம் போலும். நம்மால் அவனோடு நிர்வாகம் நடத்த இயலாது. ஆகையால் நாம் பெருமாள் கோவிலுக்கே போய் விடுவோம் என்று கூறினார். அதைக்கேட்டு ஆழ்வான் இவ்விதம் அருளிச்செய்த பெருமாளுக்குப், பெரிய கோயில் நம்பியைத் திருத்திப்பணி கொள்ள வேண்டும் என்பதுதான் திருஉள்ளமாக இருக்க வேண்டும் என்று கூறினார். உடையவர் அவ்வாறாயின் நீரே அவரைத்திருத்தும் என்று கூறினார். ஆச்சாரியன் கட்டளையைத் தலைமேற்கொண்டு, ஆழ்வானும் புலமை வாய்ந்த பெரிய கோயில் பெரிய நம்பியை மெல்ல மெல்லச் சீர்திருத்தினார். திருத்தப்பட்ட நம்பியை ஆழ்வான் உடையவர் திருவடிகளிலே பொருத்தமுறச் சேரவிட்டார். நம்பியை உடையவர் அகமகிழ்ந்து முகமலர்ந்து ஏற்றுக் கொண்டார்.

பெரிய கோயில்நம்பி ஆத்மஹித சிந்தனையில் தம்மிலும் மேம்பட்டவராய் விளங்கினமையால், ஆழ்வான் திருவடிகளையே அவர் குருவாகப் பற்றும்படி செய்தருளினார் உடையவர். அரங்கனுக்குச் சேஷப்பட்டு அவன் செய்ய தாளிணைகள் பேர்வின்றி இருந்தாலும், தொண்டுபட்டவர் பால் சார்வின்றி நின்றதாகத் தம்மைப்பற்றி (இராமானுஜ நூற்றந்தாதி (80)) இவர் கூறிக்கொள்வதால் இவர் அரங்கனுக்குச் சேஷப்பட்டவராய் பணிவிடை புரிந்து கொண்டிருந்தாலும், எம்பெருமானார் அடியார்கள் விஷயத்தில் அனுகூலராய் இல்லாமலிருந்தமை புலனாகிறது.

அன்பார்ந்த இன்பம் ததும்பும்படியமைந்த பெரிய கோயில் நம்பியின் சொல்லின் இனிமையைநுகர்ந்த உடையவர் இவருக்கு 'அமுதன்' என்று திருநாமம் சூட்டினார். அதிலிருந்து இவருக்குத்

திருவரங்கத்தமுதனார் என்ற பெயர் வழங்கலாயிற்று. நம்மாசாரியர்கள், இவரிடத்திலுள்ள நம் மதிப்புத் தோன்ற 'பிள்ளை அமுதனார்' என்று இவரைக் குறிப்பிடுவார்கள். ஈட்டிலும் பெரிய ஜீயர் மணவாள மாமுனி இராமானுஜ நூற்றந்தாதிக்கு இயற்றிய உரையிலும், ஸ்ரீவசன பூஷணத்திற்கு அவரருளிய வியாக்யானத்திலும் (சூத்திரம் 416) பிள்ளையமுதானாரென்றுதான் வழங்கப்பட்டுள்ளது.

சில நாட்களுக்குப்பின்னர் அமுதனார் தாயாருக்குச் சரமகைங்கர்யம் செய்ய நேர்ந்தது. ஏகாதிஷ்த்திற்கு ஆள் வேண்டி உடையவரிடம் விண்ணப்பித்துக் கொண்டார். பூரியரோடுள்ள சுற்றம் புலத்திக்கொண்டவராதலால், மற்றெவருமே துணிந்து ஏற்காத இப்பணியை உடையவர் கட்டளைப்படி ஆழ்வான் துணிந்து ஏற்றுக் கொண்டார். ஆழ்வான் அமுது செய்து திருப்தி கூறும் காலத்தில் அமுதனாருடைய கோயில் புரோகிதத்தையும், புராண படநதையும் தானம் செய்யச்சொல்லி அவற்றைப்பெற்று உடையவரிடம் ஒப்படைத்தார். உடையவர் நியமனத்தினால் கோயிற்புரோகிதமும், புராணபடநமும் ஆழ்வாராலே நிர்வகிக்கப்பட்டு வந்தன.

உடையவர் கோயிற்பணியை ஆழ்வானுக்குத் தானமாக வழங்கிவிட்டபடியால், கோயிலிலே ஒட்டற்றிருந்தார் அமுதனார். இந்நிலையினை நோக்கிய, உடையவர் வித்வானான அமுதனார் இப்படி ஓய்ந்திருக்கலாகாது என்று எண்ணி, பிள்ளைதிருவரங்கப்பெருமாள் அரையர் திருமாளிகைக்கு எழுந்தருளி, இயற்பா, ஸ்ரீகோசத்தை தானமாகக் கேட்டு வாங்கி இன்று முதல் ஸந்நிதியில் இயற்பாவை நீங்கள் சேவிக்க வேண்டாம் என்று கூறி, அதனை அமுதனாரிடம் கொடுத்து, ஓர்உரு இயற்பாவினைச் சாதித்து, இயற்பா ஆயிரமும் ஸந்நிதியில் சேவிக்கும் அந்நாட்களிலே அரையருக்கு நடப்பவைகளான மரியாதைகளனைத்தையும் நடத்தும்படி ஏற்பாடு செய்தார். நாச்சியார் ஸந்நிதி முதலிய இடங்களிலும், அமுதனார் இயற்பாவை தொடங்க, ஸ்ரீவைஷ்ணவர்கள் தொடர்ந்து அனுசந்திக்கும்படி நியமித்தருளினார். திவ்யப்பிரபந்தங்களிலே இயற்பா நீங்கலாக மற்ற இசைப்பாக்கள் அனைத்தும் அரையராலேயே அனுசந்திக்கப்படுகின்றன.

இவ்வாறு உடையவர் திட்டம் செய்த சில நாட்களுக்குப்பிறகு அமுதனார் எம்பெருமானார் விஷயமாக, காயத்ரியை உரு எண்ணும் கணக்கில் நூற்றெட்டுக் கட்டளைக்கலித்துறையில் அமைந்த அந்தாதி நூலை அருளிச்செய்து பெருமாளிடம் விண்ணப்பம்

செய்தார். பெருமான் ஒரு ஸப்தாபரணத்திருநாளிலே, உடைய வரை நம்முடன் கூட வரவேண்டாம் என்று நியமித்து திருவீதி யிலே சகல வாத்யங்களையும் நிறுத்தி, ஸ்ரீ வைஷ்ணவர்கள் இதை அனுசந்திக்கக்கேட்டு போர உகந்தருளினார். அதுமுதல் பெருமாள் நியமனத்தாலே பெரிய ஸந்நிதியில் இயற்பா அனுசந்தித்தவுடனே நூற்றந்தாதியைப் பெருமாள் வரிசையுடன் கேட்டருள்கிறார். நாச்சி யார் சன்னிதியிலும் அப்படியே.

பெருமாள் திருஉள்ளத்தை அனுசரித்து எம்பெருமானார் முத லாயிரத்திலே கண்ணினுட் சிறுத்தாம்பினைப்போல இயற்பாவின் இறுதியில் இராமானுஜ நூற்றந்தாதியையும் சேர்த்து ஸ்ரீ வைஷ்ண வர்கள் அனைவரும், இந்த நூற்றந்தாதியை பிரபந்த காயத்ரியாக நாடோறும் அனுசந்திக்க வேண்டுமென்று கட்டளையிட்டருளி னார்.

இந்த இராமானுஜ நூற்றந்தாதி ஆச்சார்ய அபிமான நிஷ்டர்க ளுக்கு அறிய வேண்டிய விஷயங்கள் அனைத்தையும் விரிவாக விளக்கிக்காட்டுகிறது. ஆச்சார்ய அபிமான நிஷ்டன் பகவானை அறவே விட்டவனாக மாட்டான். ஆசார்ய வழிபாட்டிலேயே, எம்பெருமானும் வழிபட்டவனாகிவிடுகிறான் என்னும் உண்மை யைப் பிரபந்தத்தைக்கொண்டு அறுதியிட்டு எம்பெருமானாரையே வழிபடுவார்களாயினர் முன்னோர்கள். 'இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்' (106) என்னும் பாசுரம் இவ்வுண்மையை உணர்த்தும். நம்மாழ்வாருக்கு மதுரகவிகள்போல எம்பெருமானாருக்கு அமுத னார் அமைந்துள்ளார். இருவரும் ஆச்சார்யன் திறத்துத் தங்கள் நிலையை விளக்கியும் பிறருக்கு உபதேசித்தும் உய்வுறுத்தும் பொருள்களை உலகிற்கு வெளியிட்டு உதவுகின்றனர். ஆயினும் மதுரகவிகளைப் போலச் சுருங்கக் கூறாது, அமுதனார் பரக்கக்கூ றிப் பரமோபகாரம் புரிவதை நன்குணர்ந்து நாம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்.

இங்கனம் அறிவில் முதிர்ந்தோர்களால், முக்கிய பிரமாண மாக ஏற்கப்பட்ட இந்நூலை வைணவர்களனைவரும் பிரபந்த காயத்ரியாக நாடோறும் அனுசந்திக்க வேண்டுமென்று உடையவர் இட்ட கட்டளைக்கு ஏற்பவும் அவரது மறு அவதாரமான மணவா ளமாமுனிகள் உபதேசித்ததற்கேற்பவும் இந்த இராமானுஜ நூற்றந் தாதியை ஓதி உய்வுறுவோமாக.

*வாழித்திருநாமம்*

எந்தாதை கூரேசர் இணையடியோன் வாழியே.
எழில் மூங்கிற்குடிவிளங்க இங்கு வந்தோன் வாழியே.
நந்தாமல் எதிராசர் நலம் புகழ்வோன் வாழியே.
நன்மதுர கவிநிலையை நண்ணினோன் வாழியே.
பைந்தாம அரங்கன் பதம் பற்றினான் வாழியே.
பங்குனியில் அத்தநாள் பாருதித்தான் வாழியே.
அந்தாதி நூற்றெட்டும் அருளினான் வாழியே.
அணியரங்கத்தமுதனார் அடியிணைகள் வாழியே.

*பட்டர் அருளிய தனியன்*

நயந்தரு பேரின்பமெல்லாம் பழுதென்று நண்ணிதைபால்
சுயந்தரு கீர்த்தி இராமானுச முனி தாளிணைமேல்
உயர்ந்த குணத்துத் திருவரங்கத்தமுது ஓங்கும் அன்பால்
இயம்பும் கலித்துறை யந்தாதி ஓத இசை நெஞ்சமே.

என்பதாகும்.

# வடுக நம்பி வைபவம்

உடையவர் மேல்நாட்டிலே சைவர்கள் மிகுந்திருந்த கோவை யூரிலே ஒரு புஷ்கரணியிலே நீரெடுக்கும் துறையிலே முதலியாண் டானைத் திருவடி விளக்கி வரச்செய்தார். அந்த ஸ்ரீபாத தீர்த்தப் பிரபாவத்தாலே அவ்வூரார் அனைவரும் எம்பெருமானை ஆஸ்ர யித்தனர். அவ்வூருக்கு ஸ்ரீ சாளக்கிராமம் என்று திருநாமம் வழங்கி னார். அங்கிருந்துதான் வடுகநம்பிக்கு தர்ஸநார்த்தங்களை அருளிச் செய்தார். வடுநம்பியின் தகப்பனார் பெயர் ஸாலக்ராம ஐயன். பிறந்த நட்சத்திரம் ஸர்வ ஜித் வருஷம் மாசிப்புனர்பூசம். திருநாமங் கள் ஸாலக்ராம ஐயன். வடுக நம்பி பஞ்ச மோபாய சம்பந்தர் முதலியன. இவர் 95 வருடம் வாழ்ந்திருந்தார். இவர் பரம ஏகாந்தியாய் ஆச்சார்ய அபிமான நிஷ்டராகையாலே இவருக்கு இருப்பிடம் எம்பெருமானார் சந்நிதியே.

வடுகநம்பி எம்பெருமானார் திருவடிகளே உபாயோபேயம் என்று விஸ்வ சித்து அவர் திருவடிநிலைகளையே திருவாராதனம் பண்ணிப் போகுவார். இவ்வாறிருக்கையில் ஒரு நாள் உடையவர் திருவாராதனத்தையும், தன்னுடைய திருவாராதனத்தையும் (வணங்கும் கடவுள்) சேர எழுந்தருளப்பண்ணிக் கொண்டு வர உடையவர் கண்டு, 'வடுகா இது என் செய்தாய் என்ன?' இவரும் 'உங்கள் தேவரில் எங்கள் தேவருக்கு வந்தகுறையென்' என்றார். வடுகநம்பி உடையவருடன் பெருமாளைச் சேவிக்கப்போனாலும், உடையவர் விக்கிரகத்தையே சேவித்துக்கொண்டு போவார். ஒரு நாள் எம்பெருமானார் பெரிய பெருமாள் திருக்கண்ணழகைப்பா ராய் என்ன இவரும் உடையவர் திருக்கண்ணழகையும் பெரிய பெருமாள் கண்ணழகையும் பார்த்து என்னமுதினைக் கண்ட கண்கள், மற்றொன்றினைக் காணாவே என்ன உடையவரும் இதொன்றிருந்தபடி என், என உகந்து பூரண கடாட்சம் செய்தருளி னார்.

வடுகநம்பி எம்பெருமானார் அமுது செய்தருளித்தளிகைப் பிரஸாதம் ஸாதித்தால், இரண்டு கைகளாலும் ஏற்றுக்கொண்டு ஸ்வீகாரம் பண்ணித் தம்திருமுடியிலே கைகளைத் தடவிக்கொள் வார். இதைக்கண்டு உடையவர் மிகவும் கோபித்து வடுகா கையைக் கழுவிக்கொள் என்ன கழுவிக்கொண்டு மற்ற நாள் நம்பெருமாள் பிரஸாதத்தை உடையவர் தாமும் ஸ்வீகரித்து இவ ருக்கும் பிரஸாதிக்க வாங்கி ஸ்வீகரித்து கைகழுவிக்கொண்டார்.

உடையவர் இதைப்பார்த்து என் செய்தாய் என்ன வடுக நம்பி நேற்று அருளிச்செய்தபடி செய்தேன் என்றார். இதைக்கேட்ட உடையவர் வடுகா உமக்குத் தோற்றோம் என்றார்.

மற்றொரு நாள் வடுகநம்பி உடையவருக்குப் பால் காய்ச்சும் பொழுது, பெருமாள் பெரிய திருநாளில் உடுத்து முடித்துப் பூண்டு புறப்பட்டுவர உடையவரும் நம்பியைத் தம்மோடு பெருமாளை சேவிக்க வருமாறு அழைத்தார். வடுகநம்பியும் உம்முடைய பெருமாளைச் சேவிக்க வந்தால் என் பெருமாளது பாலமுது பொங்கிப் போகும், வரக்கூடாது என்று கூறினார். வடுக நம்பியகத்தே, பூர்வ சம்பந்திகளாயிருப்பவர்கள் வந்து தங்கிப்போக, அகத்தையெல்லாம் சுத்தி பண்ணி, உபயோகித்த பாத்திர பண்டங்களையும் தூர எறிந்துவிட்டுப் பிராயச்சித்தமாக ஸ்ரீவைஷ்ணவனான முதலியாண்டான் புழக்கடையில் கழித்துக் கிடந்த பாத்திரங்களைக் கொண்டு போய் ஒரு பக்தனுடைய எச்சில் நமக்குப் பிரசாதம் என்று உபயோகித்தார். இவர் உடையவர். சீர்பாத தீர்த்தமல்லால் மற்றொருவர் சீர்பாத தீர்த்தம் கொள்ளார். உடையவர் சீர்பாத தீர்த்தத்தை சாளக்கிராமத்திலே தாம் சேர்த்த தனமாகச் சேமித்து உடையவர் திருவடிகளையே தஞ்சமாகக் கொண்டு தமது சரம தசையிலும் தமக்கு அந்தரங்கரான பந்துக்களுக்கும், தஞ்சமாகக் காட்டிக்கொடுத்து சீர்த்ததனமிது வருந்தியும் பேணிக்கொண்டு போங்கள் என்று அடைக்கலங்காட்டிக் கொடுத்தருளினார். எனவேதான் மணவாள மாமுனிகள், தாம் அருளிய ஆர்த்திப்பிரபந்தத்தில்

உன்னையொழிய ஒரு தெய்வம் மற்றறியா
மன்னுபுகழ்சேர் வடுகநம்பி தன்நிலையை
என் தனக்கு நீ தந்து எதிராஜா எந்நாளும்
உன்தனக்கே ஆட்கொள் உகந்து' (ஆர்.பி.ர 11)

என்று குறிப்பிடுகிறார்.

வடுகநம்பி தாம் எழுதிய ஸ்ரீ யதிராஜவைபவம் என்ற நூலின் இறுதியில்; தனது அந்தரங்க சிஷ்யர்களில் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு கைங்கர்யத்தில் நியமித்த எதிராஜர் மிகவும் தகுதியற்ற என்னையும் தமக்குப்பால் காய்ச்சும் கைங்கர்யத்தில் நியமித்தருளினார். அத்துடன் தம் அடியார்க்கு அடியார்க்கு, அடியார்க்கு அடியனாகவும், தமக்கு நல்லது செய்பவனாகவும் கொண்டு என்னையும் ரட்சிக்கிறவரான அவர் பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்துகிறார். இறுதியில் பல ஸ்ருதியில் எதிராஜரின் வைபவத்தை விளக்குவதாய், கலியின் குற்றங்களைப் போக்குவதான இந்நூலை

எவர்கள் படிக்கிறார்களோ அவர்கள் உபய விபூதிநாயகராவார்கள் என்பது உறுதி என்று நூலின் பயனையும் கூறி முடிக்கிறார்.

**ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.**

## முதலியாண்டான் பற்றிய செய்திகள்

திரு அவதார ஸ்தலம், தொண்டை மண்டலத்தில் ஸ்ரீபுருஷமங் கலம். திருநக்ஷத்திரம் பரபவவருஷ சித்திரை மாதம் 25-ம்தேதி கிருஷ்ணபக்ஷ தஸமி வியாழக்கிழமை, புனர்பூசம், தகப்பனார். ஆனந்த தீட்சிதர், தாயார், நாச்சியாரம்மன்; குலம்- வடமான் வாதூல கோத்ரம். திருநாமங்கள்:- தாஸரதி, ராமானுஜன் பொன் னடி, ஸ்ரீவைஷ்ணவதாசர், திருமறுமார்பன் முதலியன. குமாரர் - கந்தாடையாண்டான். ஆசாரியார் - எம்பெருமானார். திருவாராத னம் - அழகிய சிங்கர். இருப்பிடம். கோயில் பிரபந்தங்கள் அருளிச்செய்தவர் திருத்தகப்பனார். இவர் எம்பெருமானாருக்குத் திருமருமகனாராய், திருவடிகளுமாய்த் திரிதண்டமுமாயிருப்பார். இவர் அருளிய பிரபந்தம் ரஹஸ்யத்ரயம். இவர் கந்தாடை திருவம் ஸத்துக்கெல்லாம் கூடஸ்தர். இவர் 150 ஆண்டுகள் வாழ்ந்திருந்தார்.

இராமானுஜர் (இளையாழ்வார் சுவாமிகள்) சந்யாச தர்மத்தை மேற்கொண்ட பின்னர் வாதூலகுலத்து வந்த முதலியாண்டானும், கூரத்தாழ்வானும் அவரை ஆஸ்ரயித்து அவரது சீடர்களானார்கள். முதலியாண்டானைத் தன்னுடைய தண்டமாகவும் கூரத்தாழ்வா னைத் தன்னுடைய பவித்ரமாகவும் கருதி ஏற்றுக்கொண்டார் இராமானுஜர். அவர் பதினெட்டு முறை திருக்கோஷ்டியூர் நம்பி திருமாளிகைக்கு அலைந்த பின்னர் அவர் மனமிரங்கித் திருமந்தி ரத்தை உபதேசிக்கத் தீர்மானித்து நீர் மட்டும் தனியாக வாரும் என்று சொல்லியனுப்ப உடையவர் முதலியாண்டானையும், ஆழ் வானையும் உடன் அழைத்துச்சென்று, ஆண்டானை இவர் என் திரிதண்டம் என்றும் ஆழ்வானை இவர் என் பவித்ரம் என்றும் கூறி அவர்களுக்கும் அப்பேறு கிடைக்குமாறு செய்தமை நமக்குத் தெரிந்ததே. பின்னர் சரமஸ்லோக அர்த்தத்தையும் உபதேசிக்க எண்ணி நீர் ஒருவர் மாத்திரம் வாரும் என்று கூறிட ஆழ்வானுக்கு நான் இதை வெளியிடாதிருக்க முடியாதே என்று கூறவே, நம்பியும் அவரது அத்யாவஸியத்தை (தகுதியை)ப்பரீட்சித்தறிந்து உபதேசி யும் என்றார்.

ஆகவே ஆழ்வானின் தகுதியைச் சோதித்து அவரது மா ஸோபவாஸம் கடந்தபின் அவ்வர்த்தத்தை உபதேசித்தார். பிறகு முதலியாண்டானும் வந்து தொழுது பிரார்த்திக்க நீர் நம்பி பக்கல் அனுமதி பெற்று வாரும் என்றிட ஆண்டானும் திருக்கோட்டியூர் சென்று ஆறுமாத காலம் அவருக்கு அடிமை செய்து காத்திருந்தும், பெறாமையால் வருந்தி, ஒருநாள் நம்பியை உபதேசம் செய்யுமாறு கனக்கப்பிராத்திக்கையில், முக்குறும்பும் போனால் எம்பெருமா னார் தாமே பிரஸாதிப்பார். போய்க்கேளும் என்று விடை கொடுத்து அனுப்பிவிட ஆண்டானும் மிக ஆவலோட எம்பெருமா னாரிடம் யாசித்தபின்னர் மிகவும் மகிழ்வோடு ஆண்டானுக்கு அதை உபதேசித்தருளினார்.

எம்பெருமானார் வடநாட்டு யாத்திரை சென்றபொழுது அவ ரது யாத்ரா சகாவாக உடன் சென்றவர் முதலியாண்டான். அவர்கள் யாத்திரையின்போது வஹ்நி புஷ்கரிணியாகிற கிராமத்திற்குச் சென்று தங்கிவிட்டு, அருகிலுள்ள மிதிலாபுரி சாளக்கிராமத்துக்குச் சென்றபொழுது அவ்வூர் ஜனங்கள் அனைவரும் பிரச்சந்த விரோதி களாகையாலே (வேறு மதத்தவர்கள்) உடையவரை ஆதரிக்க வில்லை. உடையவர் முதலியாண்டானிடம், நீர் போய் அவ்வூரார் நீர்முகக்கும் துறையிலே உம்முடைய ஸ்ரீபாதத்தை நீட்டிக் கொண் டிரும் என்று சொல்ல, அவரும் அப்படியே செய்ய, அவரதுசீர்பாத தீர்த்த விசேஷத்தால் மக்கள் மனம் தெளிந்து உடையவரிடம் வந்து ஆஸ்ரயித்தனர். இவரது பெருமையை விளக்கும் மற்றொரு சம்ப வம் வடுகநம்பியின் செயலாகும். அதை நாம் வடுக நம்பி வைபவத்திலேயே கண்டோம்.

எதிராஜருடைய பாதுகைகள் எவருடைய பெயராலே (முதலி யாண்டான் என்று) வழங்கப்படுகின்றனவோ, தாஸரதி என்னும் திருநாமமுடைய அந்த முதலியாண்டானின் திருவடிகளை யான் தலையிலே தரிக்கிறேன் என்கிறார் குருபரம்பராப் பிராமணத்தி ரட்டு என்ற நூலின் ஆசிரியர். வூரான்வழி ஆச்சார்யபரம்பரையில் கூரத்தாழ்வானையடுத்து வருபவர் முதலியாண்டானாகும்.

### முதலியாண்டான் வாழித்திருநாமங்கள்

அத்தகிரி யருளாள ரடிபணிந்தான் வாழியே.
அருட் பச்சை வாரணத்தில் அவதரித்தான் வாழியே.

சித்திரையிற் புனர்பூசம் சிறக்க வந்தான் வாழியே.
சீபாடிய மீடுமுதல் சீர் பெறுவோன் வாழியே.
உத்தமமாம் வரதூலம் உயர வந்தான் வாழியே.
ஊர் திருந்தச் சீபாத மூன்றினான் வாழியே.
முத்திரையும் செங்கோலும் முடிபெறுவோன் வாழியே.
முதலியாண்டான் பொற்பதங்கள் ஊழிதோறும் வாழியே.

*ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்*

## *நடதூராழ்வான் வைபவம்*

*எம்பெருமானாரது சகோதரியின் புதல்வரான ஸ்ரீவத்ஸ கோத்திரத்தில் வந்த வரத விஷ்ணு என்னும் பெயர் கொண்ட நடதூராழ்வான், எம்பெருமானாரது எழுபத்துநான்கு ஸ்ரீ பாஷ்ய ஸிம்ஹாஸனாதிபதிகளில் ஒருவர். அணுவான ஆத்மஸ்வரூபம் முக்தி தசையில் விபுவாகி விடுகிறது என்ற இவரது வாதத்தை அதிவாதம் என்று வேதாந்த தேசிகர் கூறியுள்ளார். எம்பெருமானார் சிஷ்யர்களிடையிலேயே சில கருத்து வேற்றுமைகள் உண்டென்பதும் அதை எம்பெருமானாரே தடை செய்யாமல் விட்டிருந்தார் எனவும் தேசிகர் அருளியுள்ளார்.*

## *எங்களாழ்வான் வைபவம்*

*திருவெள்ளறையில் ஸ்ரீ விஷ்ணு சித்தர் என்ற பெயருடன் சித்திரை ரோஹிணியில் அவதரித்தவர் இவர். கூரத்தாழ்வான் கண்ணை இழந்த பின்பு அவருக்குப்பதிலாக, ஸ்ரீபாஷ்யத்தின் எஞ்சிய பகுதியை எம்பெருமானார் எழுதி முடிக்க உறுதுணையாயிருந்தவர். இவர் ஆழ்வாரைப்போலவே அறிவாளியாயிருந்ததால் உடையவர் 'எங்கள் ஆழ்வானோ' என்று அபிமானித்தார் என்பது கர்ண பரம்பரைச்செய்தி.*

'இன்னவாறு திருப்பதிகள் எங்கும் வாழ்வித்து எதிராஜன்
தன்னதாக்கித் தரிசனமும் தரணியெங்கும் விளங்குவித்து
முன்னமுரைத்த பாடியத்தின் முற்றமூன்றத் தொருகூறு
தன்னைச், சென்றாண்டாயிரந்தாங்கெழுபத்தேழில் சாற்றினான்.

*என்று ராமானுஜர் மேல் நாட்டிலிருந்து திரும்ப வந்து ஏழெட்டு வருடங்கள் கழிந்தபின்பே ஸ்ரீ பாஷ்யத்தில் மூன்றிலொரு பகுதியை பூர்த்திசெய்தார் என்று குறித்திருப்பது கர்ண பரம்பரைச்செய்*

தியை வலியுறுத்துகிறது. 74 ஸிம்ஹஸனாதிபதிகளில் இவரும் ஒருவர். இவர் மணிப்பிரவாள நடையில் எழுதிய ஸர்வார்த்த சதுஷ்டயம் வார்த்தாமாலையில் உள்ளது. நடதூராழ்வானது பேர ரான வாத்ஸ்ய வரதாசார்யார் என்னும் நடதூரம்மாள் இவருடைய சிஷ்யர்களில் முதன்மையானவர்.

நடதூராழ்வான், நடதூரம்மாளுக்குத் தக்கபடி காலட்சேபம் சொல்லுவது தம்மால் இயலாது என்பதை உணர்ந்து, திருவெள்ள றைக்கு எங்களாழ்வானிடம் பாடம் கேட்க அனுப்பினார். ஆனால் எங்களாழ்வான், 'நான் என்னும் அகங்காரம் செத்தபின் வா, என்றும் எனக்கு சரமகைங்கர்யம் (அந்திம காலச்சடங்கு) செய்ய உன் தாய் தந்தையர் அனுமதி தர வேண்டும் என்றும் பலமுறை திருப்பி அனுப்பியபின் தாய் தந்தையர் அனுமதிபெற்று எங்களாழ் வானிடம் நீண்ட நாட்கள் திருவெள்ளறையிலேயே தங்கி இருந்து ஸ்ரீ பாஷ்யார்த்தங்கள் அனைத்தையும் கற்றார். இவ்வாறு அம்மா ளுக்கு ஆச்சார்யரானபடியாலே அம்மாளாசார்யார் என்றழைக்கப் பட்டார். எங்களாழ்வான். இன்றும் அப்பட்டத்தால் அந்தவம்சத்தி னர் அழைக்கப்படுகின்றனர்.

எங்களாழ்வான் எம்பெருமானாரைவிட மிகவும் இளையவ ராக இருக்க வேண்டும். இவர் நூறு வயதுவரை வாழ்ந்திருந்தார். கி.பி. 12-ம் நூற்றாண்டின் பெரும்பகுதி வாழ்ந்தவராதலால் நம்-பிள்ளைகாலம் வரை இவர் வாழ்ந்திருந்ததாகக் கூறப்படுகிறது. சகல சாஸ்திரங்களும் வல்லவர் எங்களாழ்வான் என்று நம்பிள்ளை அருளியதாகக்கூறுவர். எங்களாழ்வானது கடைசிக்காலத்தில் அவ ரது பூட்டனான வரதாசாரியார் என்பவரை ஸ்வீகார புத்திரராக்கி நடதூரம்மாள் சகல அர்த்தங்களையும் கற்பித்து வந்தார்.

### எம்பார் வைபவம்

எம்பெருமானாரது சிஷ்யர்களில் ஓரோன் வழிக்குரு பரம்பரை யில் இடம் பெறுபவர் எம்பார் ஒருவரே. எம்பெருமானாருக்குப் பின் திருவரங்கத்தில் தர்சன நிர்வாகராயிருந்து தமது சிஷ்யரான பட்டரிடம் அதை ஒப்பித்தவர் எம்பாரேயாவார். எம்பெருமானார் அவதரித்து எட்டு வருடங்களுக்குப்பின் குரோதன வருஷத்தில் கி.பி. 1026-ல் ஸ்ரீ பெரும்புதூரை அடுத்த வட்ட மணிக்குடியில் உடையவரது சிறிய தாயாரான பெரிய பிராட்டி ஸ்ரீதேவிக்கும் அவரது கணவர் கமலநயன பட்டருக்கும் குமாரராக கோவிந்தன்

என்னும் திருநாமத்துடன் அவதரித்தவர் எம்பார். இவர் அருளிய பிரபந்தம் விஜ்ஞானஸ்துதி என்பது.

நல்லொழுக்கமுடையவராய், எம்பெருமானாரது சகமாணவ ராய் இருந்த கோவிந்தபட்டரும் யாதவப் பிரகாசனுடைய கெட்ட எண்ணத்தை நடுக்காட்டில் ராமானுஜருக்கு அறிவித்து அவரை நிறுத்தித் தாம்மட்டும் யாதவரோடு யாத்திரை செல்லும் கோஷ்டி யோடு தொடர்ந்து சென்றார் என்ற விபரம் முன்னரே கூறப்பட்டது. யாதவரது மந்திர சக்திக்குக் கட்டுப்பட்ட கோவிந்தரும் கங்கையில் நீராடும்பொழுது தமது உள்ளங்கையில் சிவலிங்கத்தைப் பெற்றவ ராய் தமது கிராமமான மதுர மங்கலத்துக்குச் சென்று அந்த லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து காளஹஸ்தி சென்று அங்குள்ள சிவாலயக் கைங்கர்யங்களில் ஈடுபட்டவராய் வசித்து வந்தார் என்பதையும் முன்னரே கண்டோம்.

இராமானுசருடைய பிரார்த்தனைக்கு இரங்கி அவருடைய மாதுலரான பெரியதிருமலைநம்பி காளஹஸ்திக்குச் சென்று இவரை மறுபடியும் வைஷ்ணவராகத் திருத்தினார். இவ்வாறு திருந்திய ஸ்ரீ கோவிந்தப்பெருமாள் திருமலைநம்பி திருமாளிகை யில் சகல கைங்கர்யங்களும் செய்து வந்தார்.

ஒருநாள் நம்பிக்குப் படுக்கை விரித்து அதில் முதலில் தாம் படுத்துறங்குவதைக்கண்ட எம்பெருமானார் அவரது அடாத செயலை நம்பிக்குத் தெரிவிக்க அவர் கூப்பிட்டு விசாரித்தபொ ழுது, கோவிந்தர் ஆசார்யரது அபசாரத்திற்காகத் தனக்கு நரகமே கிட்டததாலும் தேவரீர் திருமேனியில் ஒன்றும் ஊறுதல், உறுத்தல் செய்யக்கூடாது என்று எண்ணினேன்என்றார். அவரது ஆச்சார்ய பக்தியைக்கண்டு எல்லோரும் வியந்தனர். மற்றொரு நாள் உடைய வர் நம்பியின் நந்தவனத்தில் உலவி வந்த சமயம் ஓரிடத்திலே கோவிந்தப்பெருமாள் ஒரு பாம்பின் வாயிலே கையிட்டு, அதன் நாக்கில் இருக்கும் முள்ளை எடுத்துவிட்டு நீராடி ஏனைய கைங்கர் யத்தைச் செய்தார். இராமானுசரும் அவரது பூததயைக்கண்டு வியந்து மகிழ்ந்தார். எம்பெருமானார் முதல்முறை திருமலைக்குச் சென்றபோது கோவிந்தரைத் தானமாகப் பெற்றுத் தம் சிஷ்யராக அழைத்துச் சென்றார். அவ்வாறு அவர்கள் திரும்பி வரும்வழியில் கடிகாசல மேறி மிக்கார் வேதவிமலர் விரும்பும் அக்காரக்கனியை யும் சேவித்துக்களித்து மீண்டும் திருக்கச்சி நம்பி, ஸந்நிதியில் எழுந்தருளியிருந்தார்.

கோவிந்தரை அழைத்துக்கொண்டு திருவரங்கம் செல்லும் போது வழியில் கோவிந்தரது முகம் வாடி வெளுத்திருப்பதை கண்டு திருமலைநம்பியைப் பிரிந்து வந்ததின் விளைவு ஈதென்று அனுமானித்து, திரும்பவும் அவரைப்போய்ச் சேவித்து வாரும் என்று கோவிந்தரைத் துணையோடு திருமலைநம்பியிடமே அனுப்பி வைத்தார். ஆனால் திருமலை நம்பி அவரை வரவிடாமல் விற்ற பசுவுக்குப் புல்லிடுவாருண்டோ, பித்தனைப்போகச் சொல் லுங்கள். என்று சொல்லித் தாம் முகம் கொடாமல் வெறுத்து அனுப்பி விட்டார். ஆகவே நம்பியைக்காணும் ஆசையைத் துறந்து சிறிதும் தாமதிக்காமல் எம்பெருமானாரிடம் திரும்பி, அவர் காலடியே தஞ்சமென்று விழுந்து கிடக்க, நடந்ததையெல்லாம் கேட்டறிந்த உடையவர், நம்பி நம் நினைவறிந்து நடந்து கொண் டாரே என்று வியந்து உகந்தார். கோவிந்தரை எடுத்தணைத்துக்கு ளிர நோக்கி உடன் அழைத்துக்கொண்டு ஸ்ரீரங்கம் சென்றடைந்து பெருமாளையும் நாச்சியாரையும் சேவித்து மகிழ்ந்தார் உடையவர். திருவரங்கத்தில் உடையவரையே தமக்கு மாதா, பிதா, ஆசார்யன் தெய்வம் எல்லாமாகக் கொண்டு அவர் திருமேனியழகிலும் ஆத்ம குணங்களிலும் ஈடுபட்டு அவருக்கு ஆட்செய்வதையே பணியாகக் கொண்டு வாழ்ந்து வரலானார் கோவிந்தர்.

கோவிந்தருடைய ஞானம் ஆசார்யபக்தி வைராக்யம் (பற் றின்மை) முதலான பண்புகள் நாளுக்கு நாள் வளர்ந்து வரவே கண்டவர் யாவரும் அவரை நேருக்கு நேராகவே கொண்டாடிப் பேசினார்கள். அவரும் இவை யாவும் ஒக்கும் ஒக்கும் என்று தம்மைத்தாமே மெச்சிக்கொண்டார். இதைக்கண்ட உடையவர் 'பலரும் உம்மைப் பாராட்டினால்' நீர் நைச்சியவார்த்தை (தகுதி யின்மை) தாழ்மை தெரிவிப்பது) சொல்லாமல், உம்மை நீரே போற்றிக்கொள்ளுதல் தகுமோ என்று கேட்க அவர் 'ஐயோ அவர்கள் அடியேனைக் கொண்டாடுவதென்றால் காளஹஸ்தியில் சிவவேடத்தில் இருந்தபொழுது கொண்டாடினால்தான் என்னைக் கொண்டாடியதாகும். அடியேனைத் திருத்திப் பணிக்கொள்ள தேவ ரீர் பண்ணிய கிருஷிபலனை (சுபமான எண்ணம், அதற்கேற்ற செயல் இவற்றின் பயன்) கொண்டாடுபவையன்றோ? இதை அடியேனும் சேர்ந்து நன்றிப்பெருக்கோடு கொண்டாடுவதன்றோ முறை என்றார். இதைக்கேட்ட உடையவர் மகிழ்ந்து 'உமது உயர்ந்த ஆத்ம குணங்கள் நமக்கும் படியும்படி உமது நெஞ்சினால் நம்மை அணைத்துக்கொள்வீர் என்று கூறித் தம்பியை வாரியெ டுத்து அணைத்துக்கொண்டு அதனால் தாம் தூய்மை பெற்றதாகக் கருதினார் இராமானுஜர்.

ஒருநாள் திருவரங்கத்து வீதிஒன்றில் ஒரு (தேவதாசி) அடியாள் வீட்டு வாசலில் கோவிந்தர் தம் வேலைகளைப் புறக்கணித்து விட்டு நெடுநேரம் நின்று உள்ளிருந்து வந்த இனிமையான குரலில் அமைந்த இராமானுசரது தாலாட்டைக்கேட்டு மெய்மறந்திருந்தார். இவரைத் தப்பாகப் புரிந்து கொண்டவர்கள் இந்நிகழ்ச்சியை உடையவருக்குத் தெரியப்படுத்தினர். கோவிந்தரை அழைத்து விசாரித்து உண்மையைத் தெரிந்துகொண்டவர்கள் அவரது யதிராஜ பக்தியைக் கண்டு வியந்து கொண்டாடினர். இந்த நிலை நாளுக்கு நாள் முதிர்ந்து வந்தது. இராமானுஜர் குணானுபவமும், அவர் திருமேனியழகில் ஈடுபாடும் கோவிந்தருக்கு உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் என்ற நிலை நாளுக்கு நாள் முதிர்ந்தது.

### எம்பெருமானார் வடிவழகில் ஈடுபட்ட எம்பார் எழுதிய பாசுரம்

> பற்பமெனத் திகழ் பைங்கழலுன்றன் பல்லவமே விரலும்
> பாவனமாகிய பைந்துவராடை பதித்த மருங்கழகும்
> முப்புரி நூலோடு முன்கையிலேந்திய முக்கோல் தன்னழகும்
> முன்னவர் தந்திடு மொழிகள் நிறைந்திடு முறுவல் நிலாவழகும்
> கற்பகமே விழி கருணை பொழிந்திடு கமலக்கண்ணழகும்,
> காரிசுதன் கழல் சூடிய முடியும் கனக நற்சிகை முடியும்,
> எப்பொழுதும் எதிராசன் வடிவழகென்னிதயத்துளதால்
> இல்லையெனக்கெதிரில்லையெனக்கெதிர் இல்லையெனக் கெதிரே.

என்பதாகும்.

கோவிந்தர் இராமானுசன் மிக்க சீலமல்லால் உள்ளாது என் நெஞ்சு என்றபடியே வாழ்ந்து வருகையில் அவரது தாயார் கோவிந்தா, நம் குடும்பம் விளங்க மாட்டுப்பெண் வாழ ஒரு குழந்தை வேண்டாமோ என்று கேட்க, அவரும் தான் தனியாய் இருக்கும்போது அவகாசம் பார்த்து அவளை அனுப்பி வையும் என்றார். தாயார் பல நாள் காத்திருந்தும் அப்படியொரு அவகாசம் காணாமையாலே உடையவரிடம் முறையிட்டாள். உடையவர் தம்பியை அழைத்து 'கோவிந்தரே நம் ஆணை. நல்லவேளையில் மனையாளுடன் கிருஹஸ்த தர்மம் நடத்துவீராக என்றார். கோவிந்

தரும் தம் மனையாளை அழைத்து ஓரிரவு பூராவும் அவளுக்கு அந்தர்யாமியான பகவானைக் காட்டித் தந்து பகவத் குணானுபவத்தைப் பண்ணி வைக்க வேறுஎதற்கும் வாய்ப்பில்லாமல் போயிற்று. இவ்விருப்பை மருமகள் சொல்லியறிந்த தாயார் மகனிடம் தம் விருப்பம் நிறைவேறாமைக்கு வருத்தப்பட அவரும் அந்தர்யாமி ஒளிவிட்டு விளங்க அழிச்சாட்டம் கூடவில்லையே என்று கூறி விட்டதால் மீண்டும் உடையவரிடமே முறையிட்டாள். அவரும் தம்பியை அழைத்து விசாரிக்க இவரும் அந்தர்யாமி பிரகாசிக்கும்போது இதற்கு இருட்டேது? தனிமையேது? அடியேன் செய்யக்கடவது என் என்றார்.

ஆச்சாரியரும் இவரது பற்றற்ற நிலை கண்டு மகிழ்ந்து உமக்கு விஷயாந்திர விரக்தி இந்த அளவுக்கு உள்ளதாகில் உத்தமாஸ்ரமம் தானே (துறவுநிலை) கைக்கொள்ளும் என்று நியமித்து, அவருக்குத் திரிதண்டம் காஷாயங்களையணிவித்து, தம்மைப்போன்றே முக்கோற்பகவராக்கியருளினார். அப்புதிய துறவிவிக்கு எம்பெருமானார் என்று தமது பெயரையே தாஸ்யநாமமாகச் சூட்டினார். பெயரைப் பெற்றவரோ இத்திருநாமம் அடியேனால் சுமக்க முடியாது. சுவாமிக்கு நிழலும் அடிதாறுமாய் உள்ளவனுக்கு பொருந்தும்படி பெயரருள வேண்டும் என்று வேண்ட சுவாமியும் அப்பெயரைச் சுருக்கி 'எம்பார்' என்று பெயரைச்சூட்டினார். பின்னர் எம்பார் கூரத்தாழ்வான் குமாரரான பராசரபட்டருக்கு ஆசாரியராகி பட்டரால் அருளுப்பட்ட பின்வரும் தனியனைப் பெற்றார்.

'ராமானுஜ பதச்சாரா கோவிந்தாஹ்வாக பாயிநீ
த்தாயத்ததஸ்வ ரூபாஸகஜீயாத்மத்விச்ர மஸ்தவி'

எம்பெருமானார் என்ற பெயரைச் சுருக்கிப் பெற்ற திருநாமத்தை 'எம்பார் எமக்கு இளைப்பாறுமிடம்' என்று பொருள் கொண்டு 'மத் விச்ரமஸ் தவீ' என்று தனியனிட்டது பட்டரின் மாமேதைக்கு எடுத்துக்காட்டாகும்.

அந்தர்யாமி பிரகாசித்துக் கொண்டிருக்கையில் அழிச்சாட்டம் கூடுமா என்று எம்பார் கூறியது முழுதும் உண்மையென்று உடையவர் மற்றவர்களுக்குக் காட்ட விரும்பிச் செய்த செயல் குருபரம்பரைச் செய்திகளில் கூறப்பட்டுள்ளது. கோவிந்தர் முன்னிரவைக்கழித்த ஓர் இருட்டறையில் ஒரு ஊசியை எறிந்துவிட்டு அங்குள்ள ஊசியைக் கொண்டு வாருங்கள் என்று சிஷ்யர்களுக்குக் கட்டளை இட அவர்களால் ஒளிமிக்க விளக்குடன் சென்று தேடியும் ஊசி கிடைக்கவில்லையாம். பின்னர் கோவிந்தரை அழைத்து அவ்வறை

யில் தரையில் ஏதாவது பொருள் இருந்தால் எடுத்து வாரும் என்று அனுப்ப அவர் கையில் விளக்கேதுமில்லாமலேயே சென்று அங்கு ஊசியிருக்கக் கண்டு எடுத்து வந்து 'இதுவே அங்கு தரையில் இருந்தது என்று கொடுத்தாராம். அந்தர்யாமியான எம்பெருமான் ஒளிவிட்டுப் பிரகாசித்ததால் அவ்வூசியை அவரால் எளிதில் கண்டு பிடிக்க முடிந்தது.

ஆச்சாரியார் தமக்குத் துணையாக சைவத்தினின்றும் மீட்டுக் கொண்டு வரப்பட்ட இவரைக் கொண்டாரென்றும் ஸ்வாமிக்கு அணுக்கராய் பல குற்றேவல்களை இவர் புரிந்திருந்தார் என்றும் ஊகிக்கிறோம். எம்பெருமானாருக்கும் இவருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. எதிராஜர் அமுது செய்ததும் நூறு அடி நடப்பது என்ற பழக்கத்தைக் கொண்டவர். இப்படி உலாவுகையில் ஸ்வாமி ஆழ்வார்களின் பாசுரங்களை மனதில் அனுசந்திப்பது வழக்கம். ஒருநாள் வழக்கமாகச் செல்லும் தூரம் செல்லாமல் சடக்கெனத் திரும்பக்கண்ட எம்பார் திருமாலிருஞ்சோலையாகாதே திரு உள் ளத்தில் ஓடுவது என்றாராம். மடித்தேன் மனைவாழ்க்கையினில் நிற்பதோர் மாயையை என்று சொல்லி மடித்தேன் என்று திரும்ப இந்தப்பாசுரம் சுவாமி மனதில் ஓடுகின்றது என்று கண்டுகொண்ட செய்தி அதிசயமாக இருக்கிறது.

சரணாகதிகத்யம் எம்பெருமானாருக்கும் எம்பெருமானுக்கும் நடந்த உரையாடலாக அமைந்துள்ளது. எக்காலமும் தேவரீருக்க டிமை செய்திருப்பவனாக வேண்டும் என்று எம்பெருமானார் வேண்டிட; என்றும் எனக்காட்செய்பவராக இருப்பீராக. 'த்வயத் தை' அர்த்தத்துடன் அனுசந்தித்துக்கொண்டு இத்திருவரங்கத்தே இனிதிரும் என்று பெருமாள் ஸ்வாமியை நியமித்தருளியதாகத் தெரிகிறது. இப்படிப் பெரிய பெருமாள் அருளிச்செய்தார் என் பதை நாங்கள் நம்புவது எப்படி என்று எம்பார்கேட்க, எனக்குப் பெரிய பெருமாள் தனது சீலாதி குணங்களை கையில் நெல்லிக்கனி யாகக் காட்டித்தந்து அவர் சொல்லிக்கச் சொன்ன வார்த்தையாகை யாலே அவர் அருளிச்செய்த வார்த்தை என்று எடுத்துக்கொள்ளத் தடையில்லை என்று எம்பெருமானார் அருளினார். எம்பாருக்கு உடையவர் திருவாக்கில் நம்பிக்கை இல்லை என்று அர்த்த மில்லை. நம் போல்வார் நெஞ்சில் தோன்றும் ஐயப்பாட்டை ஸ்வாமி திருவாக்கைக் கொண்டே போக்க வேண்டுமென்றே எம்பார் இக்கேள்வியைக் கேட்டிருக்க வேண்டும்.

சாமான்யமாக ஒரு சிஷ்யன்தன் ஆச்சாரியரைக் கேட்கக் கூடாத கேள்வியை எம்பார் இங்கு கேட்டிருக்கிறார். எந்த அர்த்தத் தையும் ஆச்சார்யர் மூலமாய் வெளியிட்ட பெரியோர்கள் பாங்க றிந்து பின்பற்றத்தக்கது. எம்பார் திருவாக்கான பாசுரம் ஒன்று

எங்கள் கதியே இராமானுசமுனியே
சங்கை கெடுத்தாண்ட தவராசா பொங்குபுகழ்
மங்கையர் கோனிந்த மறையாயிரமனைத்தும்
தங்குமனம் நீ எனக்குத்தா

'என்ற பாசுரத்தைப்போலவே எம்பாரின் பிரிய சிஷ்யர் பட்டர் திருவாய்மொழி தங்கு மனத்தை எம்பெருமானாரிடத்தில் வேண் டிப் பாசுரம் சாதித்துள்ளது, ஏய்ந்த பெருங்கீர்த்தி.....

என்பது இவர்கள் கருத்தில் ஆழ்வார்களின் அருளிச்செயல்களை ஆச்சாரியரான உடையவர் அருளினால்தான் மனதில் தரிக்கமுடியும் என்பது தெரிகிறது.

முன்பொருகால் ஆழ்வார் திருநகரியில் ஒரு சலவைத்தொழி லாளி தன் குழந்தைகளைத் தனித்னியே சடகோபா, காரிமாரா, குருகூர்நம்பி என்று நம்மாழ்வாரின் இனிய பெயர்களையிட்டு, அழைத்ததைக்கேட்ட உடையவர் தமக்கு இந்தப்பாக்கியம் கிடைக் கவில்லையே என்று நினைத்து வருந்தியதாகச் சொல்வதுண்டு. அது போலவே 'இராமானுஜபதச் சாயா' என்று ராமானுஜரின் நிழலும் அடிதாறுமான எம்பார் ராமானுஜர் என்றழைத்து அந்த நாமத்தின் அமுதச் சுவையைப் பருக தனக்கு ஒரு சிறுவன் இல்லையே என்று ஏங்கினாராம். இவ்விஷயத்தைக் கேள்விப் பட்ட இராமானுஜர் எம்பாரை அழைத்து, அழகான திருவாழி, திருச்சங்கு, திருமண்காப்பு இவைகளால் அலங்கரிக்கப்பட்ட தம்மு டைய உபபாத்திரத்தை (பஞ்ச பாத்திரம்) அவருக்குத் தந்தருளி இத்தை நமது பெயரால் அழைப்பீராக' என்று நியமிக்க எம்பார் அப்பாத்திரத்தை நிதி எனப்பெற்று அதை இராமானுஜன் என்று அழைத்து வரலானார். 'அது முதலாக ஸ்ரீ வைஷ்ணவர்கள்தாம் கையாளும் உபபாத்திரத்தை ராமானுஜன் என்றே அழைத்து வரு கின்றனர்.

நம் பெருமாள் நம் மணவாளமாமுனிகளுக்கிட்ட தனியனில் ஸ்வாமியை 'தீபக்யாதி குணார்ணவம்' என்று போற்றுகிறார். ராமானுஜர் உட்பட பூர்வாசாரியார்கள் அனைவரும் மெய்யறிவு, பகவான் மற்றும் ஆச்சாரியார்களிடம் அளவுகடந்த பிரேமை,

விஷய வைராக்யம் முதலான குணங்களைக் கடல்போன்று பெற்றுள்ளவர்கள். எம்பெருமானார் எம்பாருக்கு அறிய வேண்டிய அர்த்தங்களையெல்லாம் தாமே புகட்டினார். கூரத்தாழ்வானுக்கும், முதலியாண்டானுக்கும் எம்பெருமானார் அவர்கள் தகுதியைச் சோதித்தறிந்த பின்னரே உபதேசம் பண்ணினார். ஆகவே அவர்கள் அதைப்பெற அரும்பாடு பட வேண்டியதாயிற்ற. ஆனால் எந்தவிதமான சிரமமும் வைக்காமல், எவ்விதச் சோதனைகளுக்கும் உள்ளாக்காமல் தாமே எம்பாருக்கு உபதேசித்தார்.

மேலும் ஆண்டான் ஆழ்வானுக்கில்லாத ஒரு தனிப்பெருமையும் எம்பாருக்கு உண்டு. ஓரான் வழி ஆச்சார்ய பரம்பரையிலன் வயம்

**லக்ஷ்மிநாத ஸமாரமபாம் நாதயாமுநமத்யமாம்**
**அஸ்மதா சார்யபர்யந் தாம் வந்தேகுருபரம்பராம்**

என்று ஆழ்வான் அருளிய பிரசித்தமான தனியன், திருமகள் கேள்வனான, பெரியபெருமாள், பெரிய பிராட்டி, சேனை முதலியார், நம்மாழ்வார், நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார் பெரியநம்பி எம்பெருமானார் எம்பார் என்று ஆழ்வான் அனுசந்திக்கும் ஆசார்ய பரம்பரையில் இடம் பெறுகிறார் எம்பார்.

அருளிச்செயல் வியாக்யானங்களில் பலப்பல இடங்களில் பட்டர் நிர்வாஹம் என்று மிகவும் சுவையான பொருள்கள் காட்டப்பட்டுள்ளன. இவற்றுக்குத் தோற்றுவாய் பட்டரின் ஆச்சாரியராக எம்பெருமானாரால் நியமிக்கப்பட்ட எம்பாரும், திருத்தகப்பனாரான கூரத்தாழ்வானுமேயாகும். 'எம்பார் நிர்வாஹம்' என்று திவ்யப்பிரபந்த வியாக்யானங்களில் காணப்படுபவை பொருட்சுவை மிக்குள்ளவை. உதாரணமாக 'நாச்சியார் திருமொழி (4.11) ஊடல், கூடல், உணர்தல் புணர்தலை, நீடுநின்ற நிறைபுகழாய்ச்சியர் என்ற இடத்தில் ஆய்ச்சியருக்கு நிறைபுகழாவது கிருஷ்ணனை இன்னவள் பட்டினி கொண்டாள் என்ற புகழ் காணும் என்கிறார் எம்பார். ஆயர் மகளிர் கண்ணனிடம் ஊடுவது அடிக்கடி நிகழும் நிகழ்ச்சியாகும். வாசுதேவன் வரவு பார்த்துக் காத்திருப்பவர் பல பெண்கள். ஒருத்தி, ஒரே வேளையில் சினம் தீர்ந்து கண்ணனை அழைப்பாள். ஒருத்தி கோபம் நான்கு நாட்கள் வரை நீடிக்கும். இவனும் அதுவரை பொறுத்துக் கிடப்பது அந்த ஆய்ச்சியின் ரூபம், குணம், இவற்றால் கவரப்பட்டதால்தான். இப்படிக்

கண்ணனைக் காக்கவைப்பது அவர்கள் நிறைபுகழ் என்பார் எம்பார்.

### எம்பாரது பத்து வார்த்தைகள்

பட்டர் தமது ஆச்சாரியரான எம்பாரை ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் இருக்கும் விதம் என்ன? என்று வினவ ஸகல வேத சாஸ்திரங்களாலே அறுதியிட்ட அர்த்தத்தை பத்து வார்த்தைகளாலே எம்பார் அருளிச்செய்தார். அவை வருமாறு.

**முதல் வார்த்தை:** 'காணவாராய்' என்று கண்ணும் வாயும் துவர்த்தடியேன் (திருவா 8:5:2) என்றும் கங்குலும் பகலும் கண்துயிலறியாள் (7:2:1) என்றும் பக்கம் நோக்கி நின்றலர்ந்தேன் பாவியேன் காண்கின்றிலேன் (44.7.10) என்றும் எம்பெருமான் அருளை நோக்கியேயிருப்பான் என்னுமிருக்கை. இது முதல் லட்சணம். எம்பெருமானது அழகு, இனிமை (சௌலப்யம்) குணநலன்கள் யாவும் அவனைக் கடுகக்கிட்டி, கைங்கர்யம் பண்ணி, மகிழ்விக்க வேணும் என்று துடிக்கப்பண்ணும் நிலை.

**இரண்டாம் வார்த்தை:** அப்பேறும் அவனாலேயே பெற வேணுமென்றிருக்கை. அதாவது உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன் (திருவா 5:8:3) உனக்குப்பணி செய்திருக்கும் தவமுடையேன் (பெரியா 3:3) யானே நீ என்னுடைமையும் நீயே (சிருவா 2:9:7) என்றும், இனி உன் திருவருளாலன்றிக் காப்பரிதால் (திருவிரு 62) என்றுமிருக்கை. உன்னையன்றிப் பிறரிடம் எந்த நன்மையும் வேண்டமாட்டேன் என்று அவனையே நோக்கியிருக்கை இரண்டாம் லட்சணம்.

**மூன்றாம் வார்த்தை:** இப்பேறு பெற்று வாழநினைத்திருப்பார் வேறு (தேவதாந்திரபஜனம்) தெய்வங்களைத் தொழ மாட்டார். அதாவது மறந்தும் புறந்தொழா மாந்தர் (நான்முகன் திரு 68) தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்த்து நின் தாளின் கீழ்வாழ்ச்சி (திருவா 3:2:1) கண்டாரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும் கொண்டானையல்லால் அறியாக்குல மகன்போல், இருக்கை (பெருமாள் திருமொழி 5:2) மூன்றாவது இலட்சணம் என்று சொல்லுகிறார்.

**நாலாம் வார்த்தை:** பிற தெய்வங்களைத் தொழுபவரது சகவாசம் வருந்தியும் கைவிடுதல்; அதாவது எண்ணாதே இருப்பாரை இமைப்பொழுதும் எண்ணோம், எண்ணாத மானிடத்தை எண்ணாதபோதெல்லாம் இனியவாறே (திருமொழி 26.1.11.6.7) என்றி

ருக்கை. அதாவது அடுப்பிலேற்றினால் இயல்பில் குளிர்ந்த நீரும் உஷ்ணமாகுமாப்போலே, பிற தேவதாந்திரங்களும் அவர் பக்தர்களும் ஸ்ரீ வைஷ்ணவர்களின் குளிர்ந்த குற்றமற்ற தன்மையை மாற்றுவர் என்ற கொள்கை. பீஷ்மர் துரோணர், அரசனான நான் இருக்க நீ ஏன் விதுரர் வீட்டில் உணவுண்டாய் என்று துரியோதனன், கண்ணனைக்கேட்க, எனக்கு உயிர்நிலையான பாண்டவர்களை விரோதிப்பதால், நீ எனக்கு விரோதி என்ற கண்ணன் பதில் எம்பெருமானைத் தவிர இதர தேவதைகளைத் தொழுபவருடன் எக்காரணம் கொண்டும் தொடர்பு கூடாது என்று இந்த நாலாம் வார்த்தையை வலியுறுத்துகிறது.

**ஐந்தாம் வார்த்தை:** எம்பெருமான் உகந்தருளின திவ்யதேசங்களில் வசிப்பது. நல்லார்கள் வாழும் நளிரரங்கம் (நாச், திரு 11.5) எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனும் ஆவேனே (பெரு. திரு 4:10)என்று இருக்கை. பொய்யேயாகிலும் இது நல்லது என்ற நம்பிக்கையில்லாவிட்டாலும் உகந்தருளின திவ்யதேசங்களில் புக்குப் புறப்பட்டாராகில் கடைசி காலத்தில் நன்மை செய்யும் என்றபடி திவ்ய தேசத்தில் வாழந்திருப்பது ஸ்ரீவைஷ்ணவ லட்சணம்.

**ஆறாம் வார்த்தை:** அனுகூல சங்கல்பனாயிருக்கை. அதாவது எம்பெருமான் ரட்சகன், அவசியம். ரட்சிப்பான் என்று திடமாக நம்ப வேண்டும். நாம் ஒரு முறை பண்ணும் அஞ்சலி அநிஷ்டங்களைப்போக்கி எல்லா மங்களங்களையும் கொடுக்கவல்லது. நமது நலனுக்கு நாம் ஒரு முயற்சியும் செய்ய வேண்டாம். பகவான் நமது நலன்களைத் தன் பேறாகக் கவனிப்பான் என்றிருப்பது ஒரு ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம்.

**ஏழாம் வார்த்தை:** பிராதி கூல்யத்தை வருந்தியும் கைவிடுகை. அதாவது எம்பெருமானிடத்தில் அபசாரப்படுதல், அவனடியாரிடத்தில் அபசாரப்படுதல், அதுவும் காரணமின்றி அகங்காரம், பொறாமை இவற்றால் அபசாரப்படுதல், இவ்வபசாரங்களுக்குக் காரணம் பொருள் மற்றும் விஷயங்களில் கோபம், பொறாமை கொள்ளல், அவர்களுக்குக் கேடு விளைவித்தல் முதலியனவாகி இவற்றை மிகவும் வருந்தியாகிலும் விலக்க வேண்டும். இவை இல்லாமல் வாழ்வது ஸ்ரீவைஷ்ணவ லட்சணம்.

**எட்டாம் வார்த்தை:** ஆழ்வார்கள் ஈரச்சொல்லாலே நெஞ்சை நெகிழ்க்கை. அதாவது மிண்டர் பாய்ந்துண்ணும் சோற்றை விலக்கி

*நாய்க்கிடுமின் நீரே (திருமாலை 14) பூமிபாரங்களுண்ணும் சோற்றினை வாங்கி புல்லைத்தினிமினே (பெரியாழ் 4:4:3) ஓவாதே நமோ நாராயணா என்று எண்ணாநாளும், சாமவேத நாண்மலர் கொண்டு உன்பாதம் நண்ணாநாள் தத்துறுமாகில் அவை எனக்குப் பட்டினிநாளே (பெரியாதிரு 5:;1:6) என்றும் உன்னை வாசித்தும், கேட்டும், வணங்கி, வழிபட்டும், பூசித்தும் போக்கினேன் போது (நான் திரு 63) என்றும் இருக்கை. எம்பெருமான் திருநாமங்களை வாயால் சொல்லிக்கொண்டும், அன்பாலாட் செய்பவரை ஆதரித்தும், அன்பிலாமூடரை நிந்தித்தும் மொழிந்தருளும் மாறன் (திருவா நூற் 25) என்கிறபடியே ஈரச்சொற்களால் நெஞ்சம் நெகிழ்ந்தபடி வாழ்ந்திருக்கை, ஸ்ரீ வைஷ்ணவ இலட்சணம்.*

***ஒன்பதாம் வார்த்தை:*** *ஆழ்வார்கள் ஈரச்சொல்லாலே நெஞ்சை நெகிழ்க்கும் ஸத்துக்களோடே ஸகவாசம் பண்ணுகை அதாவது வாழ்நாட்பட்டு நின்றிருள்ளீரேல், தொண்டீர் எல்லோரும் வாரீர் என்றும் அடியார் அடியார் குழாங்களைக் கூடுவது என்று கொலோஎன்றும் அந்தமில் பேரின்பத்து அடியாரோடிருந்தமை என்றும் பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே என்றும் இருக்கை. அடியார் பெருமை உணர்ந்து அவர்களோடு தொடர்பு கொண்டு பிரியாமல் அவர்கட்கடிமை செய்து கொண்டு வாழ்வது, ஸ்ரீவைஷ்ணவ லட்சணம்.*

***பத்தாம் வார்த்தை:*** *ஆசார்யன் திறத்தில் செய்த அடிமையை மறந்து செய்யப்பெறாத அடிமைக்கு இழவு பாடனாயிருப்பான். ஆசார்யான் திருவுள்ளத்தைப்பின் சென்ற அனந்தாழ்வானைப்போலவும், எம்பாரைப்போலவும், ஆசார்யான் அநாதரம், அநர்த்தகரம் என்று எச்சானைப்போலவும் இருக்கை. எச்சான் பருத்திக் கொல்லையம்மாள் என்ற வைஷ்ணவரை ஆதரித்து நடந்து கொள்ளாததால் உடையவர் உதாசீனப்படுத்த பின்னர் தவறையுணர்ந்து அம்மாளுக்கும் ஆச்சார்யாருக்கும் தம்மைத் தாழவிட்டு அடிமை செய்து உயர்ந்தார்.*

***எம்பார் வாழித்திருநாமம்***

பூவளரும் திருமகளார் பொலிவுற்றோன் வாழியே.
பொய்கைமுதல் பதின்மர் கலைப்பொருளுரைப்போன் வாழியே.
மாவளரும் பூதூரன் மலர்ப்பதத்தான் வாழியே.

மகரத்திற் புனர்பூசம் வந்துதித்தோன் வாழியே.
தேவு மெப்பொருளும் படைக்கத் திருந்தினான் வாழியே.
திருமலைநம்பிக்கடிமை செய்யுமவன் வாழியே.
பாவையர்கள் கலவியிருள் பகலென்றான் வாழியே.

பட்டர்தொழும் எம்பார் பொற்பதமிரண்டும் வாழியே.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# பட்டர் வைபவம்

நம்முடைய தரிசனத்தில் எம்பெருமானாருடைய பதவினை வகித்தவராய் அவரினும் விஞ்சிய ஞான, வைராக்கியத்தை உடையவரான பட்டர் என்னும் ஆச்சாரியாரது வைபவத்தைக் காண விழைகின்றோம். இவர் கூரத்தாழ்வான் திருக்குமாரர் என்றும் ஸ்ரீ ரங்கநாதனுடைய திருக்குமாரர் என்றும் வழங்கப்படுவார். இவரது பிறப்பு வரலாற்றை நாம் கூரத்தாழ்வான் வைபவத்திலேயே விரிவாகக் கண்டுள்ளோமாதலால் இங்கு குறிக்கப்படவில்லை. கூரத்தாழ்வான் திருக்குமாரர்கள் இருவரின் திருநாமங்கள் முறையே ஸ்ரீபராசரபட்டர், ஸ்ரீ ராமப்பிள்ளை என்ற வேத வியாச பட்டர் என்பதாகும். பெயர் பராசரபட்டர் என்ற போதிலும் பட்டர் என்றே சுருக்கமாக இவ்வாச்சாரியார் வழங்கப்படுவார். பட்டர் என்ற சொல் வேத விற்பன்னர்களையும் ஸ்தோத்திரம் சொல்பவர்களையும் குறிக்கும் பொதுச்சொல். விளையும் பயிர் முளையிலே தெரியும், என்றபடி பட்டர் என்ற பெயருக்குப் பொருத்தமாக இவரும் சர்வஞ்ஞராய் விளங்கிப்புகழ் பெற்று எம்பெருமானாருடைய சத்ய சங்கல்பத்தை நிலைநாட்டினார். இவர் 105 திருநட்சத்திரம் வாழ்ந்திருந்தார்.

இவர் பிறந்த உடனேயே இவரை எம்பெருமானார் பார்க்கு முன்னரே இவருக்கு 'த்வயம்' என்னும் மந்திரம் காப்பாக எம்பாரால் அனுசந்திக்கப்பட்டது என்பதும் எம்பெருமானார் நியமனப்படி எம்பாரே இவருக்கு ஆச்சாரியராக விளங்கினார் என்பதும் முன்னரே கண்டோம். ஆகவே பட்டருக்கு ஆச்சாரிய கிருத்யங்களை எம்பாரே செய்தருளினார். இருந்தும் ஆழ்வானும் பட்டருக்கு ஒரு ஆச்சாரியராயினார் என்பதும் முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளது.

பட்டரை இளங்குழந்தைப் பருவத்திலேயே ஸ்ரீரங்கநாதன் தனது புத்திரனாக அங்கீகரித்துத் தன்னுடைய சந்நிதியிலேயே திருமணத்தூணினருகே தொட்டிலில் விடுவித்து, ஸ்ரீரங்கநாச்சியாரும் தானுமாகச் சீராட்டி வளர்க்க, அங்கனம் வளர்கின்ற அக்குழந்தை தவழ்ந்து சென்று, பெருமாள் அமுது செய்வதற்கு வைத்துள்ள அடிசிலைக் கைகளால் அள்ளி அளைந்து துழாவ பெருமாள் அது கண்டு உகந்தருளி, அந்த இன்னடி சிலை பிரியமாக அங்கீகரிப்பாராம். இப்படி ஸ்ரீ ரங்கநாதன் இவரைப் புத்திர ஸ்வீகாரம் செய்தருளியபடியால், பட்டர் ஸ்ரீ ரெங்கநாத புத்திரர் என்றழைக்கப்பட்டார்.

'வானிட்ட கீர்த்தி வளர் கூரத்தாழ்வான் மகிழ வந்த தேனிட்டதா நம் பெருமாள் குமாரர் பட்டர்' என்று இவரது சிஷ்யரான பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் தமது திருவரங்கக் கலம்பகக் காப்புச் செய்யுட்களில் ஒன்றில் கூறியுள்ளார். பட்டர் தாமும் ஸ்ரீரங்கவாஜஸ்தவத்தில் 17-ம் ஸ்லோகத்தில் 'ஸ்ரீரங்கராஜ கமலாபத லாவிதத்வம் என்ற பதத்தினால் இதனைக்குறிப்பிட்டுள்ளார். இப்பேராசிரியர் சகல சாஸ்திரங்களிலும் அபாரமான பாண்டித்யம் பெற்றவர் என்பதை இவர் அருளிய விஷ்ணு ஸகஸ்ரநாம பாஷ்யம் ஒன்று கொண்டே உணரலாம். இவர் கவித்திறமையில் ஒத்தாரும் மிக்காரும், இல்லாதவர் என்பதை இவரது ஸ்ரீரங்கராஜஸ்தவம் ஸ்ரீ குணரத்நகோசாதிகளால் உணரலாம். அருளிச்செயல்களில் அற்புதமான விசேஷார்த்தங்களை அருளிச் செய்வர் என்று பெரிய வாச்சான் பிள்ளை முதலானோர் அடிக்கடி கூறுவதுண்டு. உதாரணமாக ஒன்றை மட்டும் காணலாம்.

திருநெடுந்தாண்டகத்தில் 'அறுகாலச் சிறுவண்டே' தொழுதேனுன்னை' என்ற பாசுரத்தில் வண்டுக்கு ஆறுகால்கள் உள்ளமையை எதற்காகச் சொல்லலாயிற்று என்பதை விளக்கப்புகுந்து இரண்டு காலாகவும், நாலு காலாகவும் இன்றி விரைந்து செல்லுகைக்கு உறுப்பாக ஆறு கால்கள் இருக்கப்பெற்ற பாக்யம் என்னே என்று வியந்து கூறுவதாகச் சிலர் பொருள் கூறுவார்கள். இந்தக்கூற்று அவ்வளவு பொருத்தமானதாகத் தெரியவில்லை. வண்டு பறந்து செல்வதற்குச் சாதனம் சிறகேயன்றிக் கால்களில்லை. ஆகவே ஆறுகாலே என்ற அடைமொழிக்கு அவ்வாறு கருத்துரைத்தல் பொருத்தமில்லை என்று பட்டர் அருளிச்செய்வது. தொழுதேனுன்னை என்று தொடர்ந்து கூறுவதால் என் தலையில் வைப்பதற்கு ஆறுகால்கள் உள்ளனவே என்று வியந்து சொல்கிறபடியாகும். தூது சென்று திரும்பி வந்தால் வண்டின் கால்களைத் தலையில் வைத்துக்கொண்டு கூத்தாடிக் குதூகலித்திருப்பதனால் அதற்குப் பொருத்தமாக இவ்வாறு கருத்துரைப்பதாகும்.

வழக்கமாக வண்டாகச் சொல்வது ஆச்சாரியர்களையே. ஆச்சாரியனும், அவருடைய தேவியாரும் அவர்களுடைய திருக்குமாரரும் ஆக மூவருக்கும் சேர்த்து ஆறு திருவடிகளாதலால் அக்கருத்துத் தோன்றவே 'அறுகாலச் சிறுவண்டே' என்றது என்பது பட்டர் வியாக்யானம். கொங்கார் பூந்துழாய்முடி என்குடக் கூத்தற்கென் தூதாய் நும்கால்கள் என் தலைமேல், எழுமிநோநுமரோடே' என்று திருவாய்மொழிப் பாசுரத்துக்கு மிகவும் பொருத்தமாக இருக்கிறது இவ்விளக்கம்.

*பட்டருடைய அதிஞான பக்தி வைராக்யங்களை விளக்கும் வேறொரு நிகழ்ச்சியும் சொல்லப்படுவதுண்டு. அவர் ஐந்து வய துப்பாலகனாய் தெருவில் விளையாடிக் கொண்டிருக்கையில் ஒரு வன் 'ஸர்வஜ்யபட்டன் வந்தான் என்று எக்காளமூதிக்கொண்டு வர, உடையவர் ஆழ்வான் ஆண்டான் போன்றவர்கள் இருக்க இவன் யார் தன்னைச் சர்வஜ்யபட்டன் என்று சொல்வது என்று மனதில் எண்ணி இருகைகளிலும் மண்ணை அள்ளிக்கொண்டு அவனைப் பார்த்து நீ ஸர்வஜ்யனன்றோ? இது எத்தனை சொல்? என்று கேட்க அவன் ஒன்றும் சொல்லமாட்டாது வெட்கித்தலைகுனிய இது ஒருகைப்புழுதி மண் என்று கூடத்தெரியாத நீ என்ன ஸர்வஜ்யன் என்று அவமானப்படுத்தி அனுப்பினார் என்பது கர்ணபரம்பரைச் செய்தி.*

*திரிபுவன வீர தேவராயன் என்ற அரசன் பட்டர் வைபவத் தைக் கண்டும், கேட்டும், அவரிடத்து மதிப்புக்கொண்டு அவரைச் சன்மானிக்க எண்ணியவனாய் பட்டரே, அரண்மனைக்கு வந்து போம் என்றழைக்க பட்டர் அதற்குச் சிறிதும் இணங்காமல் 'நம் பெருமாள் அஞ்சல் என்ற கை மறித்தாலும் அவர் வாசலொழிய வேறு போக்கிடமுண்டோ எமக்கு என்று சொல்லி மறுத்துவிட் டார். தன்னைத் தஞ்சடைந்தவர்களுக்கு ஆவனவெல்லாஞ்செய்து, அவர்களைப் பாதுகாத்தலையே விரதமாகக் கொண்டு அவர்க ளுக்கு அபயமளிப்பவனான பரமபுருஷனுக்கு அடிமைப்பட்ட நாம் சில சிற்றரசரின் வாசலிலே கிடந்து துவளக்கூடவோ மல் லோம் என்ற அவரது திண்ணிய தீர்மானத்தையே காட்டுகிறது இந்தச்செயல்.*

### *பட்டர் வாழித்திருநாமம்*

தென்னரங்கர் மைந்தனெனச் சிறக்க வந்தோன் வாழியே.
திருநெடுந்தாண்டகப் பொருளைச் செப்புமவன் வாழியே.
அன்னவயல் பூதூரானடி பணிந்தோன் வாழியே.
அனவரதம் எம்பாருக்காட் செய்வோன் வாழியே.
மன்னுதிருக்கூரனார் வளமுரைப்போன் வாழியே.
வைகாசியனுடத்தில் வந்துதித்தோன் வாழியே.
பன்னுகலை நால் வேதப்பயன் தெரிவோன் வாழியே.
பராசரனாம் சீர்பட்டர் பாருலகில் வாழியே.

***ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்***

# நஞ்சீயர் வைபவம்

இப்பெரியார் ஆதியில் அத்வைதியாக இருந்தவர். மாதவாச்சா ரியார் என்பது இவரது பூர்வீகத்திருநாமம். வேதாந்தி என்பது இவரது சிறப்புத் திருநாமம். ஆறு சமயங்களுக்கு ஆறு ஆசனமிட்டு நிகரற்றவித்வானாக மேல்நாட்டில் எழுந்தருளியிருந்தார். பல பிற மத வித்வான்களைத் திருத்திப் பணிகொண்ட உடையவர் இவரை யும் திருத்திப் பணிகொள்ள விரும்பினார். ஆனால் அவரது வாழ்நாளில் அது முடியாமற்போகவே தனது அந்திமகாலத்தில் தனது தர்சன வாரிசான பட்டரிடம் மேல்நாட்டிலுள்ள வேதாந்தி யைத் திருத்திப் பணிகொள்வீர் என்று நியமித்தார். பட்டரும் அதனை நிறைவேற்றுவதற்குச் சமயம் பார்த்துக் காத்திருந்தார்.

இந்நிலையில் மேல் நாட்டிலிருந்து வந்த ஒரு அந்தண யாத்ரிகர் பட்டரிடம் மேல்நாட்டிலும் உம்மைப்போலவே சகல கலைஞானங்களும் அறிந்த வேதாந்தி ஒருவர் இருக்கிறார் என்று கூறினார். பின்னர் அவர் திரும்பித் தன் ஊருக்குச் சென்றபொழுது வேதாந்தியிடம், 'ஸ்ரீரங்கத்தில் பட்டர் என்றொரு வித்வான் இருக் கிறார். அவரது பக்தியும் ஞானமும் சொல்லிலடங்கா. அவரது சிஷ்யர்களின் பெருமை அளவிட முடியாது என்று கூறினார். வேதாந்தி, 'அவர் நமக்கு ஒத்த வித்வான்தானோ? என்று கேட்க, அவர் உம்மிலும் மேம்பட்டவர் என்று யாத்ரிகர் சொல்லவே, நம்மில் மிக்கார் யாருமில்லையென்றிருந்தோம். பட்டர் நம்மிலும் மிக்கார் என்று சொல்கிறாரே என்று கவலையோடு இருந்தார். இந்தச்சம்பவத்தை அந்த யாத்ரிகர் திரும்ப ஸ்ரீரங்கம் வந்தபொழுது பட்டரிடம் தெரிவிக்கப் பட்டர் அவரிடம் நமக்குத் திருநெடுந் தாண்டக சாஸ்திரம் தெரியும் என்று சொன்னீரா என்று கேட்க, அந்தணரும் அப்படியே சொல்கிறேன் என்று வேதாந்தியிடம் சென்று பட்டருக்குத் திருநெடுந்தாண்டகசாஸ்திரம் அசாதாரணம் என்று கூற அந்த சாஸ்திரம் இன்னதென்றறியாத வேதாந்தி அது என்னவோ என்று வியந்து கொண்டிருந்தார்.

இவ்வாறு சிலநாள் சென்றபின் உடையவர் நியமனத்தை நிறைவேற்ற வேண்டி வேதாந்தியைத் திருத்திப் பணிகொள்ள நம் பெருமாள் ஸந்நிதியிலே நியமனம் பெற்றுப் கோலாகலமாகப் பரிவாரங்களோடு புறப்பட்டு, மேல்நாட்டில் எழுந்தருளிச் சிறுபுத் தூர் என்ற இடத்திற்கு அருகில் செல்கையில் அங்கு திருமலையிலி ருந்து உடையவர் சிஷ்யர் அனந்தாழ்வான் வந்து பட்டரைச்

சேவித்து, அவர் காடும், மலையும் கடந்து வந்த காரணம் கேட்க, பட்டரும் வேதாந்தியைத் திருத்துவதற்காகத் தன்னை உடையவ ரும் நம் பெருமாளும் நியமித்திருப்பதாகவும் அதை நிறைவேற்றத் தான் வந்திருப்பதையும் கூறினார். அதைக்கேட்ட அனந்தாழ்வான் மிகவும் மகிழ்ந்து பட்டரையும் அவரது பரிவாரங்களையும் திரு நாராயணபுரத்திற்கு அழைத்துச்சென்று அங்கு மங்களாசாசனம் செய்வித்தபின் வேதாந்தி இருக்கும் ஊருக்கும் அழைத்துச் சென் றார்.

சிஷ்ய கோஷ்டிகளுடனும், பரிவார சேனைகளுடனும் இவர் எழுந்தருளுவதைக்கண்ட அங்குள்ள அந்தணர்கள் பட்டரிடம் நீர் இப்படி வந்தால் வேதாந்தியைக் காண இயலாது. அவரது சிஷ்யர் கள் உம்மை வாசலிலேயே நிறுத்தி அனுப்பிவிடுவார்கள். ஆனால் வேதாந்தி மிகப்பெரிய செல்வராதலால் தினம் பிராமண போஜனம் செய்விக்கிறார். அங்கு புசிக்க வருகிறவர்களுடன் கலந்து தேவரீ ரும் சென்றால் அவரைக்காணலாம் என்று வழி சொன்னார்கள். அதன்படியே பட்டரும் போஜன சாலைக்குள் சென்று பந்தியில் சென்று சேராமல் வேதாந்திகள் பக்கத்திலேயே நிற்க, அவரும் அவர் வந்த காரணத்தை வினவ பட்டரும் 'நான் அன்ன பிட்சைக்கு வரவில்லை. உம்முடனே தர்க்கபிட்சை கேட்டு வந்துள்ளேன்' என்றார்.

இதைக்கேட்ட வேதாந்தி திடுக்கிட்டு 'நீர்தாம் பட்டரோ' என்று வினவ இவரும் 'ஆம்' என்ன, இவருடைய வித்யானுபவம் காண்போமென்று தீர்மானித்து இருவரும் ஒருவருக்கொருவர் சளைக்காமல் ஒன்பது நாள் தர்க்கித்தனர். பத்தாம் நாள் பட்டர் அத்வைதத்தைக் கண்டித்து, விசிஷ்டா த்வைதத்தை ஸ்தாபித்துத் திருநெடுந்தாண்டகபாசுரத்தின் விழுமிய பொருளையும் அற்புத மாக விளக்கியருள, வேதாந்திகள் மிகவும் மகிழ்ந்து கூப்பிய கரங்களுடன் நின்று உம்மை மனிதராகவே எண்ணியிருந்தேன். உமக்கும் நம்பெருமாளுக்கும் வாசி (வேறுபாடு)யில்லை. 'உறங் கும் பெருமாள் அவர். உலவும் பெருமாள் நீர்' என்று பலவாறு துதித்து அடியேனை அங்கீகரித்தருள வேண்டும் என்று விண்ணப் பம் செய்ய, பட்டரும் தம் காரியம் பலித்ததென்று மகிழ்ந்து, வேதாந்திகளுக்கு பஞ்சஸமஸ்காரம் பிரசாதித்து, மகாபாகவதோத்த மராக்கி, எம்பெருமானார் தர்சனத்தை நிர்வகித்துப் போரீர் என்று நியமித்துவிரைந்து திருவரங்கம் திரும்பி அன்று மாலையே நம் பெருமாள் திருமுன்பு வணங்கி நிற்க, பெருமாளும் 'பட்டரே நீர்

போன காரியம் என்ன ஆயிற்று' என்று வினவ, பட்டரும், வேதாந்திகள் தேவரீருடைய திருவடிகட்கு அடியவராயினார் என்று கூறி நடந்தவற்றையெல்லாம் கூறவே 'எங்கனே' என்று கேட்க திருநெடுந்தாண்டகத்தைத் திருவோலக்கத்திலே பட்டர் உபதேசித்தார். அன்று தொட்ஙகி இன்றுவரை நம் பெருமாள் ஸன்னிதியில் திரு அத்யயன உத்ஸவத்தொடக்கத்திற்கு முன்னால், திருநெடுந் தாண்டகத் திருநாள் என்று மிகச்சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. பின்னர் பட்டர் இக்கைங்கர்யத்தை அரையருக்கு அளித் தாராம்.

இது இங்கனமிருக்க வேதாந்திகள் தன் தேசத்திலே திருமாலடி யார்களைப் பூசித்து வரும் நாளில் சம்சாரத்தில் விரக்தி ஏற்பட்டு, பட்டர் திருவடிகளை ஆஸ்ரயித்து (சரணடைந்து) சந்யாசதர்மம் பூண்டு அவரது தாசனாக வாசம் செய்ய விரும்பி, கோயிலுக்கு எழுந்தருளும் வழியில் சிறுபுத்தூரிலே அனந்தாழ்வானைக்கண்டு, அவர் ஆட்சேபித்ததையும் புறக்கணித்து கோயிலுக்கு எழுந்தருளிய தைக் கண்ட பட்டர் மிகவும் உகந்தருளி, நம் ஜீயர் வந்தார் என்று சொல்லித்தம் திருவடிகளில் விழுந்து கிடக்கும் வேதாந்திகளை எடுத்தணைத்து அவருக்கு சகல அர்த்தங்களையும் ஓதுவித்துப் பிரஸாதித்தருள, ஜீயரும் பட்டரையன்றித் தேவு மற்றறியேன் என்றிருந்தார். பட்டர் நம்முடைய ஜீயர் என்று சொல்லி அணைத் துக்கொண்டதால் அன்று முதல் வேதாந்திகளுக்கு நஞ்சீயர் என்ற பெயர் வழங்கலாயிற்று. உபதேச ரத்ன மாலையில்

> நம்பெருமாள், நம்மாழ்வார், நஞ்சீயர், நம்பிள்ளை
> என்பர். அவரவர் தம் ஏற்றத்தால் அன்புடையோர்
> சாற்றுதிரு நாமங்கள் தாஎனன்று நன்னெஞ்சே
> ஏற்று அதனைச் சொல்லி நீ இன்று (உ.தே.மா. 66)

என்ற பாசுரம் அனுசந்திக்கப்படுகிறது.

நஞ்சீயருடைய ஆச்சாரியபக்தி மிகவும் போற்றுதற்குரியது. ஒரு கைசிக ஏகாதசியன்று பட்டர் திருவீதி அலங்கரிக்கப் புறப்பட் டவாறே நஞ்சீயரும் ஸ்ரீபாதம் தாங்கப்புக, அங்குள்ளோர் திரிதண்ட தாரியான (சந்யாசி) உமக்கு இது தகாது என்று பட்டர் முதலானோர் ஆட்சேபிக்க எனக்கு உறுதுணையாகி என்னை ரட்சிக்க வேணும் என்ற பொருளுடைய 'ஸகாமா கோபாய' என்ற மந்திரம் சொல்லி அளிக்கப்பட்ட இந்த முக்கோல் எனக்கு விரோதியாமாகில் எனக்கு அது வேண்டாம் என்று தூரவீசப்போக, எல்லோரும் அவரது பக்தி

விசேஷத்தைக்கண்டு வியந்தனர். பட்டர் ஒரு நாள் பகலெல்லாம் வழிநடந்த களைப்பால் ஒருமரத்தடியில் நஞ்சீயர் மடியில் தலையை வைத்துக் கண்வளர்ந்தருள இரவு முழுவதும் அசையா மல் இருந்தார் என்பதும் இவரது ஆச்சார்ய பிரேமத்தின் சிறப்பினை நன்கு விளக்குகிறது.

நஞ்சீயர் வெகுநாள்வரை அருளிச்செயல்களின் வாசனையை யும் அறியாதவராயிருந்தும் பட்டரால் தடுத்தாட்கொள்ளப்பட்ட பின்னர் அவரது அருள் நோக்கால் திவ்யப்பிரபந்தங்களை ஓதித்த ரித்து, அவற்றின் விசேஷார்த்தங்களை நிர்வகிப்பதில் நல்ல விரக ராய் இருந்தார் என்பது அதிசயிக்கத்தக்கதாகும். சிறிய திருமடலில் 'அவட்கு மூத்தோனை வெந்நரகம் சேராவகையே சிலை குனித் தான்' என்ற பதத்திற்கு நஞ்சீயர் சாதாரணப்பொருள் கூற ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் இந்தப்பதத்திற்கு பட்டர் வெகு அழகாகப் பொருள் கூறுவர் என்று சொல்லி அவர் கூறும் பொருளைக்கூறவே, அதைக் கேட்ட ஜீயர், இவ்வாறு பொருள் கூற வல்லபட்டரை சேவிக்க வேண்டும் என்ற காதல் கிளர்ந்ததாலேயே அவர் ஸ்ரீரங்கத்திற்கு வந்து பட்டரைக்கண்டு அவர் திருவடியில் சரணடைந்தார் என்று கூறுவர்.

இவரது திருஅவதாரஸ்தலம் மேல்நாட்டில் திருநாராயணபு ரம். திரு நக்ஷத்திரம் விஜய வருஷம் பங்குனிமாதம் உத்தரம். குலம், வடமான். திருநாமங்கள் வேதாந்தி, நிகமாந்த யோகி, ஸ்ரீமாதவர், நஞ்சீயர். இருப்பிடம் கோயில், ஆசார்யர் பெரியபட் டர். திருவாராதனம் கிருஷ்ணவிக்ரகம் சிஷ்யர் நம்பிள்ளை. இவர் செய்தருளின கிரந்தங்கள். திருவாய்மொழிக்கு வியாக்யானம் 9000 படி. திருப்பாவைக்கு வியாக்யானம் ஈராயிரப்படி திருப்பல் லாண்டு, கண்ணிநுண்சிறுத்தாம்பு திருவந்தாதிகளுக்கு உரை, ரஹஸ்யத்ரய விவரமான நூற்றெட்டு, ஸரணாகதிகத்ய வியாக்யா னம், திருவாய்மொழி நூறுரு வியாக்யானம் செய்கையாலே நஞ்சீ யர், ஸதாபிஷேகம் பண்ணினார் என்பது பிரசித்தம். இவற் தொண்ணூற்றஞ்சு திருநட்சத்திரம் வாழ்ந்திருந்தார் என்பன இவ ரைப் பற்றிய முக்ய குறிப்புகள்.

### வாழித்திருநாமம்

தெண்டிரை சூழ் திருவரங்கம் செழிக்க வந்தான் வாழியே.
சீமாதவனென்னும் செல்வனார் வாழியே.
பண்டை மறைத்தமிழ்ப் பொருளைப் பகரவந்தோன் வாழியே.

பங்குனியில் உத்தரநாள் பாருதித்தான் வாழியே.
ஒண்டொடியாள் கலவிதன்னை ஒழித்திட்டான் வாழியே.
ஒண்பதினாயிரப் பொருளை ஓதுமவன் வாழியே.
எண்டிசையும் சீர்பட்ட ரிணையடியோன் வாழியே.
எழில் பெருகும் நம் ஜீயர் இனிதூழி வாழியே.

*ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்*

# நம்பிள்ளை வைபவம்

நம்பிள்ளைக்குத் திருவவதாரஸ்தலம் சோழமண்டலத்தில் நம்பூர். திரநக்ஷத்திரம் பிரபவ வருஷம் கார்த்திகை மாதம் கிருத்திகை. குலம் - வடமான் குடிநம்பூர். இவரது திருநாமங்கள் வரதராஜன், திருக்கலிகன்றிதாஸர், சுலிவைரிதாஸர், நம்பிள்ளை, லோகாசார் யார், ஜகதாசார்யார், உலகாசிரியர் முதலியன. தேவியர்கள் - ஸ்ரீரங்கநாச்சியாரும், ஆண்டாளுமாகும். இருப்பிடம். கோயில் திருவாராதனம் - வயலாலி மணவாளர். ஆசார்யர் - நம் ஜீயர் குமாரர் - ராமானுஜாசார்யார்.

## நம்பிள்ளை வைபவம்

நஞ்சீயர் சிஷ்யர்களில் முதன்மையானவர் நம்பிள்ளை. அவரது இயற்பெயர் நம்பூர் வரதராஜாசாரியார் என்பது. அவருக்கு நம்பிள்ளை என்ற பெயர் வரக்காரணம் வருமாறு:

நஞ்சீயர், பட்டர் நியமனப்படி (உத்தரவின்) திருவாய்மொழியின் அர்த்தங்களை உபந்யாசம் செய்வதையே பொழுதுபோக்காகக் கொண்டு வாழ்ந்து வந்தார். திருவரங்கம் பெரியகோயிலில் அவரது உபந்யாசத்தைக் கேட்க வருபவர்களில் நம்பூர் வரதராஜாசார்யரும் ஒருவர். இவர் நீறுபோத்த நெருப்புப்போல இருந்தபடியால் இவருடைய பக்திஞான வைராக்யம் போன்ற பெருமைகளை யாரும் அறியாதிருந்தனர்.

இப்படியிருக்கையில் பட்டர், நஞ்சீயரிடம் திருவாய்மொழிக்குத் திருக்குருகைப்பிரான் பிள்ளானது (எம்பெருமானார் ஞானபுத்திரன்) ஆறாயிரப்படி வியாக்யானத்தை விட விரிவாக ஒரு வியாக்யானமிடும்படி கட்டளையிட்டபடியால், அதைச்செவ்வையாகப் பட்டோலை எடுக்கவல்லார் யாரென்று விசாரிக்க; அவரது அந்தரங்கர்கள் நம்பூர் வரதராஜாச்சாரியார் என்றொருவர் ஸ்வாமியின் காலட்க்ஷேப கோஷ்டிக்குத்தவறாது வருகிறார். அவர் நல்ல விரகர், எழுத்திலும் வல்லவர். அவரைக்கொண்டு இப்பணியை நிறைவேற்றிக்கொள்ளலாம் என்றனர். ஆகவே அவரை அழைத்து ஆராய்ந்து பார்க்கையில் அவரது திறமை தெரியவந்தது. அதனால் மகிழ்ந்த ஜீயர் அவரிடம் கருணை காட்டி தம்முடைய ஒன்பதினாயிரப்படியை வரியடைவே அவருக்கு விளக்கிக்காட்டி அதை எழுதித் தரும்படி ஸ்ரீகோசத்தை அவரிடம் கொடுத்தார்.

அதைப்பெற்றுக்கொண்டு தம் ஊருக்குப் போகையில் வழி யில் காவேரியில் நீந்திச் செல்கையில் அந்த ஸ்ரீகோசம் நெகிழ்ந்து விழுந்து வெள்ளத்தில் போய்விடவே மிகவும் வருந்தியவர், அந்த வியாக்யானத்தைச் ஜீயர் சொல்லக் கேட்டிருந்தபடியால் அவரது கிருபையால், அவரது திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டே தம் நினைவிலிருந்தே பட்டோலை எடுத்து அந்த ஸ்ரீகோசத்தை ஆசாரி யரிடம் சமர்ப்பித்தார். நான் கொடுத்த ஏடு எங்கே? என்று நஞ்சீயர் கேட்கவே நடந்தவற்றை விவரிக்க வேண்டியதாயிற்று. பின்னர் நஞ்சீயர் ஸ்ரீகோசத்தை விரித்துப் பார்க்கையில் தாம் அருளிச் செய்த ஸ்ரீ சூக்திகள் விடாமலும், தம்மிடம் அவர் கேட்டிருந்த அர்த்த விசேஷங்கள் ஈடும் பொருத்தமாக அமைந்தும் விரிவுமில்லாமல் இருந்த அழகுக்கு மிகவும் உகந்து 'வாரீர் நம்முடைய பிள்ளையே' என்று எடுத்தணைத்துக் கொண்டார். அது முதல் நம்பிள்ளை என்றே இவர் அழைக்கப்பட்டார். திருக்கலிகன்றிதாசர் என்பதும் இவருக்கு நஞ்சீயர் சாத்தின திருநாமமாகும். திவ்யப் பிரபந்தங்க ளுக்கும் இதிகாச புராணாதிகளுக்கும் ஆழ்ந்த இன்சுவையே வடி வெடுத்த அர்த்தங்களை அருளிச் செய்வதில் இவருக்கு ஒத்தாரும் மிக்காரும் இல்லை என்று பெரிய வாச்சான் பிள்ளைபோன்ற பிரபல வைஷ்ணவ சீலர்களும் கூறியுள்ளனர்.

லோகாச்சார்யார் என்ற திருநாமமும் இவருக்குண்டு. இவர் கோயிலில் வாழ்ந்த காலத்தில் சகல ஸ்ரீவைஷ்ணவர்களும் இவரு டைய சீடர்களாகி ஸகல அர்த்தங்களையும் கேட்டு வந்தனர். நம் பெருமாள் கோஷ்டியோ, நம்பிள்ளை கோஷ்டியோ என்னும்படி ஸம்பத்துடன் வாழ்ந்து வந்தார். அப்பொழுது முதலியாண்டான் பேரனான கந்தாடை தோழப்பர்தாம் வித்வானாயிருந்தும் தம்மிடம் யாரும் பாடங்கேட்க வரவில்லையே என்ற பொறாமையில் இழிந்த வார்த்தைகளால் பரிபவித்து விட்டுத் தன் வீட்டிற்குச் சென்றார். வீட்டில் அவருடைய மனைவியார் இப்படியும் ஆச்சாரி யாரை நிந்திப்பீரோ? உமக்கு உய்வும் உண்டோ என்று பலவுஞ் சொல்லி அவரது தவறை உணர்த்த தோழப்பரும் நம்பிள்ளையிடம் மன்னிப்புப் பெறவேண்டுமென்று காத்திருந்தார்.

அதற்குள் நம்பிள்ளை தாமே தோழப்பர் வீட்டிற்குச்சென்று தேவரீருடைய திருஉள்ளம் வருந்தும்படி நடந்துகொண்ட அடியே னுக்கு தேவரீருடைய மன்னிப்பைத்தவிர வேறு கதியில்லை என்று அவர் திருவடிகளில் விழுந்து வேண்டவே, தோழப்பர் அந்த சீல குணத்திற்கு வியந்து 'ஸ்வாமி இதுநாள் வரை நான் தங்களைச்

*சில பேர்களுக்கே ஆச்சாரியார் என்றிருந்தேன். இப்போது லோகத் துக்கெல்லாம் தேவரீர் ஆச்சாரியார் என்று கொண்டேன் என்றார். அது முதல் லோகாசார்யார் என்ற திருநாமமும் வழங்கி வந்தது.*

துன்னுபுகழ் கந்தாடை தோழப்பர் தம்முகப்பால்
என்ன உலகாரியனோ என்றுரைக்க - பின்னை
உலகாரியனென்னும் பேர் நம்பிள்ளைக்கு ஓங்கி
விலகாமல் நின்றது என்றும் மேல் (உ.தே.மா. 51)

*என்று மணவாளமாமுனிகள் அருளிய உபதேச ரத்னமாலைப் பாசுரம் கூறுகிறது.*

*நம் பிள்ளைக்குப் பல சிஷ்யர்கள் இருந்த போதிலும், பின் பழகிய பெருமாள் ஜீயர் பக்தி ஒப்பற்றது. உபதேச ரத்னமாலையில்*

பின்பழகராம் பெருமாள்ஜீயர். பெருந்திவத்தில்
அன்பதுவுமற்று மிக்க ஆசையினால் - நம்பிள்ளைக்கு
ஆன அடிமைகள் செய் அந்நிலையை நன்னெஞ்சே
ஈனமற எப்பொழுதும் ஓர் (உ.தே.மா.66)

*என்று கூறுகிறார். இப்பேராசிரியரிடம் சகல அர்த்தங்களையும் கேட்டுத்தரித்த வடக்குத் திருவீதிப்பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளையும் உலகுக்குச் செய்திருக்கும் உபகாரம் நிகரற்றது.*

*பட்டர் ஸந்ததியில் தோன்றிய மகா வித்வான் நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டரும், தோழப்பரைப்போலவே பொறாமை கொண்டிருந்தார். அவர் ஒரு நாள் ராஜசபைக்குச் சென்றிருந்தபொழுது, அந்த ராஜா 'ஸ்ரீராமன் தன்னுடைய பரத்வத்தை மறைத்துக் கொண்டு மனிதனாக அவதரித்திருக்கையில் ஜடாயுவுக்கு முக்தியளித்தது எவ்வாறு பொருந்தும் என்று கேட்க விடையளிக்க முடியாமல் ஆலோசிக்க வேண்டியதாயிற்று. அந்நேரத்தில் அங்கு வந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவரிடம் இந்தக் கேள்விக்கு நம்பிள்ளை எப்படிப் பதிலளிப்பார் என்று கேட்டார். ஏனெனில் அந்த ஸ்ரீ வைஷ்ணவர் நம்பிள்ளையிடம் அந்த விஷயங்களை ஏற்கெனவே கேட்டறிந்தவர். அவர் 'ஸத்யேக லோகாந் ஜயதி' என்ற ஸ்லோகத்தைக் கொண்டு பதிலளிப்பார் என்று சொல்ல, அதை மனதில் நன்றாக வாங்கிக்கொண்டு ராஜாவுக்கு விடையளித்தார். அரசனும் மிகவும் மகிழ்ந்து விசேஷமாகப் பரிசுகள் வழங்கினான். அவற்றை நம் பிள்ளை திருவடிகளில் அர்ப்பணித்து தேவரீருடைய சிந்திப்போன ஸ்ரீ சூத்திகளில் ஒரு சொல்லுக்குப் பெற்ற பரிசு இது. 'இதைத்*

*தாங்கள் அங்கீகரித்து என்னை வாழ்விக்க வேண்டுமென்று பணிவுடன் வேண்டினார். நம் பிள்ளையும் அவரையும் தம் கோஷ்டியில் சேர்த்துக்கொண்டு உய்வித்தார். நடுவில் திருவீதிப்பிள்ளை நம்பிள்ளையின் விஷயார்த்தங்களை விளக்கி ஒரு லட்சம் கிரந்தம் எழுதியிருந்தார். ஆனால் அதை நம்பிள்ளை பிரசாரத்திற்கு அனுமதிக்கவில்லை. நம் பிள்ளையின் அர்த்த விசேஷங்கள் திவ்யப்பிரபந்த வியாக்யானங்களிலும் வார்த்தாமாலை முதலியவற்றிலும் பாக்யசாலிகளால் உய்த்து உணரப்படுகின்றன.*

*நம்பிள்ளை வைபவத்தை ஸ்ரீபாதத்து முதலிகள்*

இந்திரன் வார்த்தையு நான்முகன் வார்த்தையுமீசனுடன்
கந்தன் சொல் வார்த்தையுங்கற்பவ ராரிந்தக் காசினிக்கே
நந்தினமுத்தெறி நம்பூர் வரதர் தம் மாளிகையிற்
சிந்தின வார்த்தை கொண்டே சில நாடு திரைகொள்ளுவரோ

*என்று அனுசந்தித்தனர்.*

குரு *பரம்பராப்ரபாவம் ஸம்பூர்ணம்*

வாழிபதின்மருடன் ஆண்டாள் மதுரகவி
வாழிய நாதன்முதலா மாமறையோர் - வாழி
யொருக் கோலரை நெருக்கி வோட்டு மெதிராசன்
திருத்தாள் வணங்கினார் சீர்.

## *வாழித்திருநாமம்*

தேமருவும் செங்கமலத்திருத்தாள்கள் வாழியே.
திருவரையில் பட்டாடை சேர்மருங்கும் வாழியே.
தாமமணி வடமார்பும் புரிநூலும் வாழியே.
தாமரைக்கை இணையழகும் தடம்புயமும் வாழியே.
பாமருவுந் தமிழ்வேதம் பயில்பவளம் வாழியே.
பாடியத்தின் பொருள்தன்னைப் பகர்நாவும் வாழியே.
நாமநுதல் மதிமுகமும் திருமுடியும் வாழியே.
நம்பிள்ளை வடிவழகும் நாடோறும் வாழியே.
மாதகவா வெவ்வுயிர்க்கும் வாழ்வளித்தான் வாழியே.
மதிஅரங்க ரோலக்கம் வளர்த்திட்டான் வாழியே.
நாதமுனி யாளவந்தார் நலம்புகழ்வோன் வாழியே.

நம்பிள்ளை திருவடிகள் நாடோறும் வாழியே.
காதலுடன் நஞ்சீயர் கழல் தொழுவான் வாழியே.
கார்த்திகை கார்த்திகை யுதித்த கலிகன்றி வாழியே.
போதமுடன் ஆழுவார் சொற்பொருளுரைப்போன் வாழியே.
பூதூரன் பாடியத்தைப் புகழுமவன் வாழியே.

*ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.*

## *வடக்குத் திருவீதிப்பிள்ளை வைபவம்*

*பெரியாழ்வாரைப்போல ஆனியில் சோதியில் அவதரித்தவர் இவர். ஸ்ரீவசன பூஷணம், முமுக்ஷுப்படி முதலிய அஷ்டதச ரகஸ்யங்களை அருளிச்செய்த பிள்ளை லோகாசாரியருக்கும் ஆச் சார்ய ஹிருதயம் அருளிச்செய்த அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருக்கும் திருத்தந்தையார் இவர். இவருடைய இயற்பெயர் ஸ்ரீ கிருஷ்ண மஹாகுரு என்பது. இந்தத் திருநாமமே பெரியவாச் சான் பிள்ளை என்ற மற்றொரு ஆச்சாரியருக்கும் இருந்ததால், நம்பிள்ளை சிஷ்யர்களான இவர்களுக்குள் வாசி (வித்யாசம்) தெரிவதற்காக இவர் வடக்குத் திருவீதிப்பிள்ளை என அழைக்கப் பட்டார். திருவரங்கம் பெரிய கோயிலில் வடக்குத் திருவீதியில் வாழ்ந்து வந்ததே இப்பெயர் வந்ததற்குக் காரணம். இவருடைய வாழ்க்கை வரலாறு பற்றி யாரும் விசேஷமாகக் குறிப்பிடவில்லை. ஆனால் இவருடைய ஞானப்பெருமைகள் மிகப்பல.*

*பகவத் விஷயமென வழங்கப்படுகிற (திருவாய்மொழி வியாக்யானமான) ஈடு 36,000 படியை இவரே பட்டோலை கொண்டவர். உபதேச ரத்ன மாலையில்*

தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை,
வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை
இந்த நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது

*ஈடு முப்பத்தாறாயிரம் என்றருளிய பாசுரப்படி நம் பிள்ளையின் வியாக்யானங்களைக் கேட்டுத் திருஉள்ளத்தில் தரித்துக்கொண்டி ருந்து அற்புதமாகப்பட்டோலை கொண்ட பெருமை வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கு அசாதாரணமானது.*

*நம் பிள்ளை அருளிய ஈடு சொல்நயமும் பொருளாளமும் உடையது. ஈட்டின் (பங்க்திஸந்நிவேசம்) விளக்கம் வேறு எந்தக்கி ரந்தத்திலும் கண்டறியாததும் காணமுடியாததுமான அத்வீதிய*

விலக்ஷண சந்தர்ப்பம். தமிழ் வித்வான்களும் ஸமஸ்கிருத வித்வான்களும் தனித்தனியே உள் குழையத்தக்க உயர்ந்த ரசனாவிசேஷம். ககனம், ககநாகாரம், ஸாகரஸ் ஸாக ரோபம்' என்கிறாப் போல ஈட்டுக்குஉவமை ஈடே. பெரிய புலவர்கள் பத்தெட்டு வரிகளில் எழுத வேண்டியவற்றை ஒரு வரியில் கம்பீரமாக அடக்கி எழுதும் திறன் இவ்வாசிரியர்க்கே அமைந்தது.

மணவாள மாமுனிகள் இவ்வாசிரியரை வள்ளல் என்று குறிப்பிடுகிறார். திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிய ஆறாயிரப்படி வியாக்யானம் நஞ்சியர் அருளிய ஒன்பதினாயிரப்படி வியாக்யானம் இருந்தபோதிலும் ரசிகர்களுக்குப் பரிபூரணத்திருப்தியை விளைவிக்கப் போதாதவை. நம்பிள்ளை தம் நல்லருளால் ஏவிவிட பெரியவாச்சான் பிள்ளையருளிய 24,000படி வியாக்யானம் சிறிது விரிவாக இருந்தாலும் 36,000 படிக்குமுன் அதுவும் தரங்குறைந்தது. ஏனெனில் முன்னால் எழுதப்பட்ட வியாக்யானங்களின் துணைகொண்டு எழுதப்பட்டிருப்பதாலும், ஸ்ரீ ராமாயணம் போன்ற இதிகாஸ புராணங்களிலிருந்து மேற்கோளாக ஸ்லோகங்கள் எடுத்துக் கையாளப்பட்டிருப்பதாலும் இது சிறப்படைந்துள்ளது. திருவிருத்தத்திற்கும் ஈடு வியாக்யானம் அருளியுள்ளார். தவிர அஷ்டாக்ஷர தீபிகை என்ற கிரந்தமும் இவ்வாசிரியரது படைப்பு என்று தெரியவருகிறது. இவையெல்லாவற்றிற்கும் மேலாக உலகுக்கெல்லாம் உயிரான பிள்ளை லோகாச் சாரியாரையும், அவர் தம்பி அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரையும் பெற்றுக்கொடுத்தருளியதேயாகும்.

### வடக்குத்திருவீதிப்பிள்ளை வாழித்திருநாமம்

ஆனிதனில் சோதிநாள் அவதரித்தான் வாழியே.
ஆழ்வார்கள் கலைப்பொருளை ஆய்ந்துரைப்போன் வாழியே.
தாணுகந்தநம்பிள்ளை தாள் தொழுவோன் வாழியே.
சடகோபன் தமிழ்க்கீடு சாற்றினான் வாழியே.
நானிலத்தில் பாடியத்தை நடத்தினான் வாழியே.
நல்ல உலகாரியனை நமக்களித்தான் வாழியே.
ஈனமற எமையாளும் இறைவனார் வாழியே.
எங்கள் வடவீதிப்பிள்ளை இணையடிகள் வாழியே.

**ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்**

### *பிள்ளை லோகாச்சாரியார் வைபவம்*

*பிள்ளை லோகாச்சாரியாரும் அவர் தம்பி அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் நைஷ்டிகப்பிரமச்சாரிகள். ஐப்பசியில் திரு வோணத்தவத்ரித்த பரமகாருணியரான இவர் கிருபாமாத்ரப்பிரஸந் நாச்சாரியார். அனுவர்த்திப் பிரஸன்னாச் சாரியர்களைப் போலன்றி சிஷ்யப் பிரார்த்தனையைச் சிறிதும் எதிர்பார்க்காமல் பயனன்றாகி லும், பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்ப வர்கள். நமது ஆச்சார்ய கோஷ்டியில் எம்பெருமானாரே முதல் கிருபா மாத்ரப் பிரசன்னா சாரியார் ஆவர். அவர் பிரம்ம சூத்திரத் திற்கு (பாஷ்யம்) அர்த்தத்தை விளக்கும் நூல்கள் எழுதியபோதி லும் ரகஸ்யார்த்த விவரணமாக ஒரு சிறு நூலும் எழுதவில்லை. பின்னால் இன்னுமொரு திருக்கோலம் பூண்டு (மணவாள மாமனி களாக) செய்யலாம் என்று விட்டுவிட்டார் போலும். அக்குறை யைத் தீர்க்கவே பிள்ளை லோகாச்சாரியார் தோன்றி ஸ்ரீ வைஷ்ணவ மண்டலிக்கு பேருபகாரம் செய்துள்ளார். இவர் தகப்பனார் இவருக் குத் தமது ஆச்சாரியரான நம் பிள்ளையின் பெயரான உலோகாச்சாரி யார் என்றே திருநாமம் சாத்தினார். வாசி தெரிவதற்காக பிள்ளை லோகாச்சாரியார் என்று வழங்குதல் நிகழ்ந்தது என்பதை உபதேச ரத்ன மாலையில்.*

> பின்னை வடக்குத்திவீதிப்பிள்ளை - அன்பால்
> அன்னதிருநாமத்தை ஆதரித்து - மன்னுபுகழ்
> மைந்தர்க்குச் சாற்றுகையால் வந்து பரந்தது எங்கும்
> இந்தத் திருநாமம் இங்கு (உ.தே.மா. 52)

*என்கிறார்.*

*இவர் அருளிச்செய்த நூல்கள் அஷ்டாதசரகஸ்யம். அவற்றுள் ஸ்ரீவசன பூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்ற மூன்றும் சூத்திரவடிவில் அமைந்தவை. ஸ்ரீவசன பூஷணத்தின் பெரு மையை, மணவாள மாமுனிகள் உபதேச ரத்னமாலையில் ஏழு பாசுரங்களில் கொண்டாடியுள்ளார். ஆசார்ய பரம்பரப் பிராப்த மான அர்த்தங்களில் முன்னோர்கள் ரகசியமாக உபதேசித்துப் போந்தமையால், அந்த அர்த்த விசேஷங்களை பின்புள்ளோர் இழக்க ஒண்ணாதபடி தன்னுடைய கிருபையோடு பெருமாளும் ஸ்வப்பனத்தில் நியமித்தபடியால் ஸ்ரீவசன பூஷணமாகிய பிரபந் தத்தை அருளிச்செய்தவர். முன்பே பேரருளாளப் பெருமாள் கிரு பையால் மணப்பாக்கத்தில் இருப்பாரொரு நம்பியாருக்கு விசே*

ஷக் கிருபைபண்ணி தஞ்சமாயிருப்பதான சில விசேஷ அர்த்தங் களை விளக்கி, அவரைத் திருவரங்கத்தில் போய்க் காத்திரும், அங்கு நாம் உமக்கு விசேஷ அர்த்தங்களைச் சொல்லுவோம் என்று அருளினார்.

ஆகவே அவரும் திருவரங்கத்தில் ஏகாந்தமாக ஒரு கோயி லிலே காத்திருந்தார். பிள்ளை லோகாச்சாரியாரும் அந்த இடத் திற்கு வந்து ரகஸ்யார்த்தங்களை அருளிச்செய்து கொண்டிருந்தார். கோயிலிலிருந்த நம்பியும் வெளியே வந்து அவர் பாதங்களில் தண்டனிட, அவரும் மிகவும் மகிழ்ந்து முன்னரே காஞ்சியில் வாக்களித்தபடி அவரையும் தம் சீடராகக் கொண்டு பெருமாள் கட்டளைப்படி பிரபந்தமிட்டருளினார் என்பது பிரசித்தம் என் பவை மணவாள மாமுனிகள் வியாக்யானம்.

திவ்யப் பிரபந்தங்களுக்கோ ஸ்தோத்ரங்களுக்கோ உரையிடா மல் (அஷ்டதச ரகஸ்யங்கள்) பதினெட்டு ரகஸ்யங்களை அருளிய இவர் இந்த நூல்களில் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தக் கொள்கைகளையும் திவ்யப் பிரபந்த வியாக்யாதாக்கள் அருளிய ரஹஸ்யகிரந்தங்களையும் விரிவாக விளக்கியுள்ளார். வாழ்நாள் முழுவதும் திருமணமும் செய்து கொள்ளாமல், வைஷ்ணவ தர்ச னத்துக்காகவே வாழ்ந்து முகமதியர் படையெடுப்பின்போது அரங் கனைக் காப்பாற்றுவதற்காக உயிரையும் அர்ப்பணித்த மஹானுபா வர் இவர்.

அன்ன புகழுடும்பை அண்ணல் உலகாசிரியன்<br>
இன்னருளால் செய்த கலையாவையிலும் - உன்னில்<br>
திகழ்வசன பூடணத்தின் சீர்மை ஒன்றுக்கில்லை<br>
புகழல்ல இவ்வார்த்தை மெய் இப்போது (உ.தே.மா. 53)

இவரது அஷ்ட தச ரகஸ்யங்களில் பல இவரது தம்பியாலும், நாயனாராச்சான்பிள்ளை (சம காலத்தவர்)யாலும் அடுத்து வந்த மணவாள மாமுனிகளாலும் தமது நூற்களில் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ளன. ஆகவே அஷ்டதச ரகஸ்ய நூல்களில், பல அவற்றின் ஆசிரியர் காலத்திலேயே மிகப்புகழ் பெற்று விட்டன எனத்தெரிகிறது. இந்நூல்களில் முமுக்ஷுப்படியே காலத்தால் முற் பட்டது. சிறப்பால் முற்பட்டதுமாகும் எனத்தெரிகிறது. பிள்ளை லோகாச்சாரியார் தாமே தமது ரகஸ்யங்களில் முற்பட்டவை சில வற்றைப் பிற்பட்ட ரகஸ்யங்களில் குறிப்பிட்டுள்ளதாகச் சொல்கி றார். மணவாள மாமுனிகள் உபதேச ரத்னமாலையில் அன்ன புகழ் முடும்பை அண்ணல் உலகாசிரியன் இன்னருளால் செய்த கலை

யாவையிலும், திகழ் வசன பூடணத்தின் சீர்மை ஒன்றுக்கில்லை இவ்வார்த்தை மெய் இப்போது என்று தொடங்கி உ.தே.மா. (53-59) முடிய 7 பாசுரங்களால் பிள்ளை லோகாச்சாரியார் அருளிய ரகஸ்யக்கிரந்தங்கள் அனைத்திலும் தலைசிறந்தது ஸ்ரீவசன பூஷணமே என்று நிரூபிக்கிறார்.

ஆக பதினெட்டு ரகஸ்யங்களில் உரையிடுவதன் மூலமும் மேற்கோள் காட்டுவதின் மூலமும் மற்ற ஆசார்யர்களால் கையாளப்பட்டிருப்பவை முறையே 1) முமுக்ஷுப்படி 2) தத்வத்திரயம், 3) ஸ்ரீ வசன பூஷணம், 4) ஸாரஸங்கரஹம், 5) நவரத்ன மாலை, 6) யாத்ருச்சிகப்படி, 7) பரந்தபடி, 8) ஸ்ரீயப்பதிப்படி, 9) த்வசேகரம், 10) அர்ச்சராதி ஆகியவை பிள்ளை லோகாச்சாரியராலேயே குறிப்பிடப்பட்டவை. பிரபந்நபரித்ராணம், தத்வசேகரம், அர்ச்சராதி பிள்ளைலோகம் ஜீயர் உரையிட்டது. அர்த்த பஞ்சகம் அழகிய மணவாள நாயனாரால் எடுத்தாளப்பட்டது. முன்னோர்களால் கையாளப்பட்ட இந்த ரகஸ்யங்களுடன், ஸம்ஸாரஸாம்ராஜ்யம், நவவித ஸம்பந்தம், தனித்த்வயம், தனிப்பிரவணம் என்னும் நான்கையும் சேர்த்து நெடுங்காலமாகப்பிள்ளை லோகாச்சாரியார் அருளிய அஷ்டதச ரகஸ்யம் என்று சொல்லப்பட்டு வருகிறது. இவை தவிர இவர் தனிச்சுலோகமும் சத்யவியாக்யானமும் அருளியிருப்பதாக மாமுனிகள் மேற்கோள் காட்டுகிறார். ஆனால் அவை இப்போது கிடைக்கவில்லை.

### பிள்ளை லோகாச்சாரியார் வாழித்திருநாமம்

அத்தகிரியருளாள ரனுமதியோன் வாழியே.
ஐப்பசியில் திருவோணத்தவதரித்தான் வாழியே.
முக்திநெறி மறைத்தமிழால் மொழிந்தருள்வோன் வாழியே.
மூதரிய மணவாளன் முன்புதித்தான் வாழியே.
நித்தியம் நம்பிள்ளை பதம் நெஞ்சில் வைப்போன் வாழியே.
நீள்வசன பூடணத்தால் நியமித்தான் வாழியே.
உத்தமமாம் முடும்பை நகருதித்த வள்ளல் வாழியே.
உலகாரியன் பதங்கள் ஊழிதோறும் வாழியே.

**ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்**

இனி நம் பிள்ளையைத் தொடர்ந்து ஆசார்ய பரம்பரையைக் காண முற்படுவோம். நம்பிள்ளை சீடர்களில் பெரியவாச்சான்

பிள்ளை, நடுவில் திருவீதிப்பிள்ளை, ஸ்ரீ கிருஷ்ணஎன்னும் வடக்குத் திருவீதிப்பிள்ளை, பின்பழகிய பெருமாள் ஜீயர், ஈயுண்ணி மாதவப்பெருமுள் முதலியோர் முக்கியமானவர்கள். இவர்களில் **பின்பழகிய பெருமாள் ஜீயர்,** ஊணும் உறக்கமுமின்றியே பிள்ளை திருவடிகளிலே வழுவிலா அடிமை செய்து கொண்டு வாழ்ந்திருந்தார். இங்கனம் மிருக்கையில் பிள்ளையிடம் இவ்வாத்மாவுக்கு, ஸ்வரூப, உபாய, புருஷார்த்தங்கள் எவையென்று அருளிச்செய்ய வேண்டுமென்று விண்ணப்பிக்க, பிள்ளை இச்சை ஸ்வரூபம், இரக்கமே உபாயம், இனிமை உபயம் என்று அருளிச்செய்ய, அதை மறுத்து ஜீயர், தேவரீர் திருவடிகளே தஞ்சமென்றிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு, அடிமையாய் இருக்கையே ஸ்வரூபம், அவர்களது அபிமானமே உபாயம் அவர்களது முகமலர்ச்சியே உபேயம் என்று நினைத்திருப்பேன் என்றார். பின்பழகிய பெருமான் ஜீயர் திருநட்சத்திரம் ஐப்பசி சதயம். அவர் அருளிய கிரந்தம் குருபரம்பராப் பிரபாவம் என்பது.

## அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்

வடக்குத் திருவீதிப்பிள்ளையின் இரண்டாவது குமாரர். இவர் பிறந்த நட்சத்திரம் மார்கழி அவிட்டம். இவரது ஆச்சாரியார் இவரது தமையனார் பிள்ளை லோகாச்சாரியார். இவர் அருளிய கிரந்தம், ஆசார்ய ஹிருதயம், திருப்பாவை வியாக்யானம், திருவந்தாதி; கண்ணினுட் சிறுத்தாம்புவியாக்யானம், அருளிச்செயல், ரகஸ்யம் முதலியன. இவர் சிஷ்யர் கூர குலோத்தம தாஸர்.

## பெரிய வாச்சான்பிள்ளை வைபவம்

கி.பி. 1167ல் பிறந்தார் அவதாரஸ்தலம், சோழ நாட்டுச் சங்கநல்லூர், நட்சத்திரம் ஸர்வஜித் ஆவணிமாத கிருஷ்ணாஷ்டமி ரோஹிணி. குலம் பூர்வசிகை. இவர் தகப்பனார் யாமுனா தேசிகர். தாயார் நாச்சியாரம்மன். இவரது இதர திருநாமங்கள் பெரிய வாச்சான் பிள்ளை, அபயப்பரதராஜர், ஸ்ரீமத் கிருஷ்ணர் முதலியன. திருவாராதனம்: கிருஷ்ண விக்கிரஹம். இருப்பிடம்: பெரியகோயில். இவர் செய்தருளின கிரந்தங்கள் திருவாய்மொழி 24,000 படி. மற்ற பிரபந்தங்களுக்கும் அவர் ஒருவரே வியாக்யானம் செய்தவர். ஆகவே ஸ்ரீரங்கநாதவனால் அபயப்பரதராஜா என்று அழைக்கப்பட்டார். ஸகலபிரமாண தாத்பர்யம், உபகாரரத்னம் கத்யத்ரய வியாக்யானம், அபயப்பிரதான வியாக்யானம், சரமரஹஸ்யம், அனுசந்தான ரஹஸ்யம், நியமனப்படி, மாணிக்கமாலை, நவரத்ன

*மாலை, ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னம், முதலியன. இவர் 95 வருடம் வாழ்ந்திருந்தார். இவரது சிஷ்யர்கள் பரகால தாஸர், பின் பழகிய பெருமாள் ஜீயர், ஸ்ரீ ரங்காச்சாரியார் முதலியோர்.*

### *வாதிகேஸரி அழகிய மணவாளப்பெருமாள் ஜீயர்*

*ஸ்ரீ ராமாயாண விசேஷார்த்தங்களை தனிச்சுலோக வியாக்யானமாகவும் அருளி ஸ்ரீராமாயணப்பெருக்கர் என்று புகழ் பெற்றவர். கலிகன்றியாகிய திருமங்கையாழ்வார், கலிகன்றிதாஸரான நம்பிள்ளையாகவும் கிருஷ்ணபரமாத்மாவுக்குச் சமானமாக (கிருஷ்ண ஸுரி) எனும் பெரியவாச்சான்பிள்ளையாகவும் அவதரித்தனர் என்பர் பெரியோர். நம் பிள்ளைக்குப்பின்னர் ஸ்ரீரங்கத்தில் தர்ஸனம் நிர்வகித்தவர் இவரே. இவரது தீர்த்தம் இறந்தகாலம் (கி.பி. 1262) எனக்கொள்ளலாம்.*

நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு
எஞ்சாமை யாவைக்குமில்லையே - தம் சீரால்
வையகுருவின் தம்பி மன்னுமணவாளமுனி
செய்யுமவை தாமும் சில. (உ.தே.மா. 47).

பெரியவாச்சான் பிள்ளை பின்புள்ளவைக்கும்
தெரிய வியாக்கியைகள் செய்வரால் - அரிய
அருளிச் செயற்பொருளை ஆரியர்கட்கு இப்போது
அருளிச் செயலாய்த் தெரிந்து (உ.தே.மா. 46)

*என்று மாமுனிகள் அருளிச்செய்தபடி இவராலேயே பின்புள்ளோரனைவரும் அருளிச்செயலின் பொருளையறிந்து ஆசார்ய பதம் நிர்வஹித்தார்கள்.*

### இவரது வாழித்திருநாமம்

தன்மை சிங்கம் ரோகினிநாள் தழைக்க வந்தோன் வாழியே.
தாரணியில் சங்கநல்லூர் தானுடையோன் வாழியே.
புன்மை தவிர் திருவரங்கர் புகழுரைப்போன் வாழியே.
பூதூர் எதிராசர்தாள் புகழுமவன் வாழியே.
மன்புகழ்சேர் சடகோபர் வளமுரைப்போன் வாழியே.
மறைநாலின் பொருள்தன்னைப் பகுத்துரைத்தோன் வாழியே.
அன்புடன் உலகாரியர் தம் அடியிணையோன் வாழியே.
அபயப்ரதராசர் தாள் அனவரதம் வாழியே.

***ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்***

## வாதிகேஸரி அழகிய மணவாளப் பெருமாள் ஜீயர்

இவரது அவதாரஸ்தலம் தென் தேசத்தில் பிரமதேசம் மன்னார் கோவில். இவரது திருநட்சத்திரம் ஆனிமாதத்து ஸ்வாதியாகும். பஞ்ச ஸமஸ்காரங்களும், நித்யானு சந்தானங்களும் அருளிய ஆச்சாரியார் பெரிய வாச்சான்பிள்ளை. திருவாய்மொழி முதலிய பிரபந்தங்களும் ஈடு முதலான வியாக்யானங்களும் ஸ்ரீ பாஷ்யாதிகி ரந்தங்களும் தத்வத்ரயாதி ரஹஸ்யங்களும் அருளியவர் நாயனாராச் சான் பிள்ளை. திருவாராதனம். அழகிய சிங்கர். இருப்பிடம் கோயில். சிஷ்யர் திருமாலையாண்டான். பின் சென்ற வில்லி ஜீயர் அருளிச் செயல்கள். திருவிருத்தத்துக்கு உரை (பாவனத்வபிரபோ திகை) திருவாய்மொழிக்கு உரை 12,000 படி. இருபத்தி நாலாயிரப் பிரமாணத்திரட்டு, கீதாசாரம், சதுஸ்லோகி, தமிழ்க்கவி முதலியன. இவரது திருநாமங்கள்; வரதராஜர் சுந்தரஜாமாத்ரு முனி முதலியன.

## நாயனாராச்சான் பிள்ளை

பெரியவாச்சான் பள்ளியின் தத்துபுத்திரர். இவரது அவதாரஸ்த லம் சங்க நல்லூர். செய்தருளிய கிரந்தங்கள் ஜ்ஞாநார்ணவம், தத்வத்ரயவிவரணம் சரமோபாய நிர்ணயம், முக்த போகாவளி முதலியன.

## கூரகுலோத்தமதாசர் வைபவம்

ஓரான் வழி ஆசார்யர் வரிசையில் பிள்ளை லோகாசாரியரைய டுத்து வருபவர் கூரகுலோத்தம தாசர். இவரது திருவவதாரஸ்தலம் கோயில். இருப்பிடம் கோயில். குலம் பூர்வசிகை. திருநக்ஷத்திரம் ஐப்பசி மாதம் திருவாதிரை. பஞ்சஸம்ஸ்காரங்களும் நித்யானுசந் தானங்களும் சாதித்தருளியவர் ஆசார்யார் வடக்குத் திருவீதிப் பிள்ளை. திருவாய்மொழி முதலான பிரபந்தங்களும் ஈடு முதலான வியாக்யானங்களும் ஸ்ரீ பாஷ்யாதி கிரந்தங்களும் சாதித்தருளியவர் ஆசார்யார் பிள்ளை லோகாச்சாரியார். தத்வத்ரயாதி ரஹஸ்யங்க ளும், ஸகல ரஹஸ்யார்த்தங்களும் அருளியவர் அழகிய மணவா ளப்பெருமாள் நாயனாராசார்யர். திருவாராதனம் ஸ்ரீரங்கராஜர். சிஷ்யர்கள், திருவாய்மொழிப்பிள்ளை, மணவாள மாமுனிகள் (பெரிய ஜீயர்) முதலானவர்கள்.

*வாழித்திருநாமம்*

சந்ததமுமாழ்வார்கள் தமிழ் வளர்த்தோன் வாழியே.
தாரணியிற் சிறுநல்லூர் தானுடையோன் வாழியே.
எந்தை உலகாரியனை யிறைஞ்சுமவன் வாழியே.
இலகு துலா ஆதிரையிலிங்குதித்தான் வாழியே.
இந்த வுலகத்தோர்க்கிதமுரைத்தோன் வாழியே.
எழில் வசனபூடணத்துக்கினிமை செய்தான் வாழியே.
குந்திநகர் சிந்தை கொண்ட செல்வனார் வாழியே.
கூரகுலேத்தமதாசர் குரைகழல்கள் வாழியே.

*ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்*

# திருவாய்மொழிப்பிள்ளை

*இவரது அவதாரஸ்தலம் பாண்டிய நாட்டிலுள்ள குந்திகை. இவரது நட்சத்திரம் விபவவருஷம் வைகாசி விசாகம். இவரது திருநாமங்கள் திருமலையாழ்வார், திருவாய்மொழிப்பிள்ளை, ஸ்ரீசைலேசர் முதலியன. பஞ்ச ஸம்ஸ்காரங்களும் பிரபந்தங்களும் அருளியர் இவரது ஆச்சாரியார் பிள்ளை லோகாச்சாரியார். ஈடு முதலான பகவத்விஷயங்களை அருளியவர், நாலூராச்சான் பிள்ளை, கூரகுலோத்தமதாஸர், விளாஞ்சோலைப்பிள்ளை முதலானோர். இவர் அருளிய வியாக்யானம் பெரியாழ்வார் திருமொழி. இருப்பிடம் திருநகரி. இவர் செய்த கைங்கர்யம் ஆழ்வார் திருநகரி கோயில் ஜீரணோத்தாரணம் (புதுப்பிக்கப்படுதல்) இவர் சிஜ்யர் கள், பெரிய ஜீயர் (மணவாளமாமுனி) எம்பெருமானார் ஜீயர், சடகோப ஜீயர் முதலானோர். இவர் 105 ஆண்டுகள் வாழ்ந்திருந் தார். இவரது வாழித்திருநாமம்.*

வையக மெண்சடகோபன் மறைவளர்த்தோன் வாழியே.
வைகாசி விசாகத்தில் வந்துதித்தான் வாழியே.
ஐயணருண் மாரிகலை ஆய்ந்துரைப்போன் வாழியே.
அழகாரு மெதிராசரடி பணிவோன் வாழியே.
துய்யவுலகாரியன் தன் துணைப்பதத்தோன் வாழியே.
தொல்குருகா புரியதனைத் துலக்கினான் வாழியே.
தெய்வநகர் குந்திதன்னில் சிறக்க வந்தோன் வாழியே.
திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகள் வாழியே.

***ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.***

# மணவாள மாமுனிகள் (பெரிய ஜீயர்)

இவரது அவதாரஸ்தலம் பாண்டிநாட்டில் உள்ள கிடாரம் என்ற ஊர். இவரது திருநட்சத்திரம் ஐப்பசியில் திருமூலம். இவரது திருஅவதாரத்தை எம்பெருமானாரது இரண்டாவது அவதாரம் என்பர். இவரது திருத்தகப்பனார் பிள்ளை லோகாச்சாரியாரது சிஷ்யரான திகழக்கிடந்தான். திருநாவீறுடைய பிரான் தாதரண்ணன். தாயார் ஸ்ரீ ரங்கநாச்சியார். திருத்தம்பியார் திருமலையாழ்வார். இருப்பிடம் கோயில். திருவாய்மொழி முதலான பிரபந்தங்களும் ஈடு முதலான வியாக்யானங்களும் அருளியவர் திருவாய்மொழிப்பிள்ளை. ஸ்ரீ பாஷ்யாதி. கிரந்தங்களை அருளியவர் கிடாம்பி திருமலை ஐயங்கார், கூரகுலோத்தம தாஸர் முதலியோர். இவரது திருவாராதனப் பெருமாள் ஸ்ரீ ரங்கராஜர். இவரது திருநாமங்கள் பெரிய ஜீயர், மணவாள மாமுனி, இராமானுசன் பொன்னடி, யதீந்திரபிரவணர், வரயோகி, வரவரமுனி போன்று பதினொரு நாமங்கள். இவர் அருளிய கிரந்தங்கள் முறையே தத்வத்ரயம், ரகஸ்யத்திரயம், ஸ்ரீவசன பூஷணம், ஆசார்ய ஹிருதயம் ஞான சாரம், பிரமேயசாரம், பெரியாழ்வார் திருமொழி, திருவாய்மொழி நூற்றந்தாதி ஆகிய எட்டுப் பிரபந்தங்களுக்கு வியாக்யானமும், ஈட்டுக்கு பிரமாணத்திரட்டு, (ஆறாயிரம்) தத்வத்திரயம் பிரமாணத் திரட்டு, ஸ்ரீவசன பூஷண பிரமாணத்திரட்டு, ஆர்த்தி, யதிராஜ விம்ஸதி, உபதேசரத்னமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி திரு வாராதன கிரமம் முதலான பிரபந்தங்கள் முதலியன.

எம்பெருமானாருடைய புனரவதாரம்மான பெரிய ஜீயர், பூப்பிரதட்சணம் பண்ணி அனேகஸ்தலங்களில் உள்ள கோயில்களுக்கு ஜீரணோத்தாரணம் பண்ணியருளினார். திருநகரியில் திருவாய்மொழிப்பிள்ளைக்குத் தன்னுடைய நிஜஸ்வரூபமான ஸேஷாவதாரத்தைக் காட்டினார். பரமதநிரஸன சுபமதஸ்தாபனம் பண்ணினார். (பிற மதங்களைக் கண்டித்து வைஷ்ணவக் கொள்கைகளைப் பரப்பினார்) ஸர்ப்பாதி ஸ்தாவரஜங்கமாதிகளுக்கு மோக்ஷம் சாதித்தருளினார். வடமதுரையில் ஜீரணோத்தாரணம் பண்ணினார். நம் பெருமாளுக்கு ஒரு வருஷமாக திருவாய்மொழி ஈடு விண்ணப்பஞ் செய்கையாலே பெரிய ஜீயர் என்று நம் பெருமாள் திருநாமம் சாத்தியருளினார்.

ஆகவே இவர் எல்லோருக்கும் உத்தேஸ்யர் (தலைமையானவர்) இவர் மேனிஸ்வேதவர்ணம், (வெள்ளை) ஆகையால்

வெள்ளை ஜீயர் என்ற திருநாமமுண்டு. இவரது திருவடிகளை ஆஸ்ரயித்தவர்கள் வானமாமலை ஜீயர், பத்தங்கி பரவஸ்து, பட்டர் பிரான் ஜீயர், திருவேங்கட ஜீயர், கோயில் கந்தாடையண்ணன், பிரதிவாதி பயங்கர மண்ணா, எறும்பிலியப்பா, அப்பிள்ளை, அப்பிள்ளான். இவரெல்லாரும் அஷ்ட திக்கஜங்கள், சேனை முதலியாண்டான் நாயனார், நாலூர் சிற்றாத்தான், கந்தாடை போரேற்று நாயன் போன்றவர்கள் நவரத்னங்கள். திருப்பாணாழ் வார் தாஸர், வடுகநம்பி ஜீயர், நாயனார் தொடக்கமானவர்கள் சிஷ்யர்கள். கோயில் கந்தாடையண்ணன் உடையவருக்கு முதலி யாண்டானைப்போல இவருக்கு மெய்க்காப்பாளர். எறும்பிலி யப்பா வடுகநம்பியைப்போல தேவுமற்றறியாத அத்யந்த அபி மானி. பிரதிவாதி பயங்கரமண்ணாகூரத்தாழ்வானைப்போல உசாத் துணையாயிருப்பார். அப்பிள்ளார் மடத்தில் ஸர்வபரங்களையும் நடத்திக்கொண்டுபோவார். வானமாலை ஜீயர், ஆஸ்ரயித்த நாளிலி ருந்து பிரியாது ஆட்செய்திருப்பார். பட்டர், ஜீயர் எம்பாரைப் போல திருவடியாக இருப்பார். ஜீயர்நாயனார் திருக்குருகைப்பி ரான் பிள்ளானைப்போல ஞானகுமாரராய் இருப்பார். இவர்கள் எல்லோருக்கும் ஸ்வரூபோபாய புருஷார்த்தங்கள் சாதித்துக் கொண்டு பெரிய ஜீயர் நம்பெருமாள் கோயிலில் 125 ஆண்டுகள் வாழ்ந்து திருநாட்டுக்கு எழுந்தருளினார். என்ற விபரங்கள் கோயில் கந்தாடை நாயன் அருளிய பெரிய திருமுடி அடைவிலிருந்து தெரிந்து கொள்கிறோம். மணவாள மாமுனிகளைப் போலவே ராமானுஜ தர்சனத்தின் சரணாகதி தத்துவத்தை எங்கும் பரவச் செய்தவர் அகோபில மட ஸ்தாபகரான ஸ்ரீ சடகோபயதீந்தர ஜீயர் என்கிறார் பிரேமா நந்தகுமார் அவர்கள்.

இனி மணவாள மாமுனிகள் சீடர்களான, வானமாமலை ஜீயர், பட்டர் பிரான்ஜீயர், திருவேங்கட ஜீயர் எறும் பலியப்பா, அப்பிள்ளை, ராமானுஜரென்னும் அப்பிள்ளான் கோயில் கந்தாடை யண்ணன், கந்தாடை போரேற்றுநாயனார், ஸ்ரீசைல நரசிம்மாச்சாரி யார், மணவாள மாமுனி தாமே விரும்பி மறுபடி அவதசரித்தாரோ எனும் படியான அவரது பேரர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், ஸ்ரீநிவாசாச்சாரியார் என்ற கோயில் கந்தாடையப்பன், ஆத்தான், ராமானுஜம் பிள்ளை, அழகிய மணவாள ஜீயர், கந் தாடை அண்ணனின் பிள்ளையான கந்தாடை நாயன் போன்று பலர் உள்ளனர் என்ற விவரங்கள் கோயில் கந்தாடை அண்ணன் அருளிய பெரிய திரும்முடி அடைவு பிரபந்தத்திலிருந்து தெரிந்து கொள்கிறோம்.

*இவர்களைப்பற்றியெல்லாம் எழுதத்தொடங்கினால் கட்டுரை மிகவும் நீண்டுவிடும். மேலும் நாதமுனிகளில் தொடங்கி மணவாள மாமுனிகள் ஈறாக உள்ள ஆச்சாரியார்கள் ஓரான் வழி ஆச்சாரியார்களாகக் கருதப்பட்டு அவர்களுக்கு வாழித்திருநாமங்களும் அமைந்திருப்பதால் ஆசார்யப் பிரபாவத்தை இத்துடன் நிறைவு செய்வதே பொருத்தமானதாகும் என்று எண்ணி முடித்துக் கொள்கிறேன்.*

### *மணவாள மாமுனிகள் வாழித்திருநாமம்*

இப்புவியில் அரங்கேசர்க்கீடளித்தான் வாழியே.
எழில் திருவாய் மொழிப்பிள்ளை இணையடியோன் வாழியே.
ஐப்பசியில் திருமூலத்தவதரித்தான் வாழியே.
அரவரசப் பெருஞ்சோதி அனந்தனென்றும் வாழியே.
எப்புவியும் ஸ்ரீசைல மேத்தவந்தான் வாழியே.
ஓராரு மெதிராசரென வுதித்தான் வாழியே.
முப்புரிநூல் மணிவடமும் முக்கோல் தரித்தான் வாழியே.
மூதரிய மணவாள மாமனிகள் வாழியே.

### *திருநாள் பாட்டு*

செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடுவான்
சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடுநாள்
மந்தமதிப்புவி மானிடர் தங்களை வானிலுயர்ந்திடுநாள்
மாசறு ஞானியர் சேரெதிராசர்தம்வாழ்வு முளைத்திடுநாள்
கந்தமலர்ப் பொழில்சூழ் குருகாதிபன் கலைகள்
விளங்கிடுநாள்
காரமர் மேனியரங்கநகர்க்கிறைகண்கள் களித்திடுநாள்
அந்தமில்சீர் மணவாள முனிப்பரனவதாரம் செய்திடுநாள்
அழகுதிகழ்ந்திடுமைப்பசியில் திருமூலமதெனுநாளே

*ஆழ்வார், எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.*

# ஸ்ரீமந் நிகமாந்த மகாதேசிகன் அருளிய தேசிகப் பிரபந்தம்

உலகத்து உயிர்களனைத்தும் நற்கதி பெற வேண்டும் என்ற கருணை உள்ளத்தோடு நாள்தோறும் பாராயணம் பண்ணுவதற்கு ஏற்றவாறு அருளிச்செய்த 24 பிரபந்தங்களில் 19 பிரபந்தங்கள்தான் இப்போது நமக்குக் கிடைத்துள்ளன. ஆழ்வார்கள் அருளிய 24 பிரபந்தங்களும் 'அருளிச்செயல்' என்ற பெயருடன் வழங்குவது போல ஸ்ரீதேசிகன் உலகம் உய்வதற்காக அருளிச்செய்த பிரபந்தங்கள் தேசிகப்பிரபந்தம் என்ற பெயரால் வழங்கப்படுகின்றன. தத்துவங்களின் ஸ்வரூபம், ரகஸ்யங்களின் அர்த்தம், உபாயம் பலன். ஆசாரம், அனுஷ்டானம், ஆகார நியமம் முதலிய பல விஷயங்கள் இதில் மிக அரிய பாக்களில் வெளியிடப்படுவதால் ஸத்ஸம்ப்ரதாய கிரந்தங்களுள், ஸ்ரீ தேசிகப்பிரபந்தம் தலைசிறந்து விளங்குகிறது.

வேதத்திற்கும் வேதாந்தத்துக்கும் போல் வரையறையன்றி, எல்லாச்சாதியாரும், பெண்பாலரும் அனுசந்தித்து நல்வாழ்வு பெற வேண்டுமென்ற கருணையுள்ளத்தோடு இந்தப்பிரபந்தங்களை அருளிச் செய்தார். தத்துவ, ஹித புருஷார்த்தங்களை இனிய சொற்களிலே கலந்து பிரபத்தி என்னும் தேனைக்குழைத்து இப்பிரபந்தங்களாகிய அமுதத்தைத் திரட்டி உலகுக்கு வழங்கினார் நம் ஆசார்ய வள்ளல். வேறு தெய்வத்தை நாடாத ஏகாந்திகளும், வேறு பயனையும் நாடாத பரம ஏகாந்திகளும் இந்தப் பிரபந்தங்களை தினமும் அனுசந்தித்து இதன் கருத்துக்களில் ஈடுபட்டுப் போற்றுகின்றனர்.

ஸ்ரீ தேசிகன் காஞ்சிபுரத்தில் திருத்தண்காவெனப்படும் விளக்கொளியெம்பெருமான் ஸந்நிதிக்கு அருகில் உள்ள தூப்புல் என்ற புண்ணிய பூமியில் கி.பி. 1268-ல் புரட்டாசி மாதத்திருவோண நன்னாளில் அவதரித்தார். தவப்புதல்வராகப் பிறந்தார். ஆழ்வார்களும், ஸ்ரீ பாஷ்யகாரர் (இராமானுசர்) வரையிலுள்ள மஹாச்சார்யார்களும் அருளிய திவ்ய ஸூக்திகளின் கருத்தையும், மதக்கொள்கைகளையும், ரஹஸ்யார்த்தங்களையும் மேலும் விரிவாய் அறிந்து சேதனர்கள் இன்புற்று வாழ்வதற்கு வேண்டி ஸ்ரீ பாஷ்யகாரரது அவதாரமே என்று புகழும்படி ஸ்ரீ தேசிகனை அவதாரப்படித்தி அருளினான் ஸர்வேஸ்வரனான எம்பெருமான் எனலாம்.

ஸ்ரீமந் அநந்தஸூரி என்னும் வைணவ சீலருக்கும் அவரது தர்ம பத்நியாகிய தோதாரம்மாவுக்கும் அருந்தவப் புதல்வராய்ப் பிறந்தவருக்கு, திருவேங்கடமுடையானது திருநட்சத்திரத்திலேயே அவதரித்த காரணத்தால் ஸ்ரீ வேங்கடேசன் என்று திருநாமம் சூட்டினர் பெற்றோர். இராமானுஜரது சிஷ்யரான கிடாம்பியாச்சான் என்பவரின் சிஷ்யரான கிடாம்பி அப்புள்ளான் தன் சகோதரி மகனான தேசிகருக்கு மதம், தத்துவம், ஞானம் முதலியவைகளில் சிறந்த பயிற்சி கொடுத்தார். இவரும் ரஹஸ்யார்த்தங்களையெல்லாம் கசடறக்கற்று உபய வேதாந்தங்களிலும் (தமிழ் - சமஸ்கிருதம்) ஒப்புயர்வற்ற ஞானத்தோடு விளங்கினார். அப்புள்ளாரும் ஸ்ரீமத் நாதமுனிகள் வாயிலாக வந்து ஆளவந்தாரால் வளர்க்கப் பட்டு ஸ்ரீ பாஷ்யகாரரால் நன்கு பாதுகாக்கப்பட்டு வந்த ஸ்ரீ விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை மேலும் ஒளிவிடுமாறு பாதுகாத்துப் பாசுரம் செய்ய தமக்குப் பரம்பரையாய் வந்த கருடமந்திரத்தை உபதேசித்தார் தேசிகருக்கு.

பெற்றோர்கள், நியமனப்படி திருமங்கையார் என்னும் அழகுத்திருவுருவை மணந்தார். பேரருளாளன் திருவருளால் அவருக்கு நாயனாராச்சான் பிள்ளை என்ற திருக்குமாரன் அவதரித்த போதிலும், இல்லற வாழ்க்கையில் மிக்க ஈடுபாடின்றி இல்லற தர்ம அனுஷ்டானங்களை மட்டும் வழுவாது நடத்திவந்தார். தனது அருமைக்குமாரனுக்கு 'வரதன்' என்ற சிறப்பு நாமமிட்டு உரிய காலத்தில் அந்தந்த ஸம்ஸ்காரங்களையும் (சடங்குகளையும்) உபநயனத்தையும் செய்து வித்யாப்யாசத்தையும் செய்வித்தார். இவரும் தம் தகப்பனார் ஸந்நிதியிலேயே பஞ்ச ஸம்ஸ்காரம் பெற்றுக் காலக்ஷேபம் செய்து தீபத்தில் தோன்றிய பிரதிதீபம் போல் விளங்கினார்.

அப்புள்ளார் தம் அந்திம காலத்தில் ஸ்ரீ தேசிகனை அழைத்து ஸ்ரீ பாஷ்யகாரருடைய பாதுகைகளையும், தாம் உபயோகித்து வந்த திருவாழி திருச்சங்கையும் கொடுத்து, தேசிகன் திருமுடியில், தன் திருவடிகளை வைத்து அனுக்ரஹித்துத்தாம் திருநாட்டுக்கு எழுந்தருளினார். பிறகு சிலநாள் சென்றவுடன் தேசிகன் திருவயிந்திபுரத்திற்கு எழுந்தருளி, அங்குள்ள தெய்வநாயகனையும், பிராட்டியையும் மங்களஸாஸனம் செய்து அங்குள்ள ஔஷதாத்ரி என்ற மலையில் ஏறிஸ்ரீ நரசிம்ஹன் ஸந்நிதிக்கு எதிரில் ஒரு அச்வமரத்தடியில் கருட மந்திரத்தை ஜபித்தார். அதனால் மகிழ்ந்த கருட பகவான், ஸ்ரீ ஹயக்ரீவ மந்திரத்தை உபதேசித்து யோக நிலையில்

இருக்கும் ஒரு ஹயக்ரீவ விக்ரகத்தையும் கொடுத்து விட்டு மறைந்தார். தேசிகன் ஹயக்கரீவ மந்திரத்தை ஜபித்து, அவரையே தியானித்துக் கொண்டிருந்தமையால் மிகவும் மகிழ்ந்த ஹயக்ரீவன் நேரில் எழுந்தருளி, ஞானமும் பிரவசன சக்தியும் மென்மேலும் பெருகுமாறு தன்னுடைய திருவாய் அமுதத்தை இவருக்கு அளித் தார். அதன் பின்னர் தேசிகர் ஹயக்ரீவ ஸ்தோத்ரம், கருட பஞ்சாசத், தேவநாயக பஞ்சாசத், அச்யுத சதகம் முதலிய ஸ்தோத்திரங்களை யும், மும்மணிக்கோவை, நவமணிமாலை முதலிய தமிழ் பிரபந் தங்களையும் அருளிச்செய்து அவ்வூரிலேயே சித்தாந்த உபந்யாசம் நடத்திக்கொண்டு நெடுங்காலம் வாழ்ந்திருந்தார்.

அதன் பின்னர் காஞ்சியில் பேரருளாளரைச் சேவிக்க விரும்பி வரும் வழியில் முதலாழ்வார்களுக்கு எம்பெருமான் சேவை சாதித்த திருக்கோவலூருக்குச் சென்று திருவிக்ரமப்பெருமாளைச் சேவித்து, பின் காஞ்சி சென்று, பெருமாளையும், தாயாரையும் பரிபூர்ணமாக அனுபவித்து ந்யாஸசதகம், வரதராஜ பஞ்சாசத் முதலிய ஸ்தோத்ரங்களையும், அடைக்கலப்பத்து, அருத்த பஞ்ச கம், முதலிய பிரபந்தங்களையும் அருளிச்செய்தார். அருகேயுள்ள திருவெஃகா, திருப்புட்குழி, முதலிய தேசத்துப்பெருமான்களை யும், மங்களா சாஸனம் செய்து, யதோக்தகாரிஸ்தோத்ரம் முதலிய பல ஸ்தோத்ரங்களையும் அருளிச்செய்து ஸம்பிரதாயப்பரிசுத்தி முதலிய சில்லரை ரஹஸ்யங்களையும், வேதாந்த கிரந்தங்களையும் அருளிச்செய்து கொண்டிருந்தார். அப்பொழுது பாஷ்யகாரருக்கு ஸரஸ்வதி தேவியால் அளிக்கப்பட்ட ஹயக்ரீவர் விக்ரகம், அப்புள் ளாரின் சந்ததி வழியாய் இவருக்குக் கிடைத்தது. அதையும் சேர்த்து ஆராதித்துக்கொண்டு சிஷ்யர்களுக்கு உபந்யாசம் செய்து கொண்டி ருநதார். பின்பு திருக்கடிகை முதலிய திவ்யதேசங்களைச் சேவித்துக் கொண்டு திருமலைக்கு எழுந்தருளி, அவ்வெம்பெருமானைப் பூரணமாய் அனுபவித்து அவனது தயையை வேண்டித் தயாசதகம் என்ற ஸ்தோத்ரத்தை அருளிச் செய்தார். பின்னர் அங்கிருந்து வடக்கிலுள்ள பிருந்தாவனம், திருவயோத்தி, சாளக்ராமம், பத்ரி யாச்ரமம் முதலிய திவ்ய தேசங்களை மங்களாசாஸனம் செய்து திரும்பி, திருவல்லிக்கேணி, திருவெவ்வுள் முதலியவற்றையும் சேவித்து மகிழ்ந்தவராய், ஸ்ரீபெரும்புதூரில் எம்பெருமானாரைக் கண்டு களித்து மீண்டும் காஞ்சிவந்து சித்தாந்தப்பிரசங்கம் செய்து கொண்டிருந்தார்.

ஸ்ரீ பகவத் ராமானுஜ சித்தாந்தத்தை நாடெங்கும் பரவச் செய்து, சேதனர்களது வாழ்வை வளப்படுத்த, ஸ்ரீரங்கமே வசதி யான இடம் என எண்ணியதால் அங்கேயே நெடுங்காலம் வசிக்க விரும்பினார். உபய வேதாந்த ஸம்ப்ரதாயம் தமக்குப் பிற்காலத் தில் நல்ல பிரசாரம் அடைவதற்குச் சிறந்த வழியாக பகவத்தியாந ஸோபாநம், தசாவதார ஸ்தோத்ரம், முதலிய ஸ்தோத்ரங்களையும், தத்துவரத்நாவளி, ஸர்வார்த்த ஸித்தி, நியாயப்பரிசுத்தி, நியாய சித்தரஞ்சனி, ஈஸ்வர மீமாம்சை சததூஷணை, தத்துவ மாத்ருகை போன்ற பல வேதாந்தக் கிரந்தங்களையும் அருளிச்செய்ததால் இவர் செய்யும் பேருபகாரத்தைக் கண்டு மகிழ்ந்த ஸ்ரீரங்கநாதன் இவருக்கு 'வேதாந்த பார்யார்' என்ற விருதை அளித்தார். ஸ்ரீ ரெங்கநாச்சியார் இவருக்கு 'ஸர்வதந்திர ஸ்வதந்திரா' என்ற விருதை அளித்தருளினார். அங்குள்ள மகாவித்வான்கள் 'கவிதார்க் கிகஸிம்ஹம்' என்ற விருதைச் சமர்ப்பித்து மகிழ்ந்தனர்.

ஒரு கால் கிருஷ்ண மிச்ரன் என்ற ஒரு வித்வான் ஸ்வாமியிடம் வாதம் செய்தபோது, ஸ்வாமி தம்முடைய மேதா விலாசத்தால் அவனை ஜயிக்க, அவனும் சுவாமியின் பெருமையை வியந்து பணிந்து சென்றான். அப்பொழுது அவதரித்தது 'ஸங்கல்ப ஸூர் யோதயம் என்னும் அற்புத நாடகக் கிரந்தம் என்று தெரிகிறது. இவ்வாறு ஸ்ரீரங்கத்தில் நீண்ட நாட்கள் இருந்த பின்னர் தென்னாட் டிலுள்ள திருமாலிருஞ்சோலை, திருக்குறுங்குடி, ஸ்ரீவரமங்கை (நாங்குனேரி) முதலிய திவ்ய தேசங்களைச் சேவித்து, ஸ்ரீவில்லிபுத் தூரில், கோதாபிராட்டியாரைத் தொழுது, கோதாஸ்துதியை அருளிச் செய்து திருப்புல்லாணி முதலிய திவ்ய தேசங்களையும் வணங்கி, குருகூரில் ஆழ்வாரைத் திருவடி தொழுது, திருவனந்தபுரம் முத லிய மலைநாட்டுத் திருப்பதிகளையும், சோழ நாட்டுத்திவ்ய தேசங்களையும் மங்களாசாசனம் செய்து, திருவயிந்திபுரத்திற்கு எழுந்தருளித் தம் கடமைகளை அனுஷ்டித்து வந்தார்.

அங்கும் அவரது வல்லமையைப் பரீட்சிக்கக் கருதிய ஒரு கொத்தன், கோணலான கற்களையே எடுத்துக்கொடுக்க ஸ்வாமி தம் வல்லமையால் அவற்றையே பயன்படுத்தி மிக அழகிய திருக்கிணற்றை அமைத்து அவனது செருக்கை அடக்கி அவன் தன்னைப் பணியுமாறு செய்தார். இன்றும் அக்கிணறும் ஸ்ரீதேசிகன் திருமேனித் திருவடிகளின் ஸ்பரிசம் பெற்ற திருமாளிகையும் எல்லாராலும் சேவிக்கப்பட்டு வருகின்றன. ஒருநாள் சைன மதத் தமிழ்ப்புலவர்கள் பலர் பல்வேறு மதத்தினர்களையும் துணை

கொண்டு ஸ்வாமியிடம் வாதுபுரிய வந்தனர். ஸ்ரீதேசிகனும் அடிய வர்க்கு மெய்யனான திருமுன்பே அவர்கள் அனைவரையும் வாதத் திலே தோற்கடித்து, அவர்களது வாதப்போக்கையும், அவர்களைக் கண்டித்த முறையையும் தொகுத்துப் 'பரமத பங்கம்' என்னும் ரஹஸ்யமாக அமைத்தருளினார் என்பது பரம்பரைச் செய்தியாகும்.

சீடர்களின் வேண்டுகோளுக்கிணங்கி காஞ்சிக்குத் திரும்பிய வர், காஞ்சியில் ஒரு பாம்பாட்டி ஸ்வாமி முன்வந்து தன் பெட்டியி லிருந்த பாம்புகளை வெளியே ஓட விட்டான். சில கோடுகளை ஸ்வாமி பூமியில் கீறவே பாம்புகளால் அவற்றைத்தாண்ட முடிய வில்லை. ஒரு கொடிய பாம்பு மட்டும் அவற்றைத்தாண்டி ஸ்வா மியை அணுக, அவரும் கருட மந்திரத்தை உச்சரித்தார். உடனே ஆகாயத்திலிருந்து கருடன் பறந்து வந்து எல்லாப்பாம்புகளையும் தூக்கிச்சென்று விட்டான். பாம்புப்பிடாரன் தனக்குத்தோல்வி நேர்ந்தது மட்டுமன்றித் தன் ஜீவனோபாயமான சர்ப்பங்களையும் இழக்க நேரிட்டதற்கு வருந்தி ஸ்வாமியைப் பணிந்து பிரார்த்திக்க, ஸ்வாமியும் மனமிரங்கி கருட தண்டகத்தை இயற்றி அனுஸந்தித் தார். உடனே கருடன் அந்த ஸர்ப்பங்களையெல்லாம் திரும்பக் கொண்டு வந்து போட்டார். பிடாரன் மகிழ்ந்து, ஸ்வாமியை ஸர்வசித்திவல்லவர் என்று கொண்டாடிப் பாம்புகளை எடுத்துச் சென்றான்.

காஞ்சியில் பேரருளாளரது உத்சவகாலத்தில் பெருமாளுக்கு முன்னால் திவ்யப்பிரபந்தத்தை அனுசந்தித்தல் சாஸ்திர விரோத மென்று பலர் ஆட்சேபித்தபொழுது, சுவாமிகள் திவ்யப்பிரபந்தம் பரம வைதீகமேயென்று ஸ்தாபித்து, உத்சவந்தைத் தடையின்றி நடத்தச்செய்தார். இவ்வெற்றிக்கு அறிகுறியாகப் பேரருளாளன், தன் திருச்சின்னங்கள் இரண்டினில் ஒன்றைத் தேசிகனுக்கு மனமு வந்து அருளினான். இந்த வரலாற்றினைத் தழுவியே இன்றும் பேரருளாளனுக்கு ஒற்றைத் திருச்சின்னமே சேவிக்கப்படுகின்ற தென்று பணிப்பர் பெரியோர்.

காஞ்சியிலிருந்து ஸ்ரீரங்கம் செல்லும் வழியில், திருக்கோவலூ ரில், இரவில் ஒரு கடலை வியாபாரி வீட்டில் தங்க நேர்ந்தது. ஸ்ரீ ஹயக்கீரவனுக்குச் சுத்த தீர்த்தத்தை நிவேதனம் செய்து தாம் உபவாசமிருந்தார். நள்ளிரவில் அந்த வைசியர் ஓடிவந்து சுவாமியி டம், ஒரு வெள்ளைக்குதிரை தம் வீட்டிற்குள் புகுந்து கிடங்கி லுள்ள கடலையை மேய்வதாகவும், தம்மால் அடக்க முடியவில் லையென்றும் முறையிட்டார். ஸ்ரீ ஹயக்கிரீவனே அவ்வாறு

செய்வதாக அநுமானித்த தேசிகர், வைசியரிடம் கொஞ்சம் பால் கொண்டு வரச்சொல்லி முழுவதும் குதிரை வடிவு கொண்டிருந்த ஹயக்கிரீவனுக்கு நிவேதனம் செய்ய குதிரையும் மறைந்தது. வைசியரும் மிகச் சிறந்த பக்தரானார். இந்நிகழ்ச்சியால் அவருக்குப் பெருஞ்செல்வம் குவிந்தது.

'உன்னை, விஜயநகரப் பேரரசின் ஆஸ்தான வித்வானாக ஆக்குகிறேன்' என்று கூறிய தன் நண்பர் வித்யாரண்யரிடம், எனக்குப் பணமும் பதவியும் தேவையில்லை. எனக்குக் காஞ்சி வரதராஜரருளும் அருட்செல்வமே, அமைதியையும் ஆனந்தத்தையும், அளிக்கவல்லது என்று கூறி விரும்பித் தாமே வறுமையை ஏற்றுக்கொண்டவர் இவர். அப்பொழுது இவர் அருளிய வைராக்ய பஞ்சகம் என்ற ஐந்து ஸ்லோகங்கள் சிறப்புவாய்ந்தவைகளாகும். அந்த வைராக்ய பஞ்சகப்பொருள் சுருக்கம் வருமாறு:

நல்ல ஞானத்தைப் பெற்றவர்களும் தம் வயிற்றை வளர்க்க, அரசர்களிடம் சென்று அவர்களைப் போற்றிப்புகழ்ந்து தம் ஸ்வரூபத்தைக் கெடுத்துக் கொள்கிறார்களே. வயிற்றுப் பசியைத் தீர்த்துக் கொள்ள, வயலில் சிந்தியுள்ள தானியமே போதுமே. நீரைக் கொண்டு கூட உயிர்தரித்து விடலாமே. உடலை மறைக்க ஒரு கந்தல் துணி போதுமே. இப்படியிருக்க இவற்றிற்காக, நல்ல அறிஞர்களும் கூடக் கெட்டுப்போகிறார்களே. மல்லிகைமலர் எம்பெருமானுக்கே உரியதாவது போல, நம் வாக்கும் எம்பெருமானைத் துதிப்பதற்கேயமைந்தது. யாம் மானிடம் பாட வந்த கவியோமல்லோம் என்கிறார். இறையருள் செல்வம் என் வசம் இருக்கும்பொழுது நான் ஏன் வேறொரு செல்வத்தை நாட வேண்டும். 'சரீரபத நாவதி' என்று தொடங்கும் நாலாவது ஸ்லோகத்தில் 'தநம்' என்ற எழுத்துக்களை பதினோரு தடவை உபயோகித்திருக்கிறார். நானோ என் தந்தையோ பொருள் சம்பாதிக்காவிட்டால்கூட என் பாட்டன் பிரம்மபதேவன் சம்பாதித்த செல்வமான பேரருளாளன் அத்திகிரி உச்சியில் உள்ளது. வேறு அழியும் செல்வத்தை நான் நாட வேண்டாம் என்கிறார். பிதாமஹன் என்ற சொல் பாட்டனர், பிரமன் என்ற இரு பொருளில் இச்சுலோகத்தில் அமைந்துள்ளது. தேசிகப் பிரபந்தம் மிக அரிய பாக்களால் வெளியிடப்படுவதால், ஸத்ஸம்பிரதாயக் கிரந்தங்களுள் தலை சிறந்ததாக விளங்குகிறது. இவர் தமிழில் மட்டுமின்றி சமஸ்கிருதம், பிராகிருதம் மணிப்பிரவாளம் ஆகிய மொழிகளிலும், நன்றாக எழுதும் திறமைசாலி. அவர் எழுதிய சஙகல்ப சூர்யோதயா என்ற வடமொ

ழிநாடகம் ஜீவாத்மா, பரமாத்மாவைப்போய் அடைவதற்கு மேற் கொள்ள வேண்டிய முயற்சிகளைக் கூறுகிறது. எத்தனைவிதமான, ஆசை, கோபம், அகங்காரம் போன்ற தடைகளைத் தாண்ட வேண்டும் என்பதைக் குறிப்பிடுகிறார். 'யாதவ பூதயம்' என்ற தலைப்பில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அவதார மகிமையை எழுதியுள்ளார். அவர் எழுதியுள்ள ரகசியத்திரயசாரா, சகதோஷனி போன்ற நூல்கள் வைணவ பக்தி இலக்கியத்தின் மாட்சியினைப் பலவகையிலும் காட்டுகின்றன. அவரது இலக்கிய கருவூலத்தின் மணிமுடிகளாக விளங்குவது பாதுகாஸகஸ்ரம், தயாசதகம் என்ற இரண்டுமேயாகும். பாதுகாஸகஸ்ரம் என்ற கவிதை பகவான் ஸ்ரீரெங்கநாதனது பாதுகை மகிமையையும், அவரது பாதுகையான நம்மாழ்வாரது அளவுகடந்த பக்திப்பிரவாகத்தையும் கூறுவதால், காலக்கிரமத்தில் உபகண்டத்தில் அழிக்க அழியாத பக்திச்சுரங்க மாக மாறும் தகுதி பெற்றவை. அவரது கவிதைகளை ஹர்ஷர் பவபூதி, காளிதாசர் போன்றவர்களது கவிதைகேளாடுதான் ஒப்பிட் டுப் பார்க்கமுடியும் என்றெல்லாம் ஸ்ரீகல்யாணபுரம் ஆராஅமுத ஸ்வாமிகள் குறிப்பிடுவதாகக் கூறுகிறார். பிரேமாநந்தகுமார் அவர் கள். திவ்ய தம்பதிகளை ஸ்ரீதேசிகன் அனுபவித்த முறைகளை நாமும் அறிந்து இன்புறலாம்.

ஸ்ரீ தேசிகன் அருளிய 19 தமிழ்ப்பிரபந்தங்கள் முறையே அமிருதரஞ்சனி, அதிகார சங்கிரகம் அமிருதா சுவாதினி, பரமபத சோபானம், பரமதபங்கம், மெய்விரதமான்யம் (அத்திகிரி மான்ய முதல் ஆறு பிரபந்தங்களில் பேரருளாளன் புகழ் பாடுகிறார். அவரது அருளிச்செயல்கள் அருத்த பஞ்சகம், அடைக்கலப்பத்து, ஸ்ரீவைணவ தினசரி, திருச்சின்னமாலை, பன்னிருநாமம், திருமந்தி ரச்சுருக்கு, த்வயச்சுரக்கு சரமசுலோகம், கீதார்த்த சங்கிரகம், மும்ம ணிக்கோவை, நவமணி மாலை, பிரபந்தசாரம், ஆகாரநியமம் முதலியனவாகும். ஸ்ரீதேசிகன் திருக்குமாரரான நயினாராச்சாரி யார், ஸ்ரீ தேசிகன் பிள்ளையந்தாதி என்னும் பிரபந்தத்தைப் பாடியருளினார். நாலாயிரப் பிரபந்தத்தைப்போலவே இப்பிரபந்த மும் சிறப்புடைய தானாலும், காலத்தையும், இடத்தையும், கருத் திற்கொண்டு சுருக்கமாகவே காணலாம். ஸ்ரீதேசிகப்பிரபந்தத்தைத் தொகுத்துக் கொடுத்த ஸ்ரீராம தேசிகாசார்ய ஸ்வாமிகள் ஒவ்வொரு பிரபந்தத்திலும் அமைந்துள்ள விஷயங்களைச் சுருக்கி பிரபந் தார்த்த ஸங்கிரகம் என்ற பகுதியில் கூறியுள்ளார்கள். அவற்றுள் முக்கியமானவற்றையே நாம் காண விழைகிறோம்.

தம வாயிருந்து தாமேயான ஸர்வார்த்தங்களையும் கூறும் ஸ்ரீதேசிகனது ‘ஆபால கோபாலம்’ அனைவரும் படித்தறிந்து அனுபவிக்கக்கூடியது. அவரது காவ்ய கிரந்தங்கள்; தர்க்கவேதாந்த சாஸ்திரநூல்கள், வாத கிரந்தங்கள் என்று வடமொழியில் அருளிச் செய்யப்பட்டுள்ள அனைத்திலுமுள்ள பயன்படக்கூடிய ஸாரார்த் தங்கள் அனைத்தும் இத்தமிழ்ப்பிரபந்தங்களில் அடங்கியிருப்ப தால் இதை ஒரு ஸர்வார்த்த சித்தி என்றே கருதலாம். ஆகவேதான் இவரைத் தமிழ்க்கடவுள் என்று பிறமதத்திலுள்ளவர்கள் கூடப் புகழ்கின்றனர்.

தமது உபய வேதாந்தாச்சார்யத்தை ஸ்தாபித்துக் கொண்டதும் அதன் மூலமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் உபய வேதாந்தாச் சார்யர்களாக இன்றளவும் விளங்குவதும் இப்பிரபந்தத்தின் பெரு மையினாலேயே. வடமொழியில் உள்ள கவிதை நயங்களையெல் லாம் தமிழ்க்கவிதையிலும் உட்புகுத்தி எண்ணிறந்த காவிய சித்தி ரங்களை உண்டாக்கி அளித்துள்ளார். ஆகவே இப்பிரபந்தநூல் ஸ்ரீவைஷ்ணவர்கள் மட்டுமின்றி தமிழறிஞர்கள் அனைவருமே படித்து ஆனந்திக்க வேண்டிய ஒன்றாகும். இனி நூலுக்குள் புகுந்து இங்கொரு முத்தும் அங்கொரு மணியுமாகக் கண்டு செல்வோம்.

*அமிருத ரஞ்சனி*

இதில் ஸ்ரீ தேசிகன் ஆச்சாரியாரது அருள்பெற்றுத் தாம் உய்ந்து போனதைக்கூறி சேதனம், அசேதனம் ஈஸ்வரன் என்னும் மூன்று தத்துவங்களின் ஸ்வரூபத்தைப் பிரித்துக்காட்டி, திருமந்திரம், த்வ யம், சரமஸ்லோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தத்தை யும் சுருக்கி வெளியிடுகிறார்.

‘காரணமாய் உயிராகி அனைத்துங் காக்கும்
கருணைமுகில் கமலையுடன் இலங்குமாறும்
நாரணனாய் வடிவான வுயிர்களெல்லாம்
நாமென்று நல்லடிமைக் கேற்குமாறும்
தாரணிநீர் முதலான மாயை காலம்
தனிவான் என்றிவை உருவாந் தன்மை தானும்
கூரணிசேர் மதியுடைய குருக்கள் காட்டக்
குறிப்புடன் நாம் கண்டுவகை கூறினோமே.

என்று வைணவத்தில் ஆச்சார்ய ஸ்தானம் எவ்வளவு சிறப்பானது என்பதைக் குறிப்பிடுகிறார். இதனை அடுத்துவரும் அதிகார

*சங்கிரகம் என்ற பகுதியில் பத்து ஆழ்வார்கள் மதுரகவிகள், எட்டு ஆச்சார்யர்கள் இவர்களைப் புகழ்ந்து பேசித்தனியே எம்பெருமானார், ஆளவந்தார், நாதமுனிகள் என்னும் ஆச்சார்யர்கள் நம் ஸித்தாந்தத்துக்கு செய்த உபகாரத்தைக் கூறிக்; கோயில், திருமலை, பெருமாள்கோயில் ஆகிய திவ்ய தேசங்களுக்கும் ஒவ்வொரு பாசுரமிட்டு ஸ்ரீ ரெங்கநாதனின் திருவடிகளின் பெருமையை ஒரு பெரிய பாசுரத்தால் விளக்கி ஆச்சார்யர்களின் உபகாரத்தை அனுசந்தித்து முடிக்கிறார்.*

பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார், தண்
பொருநல்வருங்குருகேசன், விட்டுச் சித்தன்
துய்ய குலசேகரன் நம் பாணநாதன்
தொண்டரடிப்பொடி, மழிசை வந்த சோதி
வையமெலாம் மறைவிளங்க வாள்வேலேந்தும்
மங்கையர்கோன் என்றிவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதி
தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே என்றும்
என்னுயிர் தந்தளித்தவரைச் சரணம் புக்கு
யானடைவேன் அவர் குருக்கள் நிரைவணங்கிப்
பின்னருளாற் பெரும்புதூர் தந்தவள்ளல்
பெரியநம்பி ஆளவந்தார் மணக்கால்நம்பி
நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக்கொண்டார்
நாதமுனி, சடகோபன் சேனைநாதன்
இன்னமுதத்திருமகள் என்றிவரை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே

*என்றும் ஆழ்வார்களையும், ஆச்சாரியர்களையும் புகழ்ந்து பாடியவர், திருவரங்கப் பெரிய கோயிலையும் விண்ணுயிர் வெற்புடை வேங்கடத்தையும் புகழ்ந்து*

ஆராத அருளமுதம் பொதிந்த கோயில்
அம்புயத்தோன் அயோத்தி மன்னற்களித்த கோயில்
தோலாத தனிவீரன் தொழுத கோயில்
துணையான வீடணற்குத் துணையாங்கோயில்
சேராத பயனெல்லாஞ் சேர்க்கும் கோயில்
செழுமறையின் முதலெழுத்துச் சேர்ந்த கோயில்
தீராத வினையனைத்தும் தீர்க்கும் கோயில்
திருவரங்கம் எனத்திகழும் கோயில்தாமே

*என்றும்*

கண்ணனடியிணையெமக்குக் காட்டும் வெற்பு
கடுவினைய ரிருவினையுங் கடியும் வெற்பு
திண்ண மதுவீடென்னத்திகழும் வெற்பு
தெளிந்த பெருந்தீர்த்தங்கள் செறிந்த வெற்பு
புண்ணியத்தின் புகலிதெனப் புகழும் வெற்பு
பொன்னுலகிற் போகமெல்லாம் புணர்க்கும் வெற்பு
விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு
வேங்கட வெற்பென விளங்கும் வேதவெற்பே'

*என்றும்*

உத்தம வமர்த்தலமமைத்ததோ ரெழிற்றணு வினுய்த்தகணையால்
அத்திவரக்கன் முடிபத்துமொரு கொத்தென உதிர்த்த, திறலோன்
மத்துறுமிகுத்த தயிர் மொய்த்த வெண்ணெய் வைத்ததுணுமத்த
விடமாம்
அத்திகிரி, பத்தர்வினை, தொத்தறவனுக்கும் மணியத்திகிரியே

*என்றும் பாடியுள்ளார். இத்தனை அற்புதமான பாசுரங்கள் அருளிய தேசிகன் இறுதியில் தன்னடக்கமாக*

வெள்ளைப் பரிமுகர் தேசிகராய் விரகால் அடியோம்
உள்ளத்தெழுதியது. ஓலையிட்டனம் நாமிதற்கே
கொள்ளத்துணியினும் கோதென்றிகழினுங், கூர்மதியீர்,
எள்ளத்தனையுகவர்து இகழாதெம்மெழில்மதியே'

*என்று பாடியிருப்பது அவரது சீலத்தையும் பக்தியையும் காட்டுகிறது.*

*இனி அமிருத சுவாதினியில் திருமந்திரம் முதலிய மூன்று ரஹஸ்யங்களின் தாத்பர்யம். இராமாயணத்தின் சாரமான காகசரணாகதி, விபீஷண சரணாகதி முதலியனவும் வராகப் பெருமானுக்கும், பூமிப்பிராட்டிக்கும் நடந்த உரையாடலின் விளைவாக எழுந்த வராகசரம ஸ்லோகத்தின் பொருள், அஞ்சலியின் பெருமை, ஏனைய ரஹஸ்யங்களின் சுருக்கமும் கூறப்பட்டு இறுதியில் பாஷ்யகாரரின் கீர்த்தியைக்கூறி அமலனாதிப்பிரானின் ஸாரார்த்தத்துடன் முடிவடைகிறது.*

நின்னருளாங் கதியின்றி மற்றொன்றில்லேன்
நெடுங்காலம் பிழைசெய்த நிலை கழிந்தேன்
உன்னருளுக்கினிதான நிலையுகந்தேன்
உன்சரணே சரணென்னுந் துணிவு பூண்டேன்

மன்னிருளாய் நின்றநிலையெனக்குத் தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சி தர வரித்தேனுன்னை
இன்னருளாலினியெமக்கோர் பரமேற்றாமல்
என்திருமாலடைக்கலங் கொள் என்னை நீயே'

*என்றும்*

பாண் பெருமாள் பெருமையினைக்
காண்பனவுமுரைப்பனவு மற்றொன்றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடிய காதற்
பாண்பெருமாள் அருள் செய்த பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று பரவுகின்றோம்
வேண் பெரிய விரிதிரைநீர் வையத்துள்ளே
வேதாந்த வாரியென்றியம்ப நின்றோம்
நாண் பெரியோமல்லோம் நாம் நன்றுந்தீதும்
நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே

*என்றும் அருளியுள்ளார்.*

*இதனை அடுத்து வரும் பரமபத சோபானம் (படி) என்ற பகுதியில் பரமபதமெனும் மிக்க உயரத்திலுள்ள ஓர் இடத்தை அடைவதற்கு ஒன்பது படிகளை அமைத்துள்ளார். அவை முறையே. 1) தத்துவங்கள் முதலியவற்றை அறிதல், 2) ஸம்ஸாரத்தில் வெறுப்பு, 3) உலக சுகங்களில் ஆசை அறுதல், 4) தன் பாபங்களின் விளைவால் இனிவர இருக்கும் நரகானுபவத்தை எண்ணி அஞ்சுதல், 5) எம்பெருமான் மோக்ஷத்தை அருள்வதற்குக் காரணமான உபாயங்களை அனுஷ்டித்தல் 6) இச்சரீரத்திலிருந்து ஜீவன் வெளியேறுதல், 7) அர்ச்சராதி மார்க்கத்தால் (புண்ணியம் செய்தவர்கள் செல்லும் பாதை) செல்லுதல், 8) ஸ்ரீ வைகுண்டம் என்னும் திவ்ய லோகம் சேர்தல், 9) அங்குள்ள ஸர்வேஸ்வரனைக் கண்ணாரக்கண்டு களித்து அந்த நித்யானத்தத்திலேயே எப்பொழுதும் மூழ்கிக் கிடத்தல் என்ற விஷயங்களையும் சுருக்கமாக வெளியிட்டுள்ளார். இதன் விரிவுரையை இவர் எழுதிய ரஹஸ்யகிரந்தத்தில் காணலாம்.*

மாளாதவினையனைத்தும் மாள நாம் போய்
வானேறி மலர்மகளாரன்பு பூணும்
தோளாத மாமணிக்குத் தொண்டு பூண்டு
தொழுதுகந்து தோத்திரங்கள் பாடியாடிக்
கேளாத பழமறையின் கீதங்கேட்டுக்

கிடையாத பேரின்பம் பெருகநாளும்
மீளாத பேரடிமைக்கன்பு பெற்றோம்
மேதினியில் இக்கின்றோம் விதியினாலே

என்று பாடிஅருளியுள்ளார். இனி பரமதபங்கம் என்ற பகுதியில் திருவெயிந்தையில் அந்நிய மதத்தினருடன் வாதம் புரிந்து வெற்றி பெற்று, அம்மதங்களில் உள்ள தோஷங்களையும் வைணவத்தின் மேன்மையையும் பற்றி எழுதப்பட்ட ரகஸ்யத்தின் ஒவ்வொரு அதிகாரத்தையும் சுருக்கிப் பாசுரங்களாகத் தொகுக்கப்பட்ட பரம பத பங்கம் என்ற பிரபந்தமாகத் தோன்றியது. இதில் அன்னிய மதங்களில் பொதுவாய் உள்ள தோஷங்களை வெளியிட்டு சார்வாக மதம், பௌத்தம், அத்வைதம், ஜைனம், பாஸ்கர யாதவ மதம் போன்ற எல்லா மதங்களின் முக்கியக்கொள்கைகளைச் சுருக்கிக் கூறிக்கண்டித்து பாஞ்சராத்திர சாஸ்திரத்தின் பெருமையைப் பேசி, சரணாகதி ஸ்வரூபத்தின் பெருமையையும் பலனையும் எடுத்துக் காட்டி முடிவில் தமக்கு அருள்புரிந்த திருவாழி ஆழ்வானுடைய திருக்கரங்களின் பெருமையையும் பேசித்தலைக்கட்டுகிறார்.

கோதவமொன்றில்லாத தகவே கொண்ட
கொண்டலென வந்துலகிலைவர்க்கன்று ஓர்
தூதுவனாய் யொருகோடிமறைகளெல்லாம்
தொடர்ந்தோடத்தனி யோடித் துயரந்தீர்த்த
மாதவனார் வடகொங்கில் வானியாற்றின்
வண்ணிகை நன்னடங்கண்டு மகிழ்ந்துவாழும்
போது, இவை நாம் பொன்னயிந்தை நகரில் முன்னாள்
புணராத பரமதப் போர்பூரித்தோமே

என்கிறார்.

இனி ஸ்ரீதேசிகன் பேரருளாளன் மீது அத்திகிரி மான்யம், மெய்விரத மான்மியம், அருத்த பஞ்சகம், அடைக்கலப்பத்து போன்ற ஆறு பிரபந்தங்களைப் பாடுகிறார். மெய்விரதமான்மியம் என்ற பகுதியில் ஸ்ரீ பாஷ்யத்தின் பதினாறு பாதங்களின் ஸாரார்த் தங்களையும் ஒரே பாசுரத்தில் அமைத்து அருளிச் செய்துள்ளார். பேரருளாளனின் திருமேனி அழகையும், இரு பிராட்டிமாருடன் அவன் காட்சியளிப்பதையும், தக்க எடுத்துக்காட்டுகளுடன் வர்ணித்திருப்பது படித்துச்சுவைத்து அனுபவித்தால்தான் தெரியும்.

அருத்த பஞ்சகத்தில் முக்தியைப்பெற விரும்புபவன் முக்கிய மாய் உணர வேண்டியதான ஐந்து பொருள்களைக் கூறுகிறார்.

அவை யாவன 1) நம்மால் அனுபவிக்கப்பட வேண்டிய எம்பெரு மானுடைய ஸ்வரூபம், எம்பெருமானை அடையவிடாமல், இது வரை உள்ள இடையூறுகள், மோக்ஷத்திற்காகச் செய்யும் உபாயங் கள் முக்கிய பலமாகிய பகவத் அனுபவம் என்பனவாம். அடைக்க லப்பத்து என்ற பகுதியில் பேரருளாளன் திருவடிகளில் அடைக்க லம் புகுந்தமையைப் பத்துப் பாசுரங்களில் விளக்குகிறார். ஸ்வ நிஷ்டை, உத்திநிஷ்டை, ஆசார்யநிஷ்டை., பாகவத நிஷ்டை என்று சரணாகதிபாகுபாடு பெற்றதைக்கூறி முடிவில் சரணமடைந்து தலைக்கட்டுகிறார்.

அடுத்து ஒரு ஸ்ரீ வைஷ்ணவன் தினந்தோறும் செய்ய வேண் டிய காரியங்களான ஐந்தும் கூறப்பட்டுள்ளன அவை யாவன. அபிகமனம்; அதாவது அன்று முழுதும் நடக்க வேண்டிய காரியங் கள் தடையின்றி நடந்தேறப் பிரார்த்தித்துப் பிரபத்தி பண்ணுவது. அடுத்து உபாதானம்; அதில் பகவானது ஆராதனத்துக்கு வேண்டிய பொருள்கள் முக்கியமாக மனது சுத்தமடைய ஆழ்வார்களும் ஆச்சாரியர்களும் அருளிய ஸ்ரீ ஸூக்தி காலக்ஷேபத்தில் ஈடுபடுதல், பின்னர் வருவது இஜ்யை, இதில் பாஞ்சராத்ர சாஸ்திரத்திலும் ஆஹ்நிகங்களிலும் சொல்லிய முறைப்படிபகவானுக்குத் திருவாரா தனம் செய்தல், அடுத்து ஸ்வாத்யாயம் என்பது. இதில் வேதாந்த பாடங்களைப் படித்துத் தெரிந்து கொள்ளுதல், இறுதியாக யோகம் என்பதில் பகவான் திருவடிகளில் இரவும் பகலும்தான் தலையை வைத்திருப்பதாய்த் தியானம் செய்து சயனித்தல் என்று ஐந்து கார்யங்களையும் பேரருளாளன் விஷயமாக்கி வெளியிடுகிறார். அடுத்துவரும் திருச்சின்னமாலையில் பேரருளாளன் சந்நிதியில் எழும் திருச்சின்னத்தின் ஓசையில் மயங்கிய தேசிகன் முதல் ஆறு பாசுரங்களில் திருமந்திரத்தின் ஸாரார்த்தத்தையும் 7, 8 பாசுரங்களில் த்வயத்தின் விசேஷார்த்தத்தையும் 9-வது பாசுரத்தில் சரம ஸ்லோ கத்தின் முக்கியார்த்தத்தையும் வெளியிட்டு இறுதியில் பேரருளா ளன் பெருமை பேசி ஆச்சார்யோபதேசத்தின் ஸாரமடங்கிய இப்பி ரபந்தத்தின் இனிமையை சிற்றின்பத்தில் பற்றில்லாமல் வேறு இச்சையின்றி ஈடுபடுவோரே அனுபவிக்க முடியும் என்று கூறி முடிக்கிறார். இதை அடுத்துவரும் பன்னிரு நாமம், பேரருளாளன் விஷயமே. கேசவன் முதல் தாமோதரன் வரையில் உள்ள பன்னிரு திருநாமங்களைச் சொல்லி, அந்த அந்தத்திருமண் காப்புகளில் அவ்வவ்வெம்பெருமான்களின் திருமேனி நிறம், அவர்கள் அணிந் திருக்கும் ஆயதங்கள், அவர்கள் தலைவராய் வீற்றிருக்கும் திசை, நம் சரீரத்தில் அவர்கள் வசிக்கும் பாகம் முதலியவற்றைக் கூறுவ

*தால் புண்ட்ரம் (நாமம்) தரிக்கும்பொழுது இப்பிரபந்தம் அவசியம் பாராயணம் செய்ய வேண்டும்.*

'கத்தித்திரியும் கலைகளை வெல்லும் கருத்தில் வைத்துப்
பத்திக்குறுதுணை பன்னிருநாமம் பயில்பவர்க்கு
முத்திக்க மூலமெனவே மொழிந்த இம்மூன்றுநான்கும்
தித்திக்கு மெங்கள் திருவத்தி யூரரைச் சேர்பவற்கே

*என்ற பாசுரத்துடன் முடிக்கிறார்.*

*இனிவரும் மூன்று பிரபந்தங்களால் முறையே திருமந்திரம் த்வயம். சரமஸ்லோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தத்தை நம் தேசிகன் விளக்கியருள்கிறார். திருமந்திரத்தைப் பதம் பதமாக, அதாவது, 1) அகாரம் 2) அதன் மேல் உள்ள நான்காம் வேற்றுமை உருபு, 3) உகாரம், 4) மகாரம் நமபதம், நாரபதம், அயனபதம், அதன் மேலுள்ள நான்காம் வேற்றுமை உருபு ஆகியவற்றின் பொருளை முறையே கூறி, இவ்வர்த்தங்களெல்லாம் நிதியைப் போல் ஆச்சார்யர்களால் சேமித்து வைக்கப்பட்டவை என்கிறார். அடுத்து த்வயச்சுருக்கு. த்வயம் இரண்டு பாகமாக உள்ளது. முதற்பாகம் உபாயத்தையும், இரண்டாம் பாகம் பலனையும் வெளியிடுகிறது. அம்மந்திரத்தின் அர்த்தத்தைச் சுருக்கி வெளியிடு வதால் த்வயச் சுருக்கு எனப்பெயர் பூண்டது. மந்திரத்தைப் பத்துப் பதமாகப் பிரித்துக்கூறிப்பின் அப்பத்து அர்த்தங்களையும் ஒரு பாசுரத்தில் சேர்த்துக்கூறி முடித்திருக்கிறார்.*

தன தன்றிவையெனத் தானென்றென மறைசொன்ன வெலாம்,
எனதென்றும் யானென்று மெண்ணுதலால் வருமீனமெலாம்,
மனதொன்றியின்று நமவென்றதே கொண்டு மாற்றுதலால்
தனதன்றி யொன்றுமிலாத் தனித்தாதை சதிர்த்தனனே

*என்பது சுருங்கியபொருள். இதை அடுத்து சரம சுலோகச்சுருக்கு. முதற்பாசுரத்தில் சரமஸ்லோகத்தின் முழுத்தாத்பர்யத் (சரணாகதி தத்துவம்) தையும் அருளிச்செய்து பின்பத்துப் பாசுரங்களில் பாகங்க ளுக்கு வியாக்கியானமும் செய்தருளுகிறார்.*

கல்லாரகலும் கருமமுஞானமுங் காதலும் மற்
றெல்லா நிலைகளுக்கேற்ப விதித்த கிரிசைகளும்
வல்லார் முயல்க, வலியிழந்தாரென்றனைத் தொழுகென்று
எல்லாத் தருமமுரைத்தவன் இன்னடி சேர்ந்தனமே

*என்பது திரண்ட பொருள்.*

கீதார்த்த சங்கிரகம் என்ற பகுதியில் பதினெட்டு அத்யாயங் கொண்ட கீதையின் ஒவ்வோர் அத்யாயத்தின் சாரத்தையும் ஒவ் வோர் ஸ்லோகத்தில் ஆளவந்தார் எழுதியுள்ளவற்றைத் தமிழில் மொழி பெயர்த்துத் தனித்தனியாக 21 பாசுரங்களில் எழுதியுள்ளார். இவ்வாறு கீதை மொழிந்தருளிய வேதாந்த தேசிகனார் இதை அடுத்து மும்மணிக்கோவை என்ற பிரபந்தத்தில் முதலில் பிராட்டி யின் பெருமையையும், ஸ்ரீசப்தத்தின் ஆறு பொருள்களையும் பேசித்தெய்வநாயகனுடைய திருக்கல்யாண குணங்களைப் புகழ்ந்து எல்லாப்பொருளாயும் எல்லாப் பந்துவாயும், இருப்பவன் அவனே என்று காரணத்துடன் கூறி அவனது பக்தர்கள் அவனுக்குச் சமமானவர் என்று வெளியிடுகிறார் தேசிகன். மொத்தம் முப்பது பாசுரங்கள் இருக்க வேண்டிய இப்பிரபந்தத்தில் பத்துப்பாசுரங் களே காணப்படுகின்றன. அகவல், வெண்பா, கட்டளைக்கலித் துறை என்று மூன்று வகைப்பாக்களால் இப்பிரபந்தம் அமைக்கப் பட்டு மூவகை மணிகளால் அமைந்த ஹாரம் போலிருத்தலின் இதற்கு மும்மணிக்கோவை என்ற பெயர் வந்தது என்று தெரிகிறது.

அடுத்து வரும் நவமணிமாலை (நவரத்னமாலையென்றும் வழங்கப்படுவதுண்டு) வெண்பா முதலிய பாக்கள் ஒன்பது அமை யப்பெற்ற இப்பகுதியில் முதலில் திருவயிந்திரபுரத்து எம்பெருமா னின் பெருமை பேசிப்பின் அவன் எடுத்த பத்து அவதார வரலாற் றையும், பிரம்மா, கருடன், அனந்தாழ்வான், பூமிதேவி முதலி யோர் தீர்த்த உருக்கொண்டு அவன் அருள்பெற்று அங்கிருக்கும் வரலாற்றையும் கூறி, மாசிமாதத்தில் கடற்கரையில் நடக்கும் உத்சவத்தையும் புகழ்ந்து, தம்முடைய அந்திமகாலத்தில் தமக்கு அபயமளிக்க வேண்டும் என்று வேண்டிக்கொண்டு அவன் தன் னைப்பாடப் பணித்ததையும் கூறி முடிக்கிறார்.

> மஞ்சுலாவு சோலை சூழயிந்தை மன்னு மன்னுசீர்
> வரையெடுத்து நிரையளித்த மாசில் வாசுதேவனே
> செஞ்சொலன்பர் சிந்தை கொண்டு திதிலாத தூதனாய்த்
> தேரூர்ந்து தேசுயர்ந்த செல்வ! தெய்வ நாயக!
> வெஞ்சொலாளர் காலதூதர் வீசுபாசம் வந்தென்மேல்
> விழுந்தழுந்தி யானயர்ந்து வீழ்வதற்கு முன்னர் நீ
> அஞ்சலஞ்ச லஞ்ச லென்றளிக்க வேண்டும், அச்சுதா
> அடியவர்க்குமருளியக்குமடியவர்க்கு மெய்யனே

என்று பாடியபின் இறுதிப்பாசுரத்தில்

அந்தமில் சீரயிந்தை நகரமர்ந்த நாத,
னடியினை மேல் அடியுரையாலைம்பதேத்திச்
சிந்தை கவர் பிராகிருதம் நூறுகூறிச்
செழுந்தமிழ் மும்மணிக்கோவை செறியச்சேர்த்துப்
பந்து கழல் அம்மானை யூசலேசல்
பரவு நவமணிமாலை இவையுஞ் சொன்னேன்.
முந்தை மறை மொழிய வழி மொழிநீயென்று
முகுந்தனருள் பெற்ற பயன் பெற்றேன் நானே'

என்று தான் முகுந்தனருளால் பாடிய பாசுரங்களைத் தொகுத்துக்கூறுகிறார். பந்து கழல் அம்மானை ஊசல் ஏசல், பரவு நவமணி மாலை இவையுஞ் சொன்னேன் என்று அருளியிருப்பதால் அவர் அருளிய மும்மணிக்கோவையில் இருபது பாசுரங்களும் பந்து, கழல் முதலிய ஐந்து பிரபந்தங்களும் மறைந்து விட்டன எனத்தெரிகிறோம்.

பிரபந்தசாரம் என்ற இறுதிப்பகுதியில், ஆழ்வார்கள் அவதரித்த ஸ்தலம், மாதம், நட்சத்திரம், அவர்கள் பெருமை, அருளிச் செய்த பிரபந்தங்களின் பெயர், அவற்றின் பாசுர எண் அவற்றின் சாரம் இவற்றை வெளியிட்டு இறுதியில் இரு பாசுரங்களில் ஆழ்வார்கள் திருநாமத்தையும் அவர்கள் அருளிய பாசுர எண்களையும் கூறி ஒரு பாசுரத்தில் ஒரே கோஷ்டியாக அவர்களை அனுபவித்து 'தமிழ்மறையோன்' என்று தன்னை பெருமையாகப் பேசி இப்பிரபந்தத்தை அனுசந்திப்பவருக்கு எம்பெருமான் கருணையால் சகல நன்மைகளும் உண்டாகுமென்று கூறி முடிக்கிறார். ஆழ்வார்களது பிரபந்தத்தின் சாரமாக அமைந்திருப்பதால் இது இப்பெயர் பெற்றுள்ளது.

| | |
|---|---|
| எண்ணின் முதலாழ்வார்கள் மூன்று நூறும் | *300* |
| எழில்மழிசைப்பிரான் இரு நூற்றொருபத்தாறும் | *216* |
| உண்மைமிகு மாறன் மறையாயிரத்தோடு | *1296* |
| உற்ற இரு நூற்றுத்தொண்ணூறுமாறும் | *11* |
| வண்மையுடை மதுர கவிபத்துமொன்றும் | |
| வஞ்சியர் கோன் நூற்றைந்தும், பட்டநாதன் | *105* |
| பண்ணியல் நானூற்றேழுபத்துமூன்றும் | *473* |
| பார்க்கோதை நூற்றெழுபத்துமூன்றே | *173* |
| பத்தரடிப்பொடிபாடலைம்பத்தைந்தும் | *55* |
| பாணர்புகல் பத்துடனே பரகாலன் சொல் | *10* |
| அத்தனுயர் வேங்கடமாற்காயிரத்தொடு | *1253* |

ஆன இரு நூற்றோரைம்பத்து மூன்றும் 108
முத்திதரும் எதிராசர் பொன்னடிக்கே மொழிந்த
வமுதர் பாடல் நூறுமெட்டும் எத்திசையும் வாழ
இவர் பாடி வைத்த இவை நாலாயிரமும் அடி
யோங்கள் வாழ்வே 4000

என்றும் தொகுத்துத் கொடுக்கிற்ார். ஆகவே நாலாயிரப்பிரபந்தத்தில் இராமானுச நூற்றந்தாதியையும் அடக்கியே பெரியோர் கணித்துள்ளனர் எனத்தெரிகிறோம்.

**ஆகார நியமம்:** தேசிகரின் கடைசித்தமிழ் பிரபந்தம் ஆகாரநியதி பற்றிக்கூறுகிறது. 'ஆகாரத்தில் இருவகையாம் நன்றுந்தீதும், அருமறை கொண்டெதிராசரிவை மொழிந்தார் என ஆரம்பித்து, ஆகாரத்தில் சுத்தமில்லா விட்டால் மனம் தெளிவடைவதில்லை. மனந்தெளியாதபோது எந்தவொரு நல்லகாரியத்தையும் சிந்திக்கவோ செயல்படுத்தவோ முடியாது. ஆகவே முனிவர்கள் சாஸ்திரங்களில் கூறிய முறையைத் தழுவி, உண்ணத்தகாத பதார்த்தங்களை எடுத்துக்காட்டி அவற்றை விலக்குமாறும் உண்ணத்தக்க பதார்த்தங்களையும் கூறி விளக்குகிறார்.

மாலமுது செய்யாமல் வந்தவெல்லாம்
வருவிருந்தில் வழங்காமல் வைத்தவெல்லாம்
காலமிது வன்றென்று கழிந்தவெல்லாம்
கடையில் வருங்கறி முதலாக்கமுவாவெல்லாம்
நூலிசையா வழிகளினால் வந்தவெல்லாம்
சீலம்பிலாச் சிறியோ ராக்கினவு, நல்லோர்
செல மலங்கள் பட்டனவுந்தின்னார்தாமே

என்று கூறியவர், உண்ண வேண்டியவைகளையெல்லாம் கூறும் பொழுது,

தாதை நல்லாசிரியன் முதற்றமையனெச்சில்
தரணிசுரர் சோமத்திலருந்து மெச்சில்
மாதர் கட்குக் கணவனிதமான வெச்சில்
மயிர் புழு நூல் விழுந்தாலும் புனிதம்

என்கிறார். இவரைப்பற்றிப் புகழ்ந்து இவர் புதல்வர் நாயினாராச்சாரியார் அந்தாதித் தொகையில் பிள்ளையந்தாதி பாடியுள்ளார். அதில் தேசிகன் பெருமைகளையெல்லாம் நன்கு விளக்கியுள்ளார். அவர் ஆராய்ந்து கண்ட சித்தாந்தம், திருவேங்கடமுடையானே தேசிக

*னாக அவதரித்துள்ளான். தேசிகன் குணங்களைப்பாடி அவரை மனத்து இருத்தினால் பாபங்கள் பறந்து போகும். அவரது அரு ளன்றி உபாயமில்லை என்பதாம். சுவாமிதிருமேனி பல்லாண்டு வாழும்படி வாழ்த்தி இந்தப் பாசுரத்தைச் சேவிப்பவர் முடிவில் தேசிகன் திருவடிகளில் விளங்கப்பெறுவர் என்று பலன் கூறி முடிக்கிறார்.*

தொண்டருகக்குத் துணையடி வாழி, நின் தூமுறுவல்
கொண்ட முகம் வாழி வாழி வியாக்கியா முத்திரைக்கை
வண்டிரு நாமமும் வாழி மணிவட முப்புரிநூல்
கொண்டசீர் தூப்புற்குலமணியே வாழிநின்வடிவே.

*என்று வாழ்த்துகிறார். நாலயிரப்பிரபந்தத்தைப்போல் தேசிகப் பிரபந்தத்திலும் சாத்துமுறைப்பாடல்கள் உள்ளன.*

நானிலமுந்தான் வாழ நான் மறைகள் தாம் வாழ
மாநகரின் மாறன் மறைவாழ - ஞானியர்கள்
சென்னி யணிசேர் தூப்புல் வேதாந்த தேசிகனே
இன்னுமொரு நூற்றாண்டிரும்

*வாழித்திருநாமம்*

வஞ்சப்பரசமயம் மாற்றவந்தோன் வாழியே.
மன்னுபுகழ்ப்பூதூரான் மனமுகப்போன் வாழியே.
கஞ்சத் திருமங்கை யுகக்க வந்தோன் வாழியே.
கலியனுரை குடிகொண்ட கருத்துடையோன் வாழியே.
செஞ்சொல் தமிழ்மறைகள் தெளிந்துரைப்போன் வாழியே.
திருமலைமால் திருமணியாய்ச் சிறக்க வந்தோன் வாழியே.
தஞ்சப்பர கதியைத் தந்தருள்வோன் வாழியே.
தண்டமிழ்த் தூப்புல் திருவேங்கடவன்றாள் வாழியே.

*ஆழ்வார், எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்*

# ஸ்ரீ வைஷ்ணவ தர்மம்
## (முடிவுரை)

தர்மம் என்பது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டதாய், பலனை அளிப்பதான செயலாகும். சாஸ்திரங்களில் முக்கியமான (உபதேச ரத்னமாலை 61-ல்) ஞானம், அனுஷ்டானம் இவை நன்றாகவே உடையவனான குருவை அடைந்தக்கால், தேனார் கமலத்திருமாம கன் கேள்வன். தானே வைகுந்தம் தரும் என்கிறார் மணவாள மாமுனிகள். இந்தத் தர்மம்தான் மிக உயர்ந்த தருமம். இத்தர்மத்தை மதுரகவி நிஷ்டை சரமோபாய நிஷ்டை, அந்திமோபாய நிஷ்டை என்று பல பெயர்களால் குறிப்பிடுவர்.

கர்ம ஞான பக்தியோகங்களோடு அவதார ரகஸ்ய ஞானம், புருஷோத்தம வித்தை, புண்யக்ஷேத்ரவாஸம், திருநாம சங்கீர்த்த னம், திருவிளக்கு எரிக்கை, திருமாலை எடுக்கை முதலானவற்றை யும் கீதாச்சார்யன் உபதேசித்த அளவில் அவையாவும் உடலை வருத்திச் செய்ய வேண்டியிருப்பதாலும் ஐம்பொறிகளை அடக்கு வது அரிதாயிருப்பதாலும், நீண்ட காலம் அவற்றைக் கைக்கொள்ள வேண்டியிருப்பதாலும் எளிதில் முடிக்க இயலாததாலும் மேற் கொள்ள அரிதாயிருக்கும். மேலும் அவை யாவும் நம்முடைய முயற்சியால் இயற்றப்படுவதால் அத்யந்த பாரதந்திரமாகிற ஆத்ம ஸ்வரூபத்துக்கு முற்றிலும் பொருந்தாததலால் மேற்கொள்ள அரி தாயிருக்கும் என்று கருதியே அர்ஜுனனுக்கு பற்றுதற்கு எளிதாக வும் ஆத்மஸ்வரூபத்துக்கு பொருத்தமாகவும் உள்ள உபாயத்தை எம்பெருமான் கிருபையினால் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா,

'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷ யீஷ்யாமி மாசுச

என்ற ஸ்லோகத்தை அருளிச்செய்தான். இக்கருத்தை நம்மாழ்வார்

வார்த்தை அறிபவர் மாயவர்க்காளன்றி யாவரோ
போர்த்த பிறப்பொடு நோயொடுமூப்பொடு இறப்பவை
பேர்த்துப் பெருந்துன்பம் நேரற நீக்கித் தன்தாளின் கீழ்ச்
சேர்த்து அவன் செய்யும் சேமத்தை எண்ணித் தெளிவுற்றே'

(திருவா 7.4.10) என்று குறிப்பிட்டுள்ளார். ஆகவே எம்பெருமா னையே உபாயமாகக் கொள்ளும் பிரபத்திக்கு தேச, கால, பிரகார அதிகாரி நியமங்களும், பல நியமும் இல்லை. விஷயநியமமே

உள்ளது என்றார் பிள்ளை லோகாச்சாரியார் (ஸ்ரீ வசனபூ. சூ 24-ல்) ஆகவே இந்தப் பிரபத்தியானது எவ்விதத்திலும், எக்காலத்திலும் எந்த முறையிலும், எவராலும், எந்த பயனைக்குறித்தும் செய்யத்தக் கதாக இருக்கும். ஆனால் மனஉறுதிப்பாட்டையே வடிவாகக் கொண்ட பிரபத்திக்கு மகா விஸ்வாசம் ஏற்படுவது கடினம். மேலும் பந்தமோக்ஷங்கள் பிரபத்தி, ஆசார்ய அபிமானம் (இரண் டுக்கும்) பொதுவாயிருக்கும் ஸர்வேஸ்வரனுடைய ஸ்வாதந்தரி யத்தை நினைத்தால், நான் இதற்குத் தகுதியுடையவன் அல்ல என்று அஞ்சும்படி இருக்கும். ஆகவே இத்தகைய அசக்தர்களுக்கும் உய்யும் உபாயமாக இருப்பது ஆசார்ய அபிமானமேயாகும்.

ஆசார்ய அபிமானமே பிரபத்தி போல ஸ்வதந்திரமான உபாய மாக இருந்துபகவத் பிராப்தியை உண்டாக்கித் தருமாதலால் அது அந்திம உபாயமாகக் கொள்ளப்படுகிறது. கர்ம, ஞான, பக்திகளை விட பிரபத்தி சிறந்ததாயிற்று. அதையும்விட ஆசார்ய அபிமானமே சரமோபாயமாகும். ஆசாரியன் திருவடிகளையே உபாயமாகக் கொண்டு தெய்வம் வேறு அறியாத நிஷ்டனுக்கு அறியத்தக்க விஷயங்கள் ஏழாகும். அவை முறையே.

1. ஆசார்யனுடைய திவ்ய நாமப் பிரபாவம்
2. ஆசார்யனுடைய திவ்ய குண வைலக்ஷண்யம்.
3. ஆசார்யனுடைய திவ்ய அவதாரச்சிறப்பு.
4. ஆசார்யனுடைய வாசஸ்தல வைபவம்.
5. ஆசார்யனுடைய திருவுருவப் பெருமை.
6. ஆசார்யனுக்குச் செய்ய்த்தகும் அடிமைத்திறம்
7. ஆசார்ய விஷயமான மங்களா ஸாஸனத்தின் மாண்பு என்பனவாகும்.

ஸதாசார்யனை நன்கு பற்றுவதற்கு முன்புள்ள அநாதிகால மெல்லாம் ஒரு காளராத்திரியாகும். பற்றிய அன்று தொடங்கிச் சேதனனுக்கு நல்விடிவு காலமாகும். ஆதித்ய, ராம திவாகர அச்யுத பானுக்களுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி, வற்றாத பிறவிக்கடல் வற்றி விகஸியாத போதில் கமலம் அலர்ந்தது வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே (ஆ. ஹ்ரு 8) என்று கூறுகிறார் அழகிய மணவாளப் பெருமான் நாயனார். ஆகவே ஆசார்யனுடைய தோற் றத்தைச் சூர்யோதயமாகச் சொல்லுவார்கள்.மேலும் ஆசார்ய கடா

க்ஷமானது வேறு ஒரு வழிமுறைகள் முயற்சிகள் வேண்டாதபடி தானே, மகா பாபிகளுடைய கர்மத்தையும் அடியோடு நீக்குவதால், அவர்கள் பரிசுத்தராகி, முடிவில் நிலையான பரமபதத்தையும் அடைவார்கள் என்ற கருத்தை மாமுனிகள் விளக்கமாக

'நாராயணன் திருமால், நாரம் நாமென்னும் உறவு
ஆகாயில் நெஞ்சே அநாதியன்றோ, சீராரும்
ஆசாரியனாலேயன்றோ நாமுய்ந்ததென்று
கூசாமல் எப்பொழுதும் கூறு'

என்கிறார். (ஆர்த் 45)

## ஆசார்யனுடைய ஸ்வரூப, ஸ்வபாவப் பிரபாவங்கள்

பிறவிப் பெரும்பிணியைப் போக்குவதான பெரிய திருமந்திரத்தை உபதேசித்தவனே ஆசார்யனாகின்றானேயன்றி அற்பமான பலன்களைத்தரும் மந்திரங்களை உபதேசிப்பவர்களுக்கு ஆசார்யன் ஆகும் தகுதியில்லை. ஆசார்யன் சிஷ்யனுடைய ஸ்வரூபத்தையே பேணிக்கொண்டிருப்பான். பிறர் சிஷ்யனுடைய தேகத்தையே பேணிக்கொண்டிருப்பார்கள். ஆசார்யானுடைய தேக ஸம்ரக்ஷணம் சிஷ்யனுடைய பணியாகும். சிஷ்யனுடைய ஆத்மஸம்ரக்ஷணம் ஆசார்யனுடைய பணியாகும். ஈஸ்வரனைப் பற்றுகை கையைப் பிடித்துக்காரியம் கொள்வது போலிருக்கும். ஆசார்யனைப் பற்றுகை காலைப்பிடித்துக் காரியம் கொள்வது போலிருக்கும். கையைப்பிடித்தால் சுலபத்தில் விடுவித்துக்கொண்டு போய் விடலாம். ஆனால் காலைப்பிடித்து விட்டால் அபயம் கொடுத்தேயாக வேண்டுமாதலால் ஆசார்யனைப் பற்றுவதே மேலானது. ஆகையால்தான் ஈஸ்வரனே ஆசார்யத்வத்தை ஆசைபட்டுக் குரு பரம்பரையில் முதல் இடம் பெற்றும் கீதையும் அபயப்பிரதானமும் அருளிச்செய்தும் பெருமை அடைந்தான். ஆசார்யன் செய்த உதவிக்குக் கைம்மாறு ஒன்றும் இல்லை. திருமந்திர உபதேசத்தால் வைகுண்டபதியான எம்பெருமானையே அடைகின்றபடியால், இன்னுமொரு வைகுந்தமும், இன்னுமொரு வைகுந்தனும் இருந்தாலொழிய ஆசார்யனுக்குப் பிரதி உபகாரம் பண்ண முடியாது. அவையில்லையாதலால் என்றும் பிரதியுபகாரம் பண்ண முடியாது.

ஈஸ்வர சம்பந்தம், பந்தம், மோட்சம் இரண்டுக்கும் பொதுவாயிருக்கும். ஆனால் ஆசார்ய சம்பந்தம் மோக்ஷத்துக்கே ஹேதுவாயி

ருக்கும். பக்தியில் அசக்தனுக்குப் பிரபத்தி. பிரபத்தியில் அசக்த னுக்கு ஆசார்ய அபிமானம். ஆகவே கர்ம, ஞான பக்தி, பிரபத்திக ளுக்கு மேல் எல்லையாக இருப்பதால் ஆசார்ய அபிமானம், அந்திமோபாயம் என்று சொல்லப்படுகிறது.

### சிறந்த சிஷ்யனின் இலக்கணங்கள்

குற்றமின்றிக்குணம் பெருக்கிக் குருக்களுக்கு அனுகூலராய் என்று பெரியாழ்வார் கூறியபடி சாஸ்திரங்களில் குற்றம் என்று சொல்லப்பட்ட செயல்களைத் தவிர்த்து அந்தக்கரண, புறக்கரணங் களை அடக்கி சமம், தமம் முதலான குணங்களை வளர்த்துக் கொண்டு, ஆசார்யனைத் தெய்வமாகப் போற்றிக் கௌரவத்துடன் தன்னுடைய சேவைகளால் மகிழச்செய்வதே சிஷ்யனுடைய ஸ்வ ரூபமாகும். தேவுமற்றறியாது

'மாடும் மனையும் கிளையும் மறைமுனிவர்
தேடும் உயர்வீடும் செந்நெறியும் - பீடுடைய
எட்டெழுத்துத் தந்தவனே என்றிராதார் உறவை
விட்டிடுகை கண்டீர் விதி (ஞா. ஸா 30)

என்றார் அருளாளர் பெருமாள் எம்பெருமானார்.

சிஷ்யன் ஆசாரியனுக்குச் செய்யும் பணிவிடைகளையே லட்சி யமாகக் கொண்டு ஆர்த்தி, ஆதரம், அநஸூயை இவற்றுடன் எப்போதும் இருக்க வேண்டும். ஆர்த்தி என்பது பணிவிடை செய்யத்துடிப்பது. ஆதரமாவது. அறிவு வேட்கை, அநஸூயை பொறாமை இல்லாதிருப்பது. இவனுடைய ஞானத்திற்கு இலக்கு ஆசார்ய குணங்கள். அஞ்ஞானத்திற்கு இலக்கு ஆசார்ய தோஷங் கள். இவனுடைய சக்திக்கு இலக்கு ஆசார்ய கைங்கர்யம். அசக் திக்கு இலக்கு தீய ஒழுக்கங்கள். இவனுக்கு இகலோக பரலோகங் கள் ஆசார்யன் திருவடிகளே. ஆசார்யனிடத்தில் செய்நன்றி மற வாமை தொடர்ந்திருக்க வேண்டும்.

ஆசார்ய நிஷ்டையில் சிறந்தவர்களைக் குறிப்பிடும்போது வேட்டுவச்சி சபரியைச் சொல்ல வேண்டும். இராமபிரான் தனக்கு முன் பிரத்யக்ஷமாக இருந்தும் அவனை விரும்பாமல் ஆசார்யன் மதங்கமகரிஷி பாதசேவையை விரும்பி உடலைத்துறந்தாள். மாமு னிகளின் திருவாக்குகளாக (உ.தே. மாலை, 64, 65, பாடல்களின் ஆச்சார்யரின் மகிமையைக் கூறுகின்றன).

*ஆச்சார்யர் மகிமையைத் தெரிவிக்கும் பாசுரங்களில் சில*

1. உய்யநினை உண்டாகில் உங்குருக்கள் தம்பதத்தே
வையும். அன்புதன்னை இந்த மாநிலத்தீர் — மெய்யுரைக்கேன்
பையரவில் மாயன் பரமபதம் உங்களுக்காம்
கையிலங்கு நெல்லிக்கனி (உ.தே.மா. 62)

2. தன்னாரியனுக்குத்தான் அடிமை செய்வது. அவன்
இந்நாடுதன்னில் இருக்கும் நாள் - அந்நேர்
அறிந்தும் அதிலாசையின்றி ஆசாரியனைப்
பிரிந்திருப்பாரார் மனமே! பேசு (2 தே.மா. 64)

3. ஆசாரியன் சிச்சனாருயிரைப் பேணுமவன்
தேசாரும் சிச்சனவன் சீரவடிவை - ஆசையுடன்
நோக்குவனென்னும் நுண்ணறிவைக் கேட்டுவைத்தும்
ஆர்க்கும் அந்நேர்நிற்கை அரிதாம் (2 தே.மா. 65)

4. மானிடவன் என்று குருவை மலர்மகள் கோன்
தானுகந்த கோலம் உலோகமென்றும் - ஈனமதா
எண்ணுகின்ற நீசர் இருவருமே எக்காலும்
நண்ணிடுவர் கீழாம் நரகு: (ஞா. ஸா 32)

5. எட்ட இருந்த குருவை இறையன்றென்று
விட்டோர் பரனை விருப்புறுதல் - பொட்டெனத்தன்
கண்செம்பளித்திருந்து கைத்துருத்தி நீர்தூவி
அம்புதத்தைப் பார்த்திருப்பான் அற்று (ஞா. ஸா 33)

6. என்றும் அனைத்துயிர்க்கும் ஈரஞ்செய் நாரணனும்
அன்றும் தன் ஆரியன்பால் அன்பொழியில் - நின்ற
புனல்பிரிந்த பங்கயத்தை பொங்குசுடர் வெய்யோன்
அனலுமிழ்ந்து தானுலர்த்தியற்று (ஞா. ஸா.35)

7. தன் குருவின் தாளிணைகள் தன்னில் அன்பொன்றில்லாதான்
அன்பு தன்பால் செய்தாலும் அம்புயைலோன் - இன்பமிகு
விண்ணாடு தானளிக்க வேண்டியிரான ஆதலால்
நண்ணாரவர்கள் திருநாடு (உ. தே. மா 60).

*போன்ற பாடல்கள் பல ஆசார்ய மகத்துவத்தை நன்கு விளக்கு கின்றன.*

ஆசார்யனைப்போலவே ஆசார்யன் பத்தினியையும் சிஷ்யன் மதித்து அடிமைகள் செய்ய வேண்டும் என்பதை நம்பிளளையும் அவர் சிஷ்யர் வடக்குத் திருவீதிப்பிள்ளையும் நடத்திய வரலாறு கூறுகிறது. பிள்ளை லோகாசாரியாரைக் காப்பாற்ற வேண்டி, ஓடத்திலிருந்து மழையையும், புயலையும் பொருட்படுத்தாது நீரில் குதித்த ஒரு சாத்வீக அம்மையாரின் ஆசார்ய நிஷ்டைக்கு மதிப்பே கிடையாது. உடையவர் ஒரு ஊமைப்பெண்ணுக்குத் தன் பாதார விந்தங்களைப் பற்றாகக் கொள்ளுமாறு கூறியபொழுது, ஆழ்வான் தனக்குப் பிரபத்தியை உடையவர் காட்டி விட்டார். நானும் ஊமையாய் இருந்தால் எனக்கும் இந்தப்பேறு கிடைக்குமே என்று வருந்தினார் என்பர்.

மண்கலந்த நீரை ஒரு பாத்திரத்திலிட்டுத் தேற்றாங்கொட்டை யையிட்டுத் தேற்றினால் மண்ணானது கீழ்ப்படிந்து தெளிந்த நீர் மேலே நிற்கும். அது போலவே அஞ்ஞானம் நிறைந்த சரீரத்தில் உள்ள ஆத்மாவை ஆசார்யனாகிற மகா உபகாரகன், திருமந்திரமா கிற தேற்றாம்விரையாலே தேற்றினால் அஞ்ஞானம் படிந்து ஞானம் பிரகாசிக்கும். தெளிந்த நீரை வேறு பாத்திரத்தில் சேர்க்கும் வரை கை பட்டபோதெல்லாம் கலங்குமா போலே, பிறந்த ஞானத்தைக் கலக்குகிற பிராகிருத சரீரத்தை விட்டுப்போய் அப்பி ராக்ருத சரீரத்தில் புகுந்தனையும் கலங்காமல் நோக்கும் தன்னு டைய ஸதா சார்யன் கண்வட்டத்திலே வாழ்தலே ஸ்வரூபம் என்றனர் பூர்வர்கள். உப. தே. ரத்னமாலை 66-ம் பாடலில் மாமுனிகள்

> "பின்பழகராம் ஜீயர் பெருந்திவத்தில்
> அன்பதுவுமற்று மிக்க ஆசையினால் - நம்பிள்ளைக்
> கான அடிமைகள் செய் அந்நிலையை நன்னெஞ்சே
> ஈனமற எப்பொழுதும் ஓர்"

என்றார்.

ஆசார்யனுடைய திருமுகமண்டல சேவையையும், கைங்கர் யத்தையும் விட்டு வைகுந்தம் போகவும் அவர் இச்சைப்பட வில்லை. ஆசார்யன் செய்கிற தப்பான கார்யங்களையும் கூட சிஷ்யன் மனமகிழ்வுடன் அங்கீகரித்து ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற நிலையை விளக்கும் பகுதிகள் பல காணப்படுகின்றன. எல்லாவற்றையும் குறிக்க இயலாததால், ஒன்றை மாத்திரம் உதார ணமாகச் சொல்லித் தலைக்கட்டுவோம்.

அக்காலத்தில் நம்பிள்ளை ஒரு உரு திருவாய்மொழி நிர்வஹித்தருளினார். அதைக்கேட்ட நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் (கூரத்தாழ்வானுடைய பேரர்) அதற்கு ஈடாக ஒரு லட்சத்து இருபத்தையாயிரம் கிரந்தமாக எழுதியதை நம்பிள்ளையிடம் சமர்ப்பிக்க, நம்பிள்ளை தன்னுடைய அனுமதியில்லாமல் எழுதியதற்காக மிகவும் கோபித்து சிஷ்யாஸ்ரமம் அற்று விட்டது என்று கூறி அதை வாங்கி நீரைச்சொரிந்து கரையானுக்குக் கொடுக்க அவை அன்றே அழிந்து போயின. ஆசாரியர்கள் சிஷ்யர்களிடத்தில் எந்த அளவு கண்டிப்பாக இருந்தார்கள் என்பதற்கு வேறு ஒரு வரலாறும் காணலாம். வடக்குத் திருவீதிப்பிள்ளை எழுதிய திருவாய்மொழிக்கு ஈடு முப்பத்தாறாயிரமும் நம்பிள்ளை கண்டு மிகவும் உகந்தருளி நன்றாக எழுதினீர். ஆனால் நம்முடைய அனுமதியில்லாமல் எழுதினீராதலால் இங்கே தாரும் என்று வாங்கி தமக்கு அபிமதசிஷ்யரான ஸ்ரீ மாதவப்பெருமாள் என்கிற ஈயுண்ணிச் சிறியாழ்வானிடம் கொடுத்தார் என்பதை உப. தே. மாலை 48-ல்

> 'சீரார் வடக்குத் திருவீதிப்பிள்ளை எழுது
> ஏரார் தமிழ்வேடத்தீடுகளைத் - தாருமென
> வாங்கி முன் நம்பிள்ளை ஈயுண்ணி மாதவர்க்குத்
> தான் கொடுத்தார் பின்னதனைத்தான்'

என்று பெரிய ஜீயர் குறிப்பிட்டுள்ளார். பகவத் பாகவத விஷயங்களையெல்லாம் முழுமையாக எழுத முயன்றால் விரிக்கில் பெருகும் தொகுக்கில் எஞ்சும். சிலர் ஸ்ரீ பாஷ்யம் எப்படி இருக்கும் என்று வினவ, அவர்கள் நடுவில் திருவீதியில் மாலைநேரத்தில் பழுத்த வேட்டியும் உத்தரீயமும் தரித்து கூரத்தாழ்வான் என்ற உருவில் உலவும் என்றார்களாம். பகவத் விஷயம் எங்கே கேட்கலாம் என்று கேட்டபொழுது, நடுவில் திருவீதிப்பிள்ளை; பட்டர் என்பதொரு தேன்மா பழுத்து நிற்கிறது. அங்கே சென்று நன்றாகப் பார்த்து கல்லிட்டு எறியாதே. ஏறித்துகையாதே அடியிலே இருக்கவே மடியிலே விழும் என்றார்களாம். எம்பெருமான் பெரிய ஜீயரிடம் ஒரு வருட காலம் திருவாய்மொழி ஈடுகேட்ட வைபவத்தைச் ஜீயர் தாமே தமது பேற்றினை பின்வரும் பாடலில் கூறுகிறார்.

> நாமார், பெரிய திருமண்டபம் யார் நம்பெருமான்
> தாமாகவே என்னைத் தனித்தழைத்து - நீ மாறன்
> செந்தமிழ் வேதத்தின் செழும்பொருளை நாளுமிங்கே
> வந்துரை யென் றேவுவதே வாய்ந்து என்று கூறுகிறார்

*பரிதாபி வருஷ ஆவணிமாத திருப்பவித்ர திருநாளின்போது பெரிய திருமண்டபத்திலே தாமும் நாச்சிமாரும் எதிராஜர் சேனை முதலியார் ஆழ்வாரும் உடனிருக்க பெரிய திருலோக்கமாக எழுந்த ருளியிருந்து ஒரு வருட காலம் ஒரு தடையுமின்றி ஈடு முப்பத்தாறா யிரம் முதலாக ஐந்து வியாக்யானங்களையும் ஜீயர் திருவாய்மொழி சாற்றுகிற கட்டளையையும் கேட்டு கந்த விபரத்தை*

'நல்லதோர் பரிதாபி வருடந்தன்னில்
நலமான ஆவணியில் முப்பத்தொன்றில்
சொல்லரிய சோதியுடன் விளங்குவெள்ளிக்
கிழமை வளர்பக்கம் நாலாம்நாளில்
செல்வமிகு பெரிய திருமண்டபத்தில் செழுந்
திருவாய் மொழிப்பொருளைச் செப்புமென்று
வல்லியுடை மணவாளர் அரங்கர்நங்கள்
மணவாள மாமுனிக்கு வழங்கினாரே'

*என்ற பாடல் சாற்றுகின்றது.*

*ஒருநாள் பிள்ளை உறங்காவில்லி தாஸர் முதலியாண்டான் ஸ்ரீபாதத்திலே சென்று தண்டனிட்டு சிஷ்யலட்சணம் இருக்கும்படி என்? என்று வினவ, முதலியாண்டான், ஆசார்ய விஷயத்தில் சிஷ்யன், பார்யாஸமனுமாய், சரீர ஸமனுமாய், தர்ம ஸமனுமாய் இருக்கக்கடவன். அதாவது சொன்னதைச் செய்கையும் நினைத் தைச் செய்கையும், நினைவாக இருக்கையும் என்று இருக்க வேண்டும் என்றார். அதாவது பார்யை சொன்னதைச் செய்வாள், சரீரம், மனம் நினைத்ததைச் செய்யும். தர்மமான இயல்பு நினை வாக இருக்கும் என்பது பொருள். அதே போல் சிஷ்யன் விஷயத் தில் ஆசார்யன் பர்த்தா ஸமனுமாய் சரீர ஸமனுமாய் தர்மிஸமனு மாய் இருக்க வேண்டும். ஏவிக்கொள்ளுகையும், எடுத்து இடுவிக் கையும் (அசேதனத்தை நினைத்தபடி விநியோகம் கொள்வது) எடுத்துக்கொள்கையுமாகும்.*

*ஒருநாள் கூரத்தாழ்வானுக்கும் முதலியாண்டானுக்கும் ஸ்ய வாநுவிருத்திப் பிரஸந்நா சார்யரால் மோக்ஷமா, கிருபா மாத்ரப் பிரஸந்நா சார்யாரால் மோக்ஷமா என்ற கேள்வி எழுந்தது. முதலி யாண்டான் 'குற்றமின்றிக் குணம் பெருக்கிக் குருக்களுக்கனுகூல ராய்' என்று பெரியாழ்வார் கூறியபடி ஸ்வானுவிருத்திப் பிரசந்நா சார்யரால்தான் என்று முதலியாண்டான் கூற ஆழ்வான், பயனன்றா கிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணி*

கொள்வான், குயில் நின்றார்பொழில் சூழ் குருகூர் நம்பி என்று மதுரகவிகள் சொல்லியபடி, நமக்கெல்லாருக்கும் ஸ்யவாநுவிருத்தி இயலாமையாலே கிருபாமாத்ரத்தினால் மோக்ஷம் கிடைக்க வேணடும் என்றார். முதலியாண்டானும் அதை ஒத்துக்கொண்டார்.

ஸாக்ஷாத்காரம் என்ற ஞான விசேஷம், விபூதி ஸாக்ஷாத்காரம் உபயவிபூதி ஸாக்ஷாத்காரம், பிரத்யக்ஷஸாக்ஷாத்காரம் என்று மூன்று வகை உண்டு. பிரத்யக்ஷஸாக்ஷாத்காரம் இல்லாதபோது ஏனைய வற்றால் பிரயோஜனமில்லை. அந்தப்பிரத்யக்ஷ ஸாக்ஷத்காரத்தை, பரத்வம், வ்யூஹம் விபவம், அந்தர்யாமி, அர்ச்சை, ஆசார்யத்வம் என ஆறுவகையாகக் கொண்டனர். பரத்வம் நித்ய முக்தர்க்கும் வியூஹம், ஸநகாதிகளுக்கும், விபவம் அக்காலத்தே வாழ்ந்தவர்களுக்கும், அந்தர்யாமித்வம், உபாஸகர்களுக்கும், அர்ச்சாவதாரம் எல்லோருக்கும் ஆசார்யத்வம் கதிசூனியருக்கும் பிரத்யக்ஷ ஸாக்ஷாத்காரமாயிருக்கும்.

கதியவற்றவர்களுக்கு மேற்சொன்னவை, தேச, கால, கர்ணங்களுக்கு அப்பாற்பட்டதாதலால் கிட்ட முடியாது. ஆராய்ந்து பார்த்த இடத்தில் ஆசார்யாவதாரத்தால் அல்லாது ஞானதானம் பண்ண முடியாது. எனவேதான் ஈஸ்வரன்தானே உபாயமாகவும் உபேயமாகவும், ஆசார்யனாக வந்து அவதரித்து ஞானதானம் பண்ணி, சிஷ்யனை அடிமை கொண்டு ஆதரிப்பார். ஆகவேதான் ஆழ்வாராதிகளும் ஆசார்யப்பெருமக்களும் ஒரே குரலில் ஸ்ரீயப்பதியான நாராயணன் தானே ஆசார்யனாக வந்து அவதரித்தான் என்று பல இடங்களிலும் உறுதியாகக் கூறியுள்ளனர். ஆகவே நம்மை ஸம்ஸார ஸாகரத்தில் நின்றும் கரையேற்றவே, பகவான் பத்ரிகாஸ்ரமத்திலே நர நாராயண ரூபத்தில் அவதரித்தான். ஆகவே உபாயத்தில் முதல் நிலை எம்பெருமான். இறுதிநிலை ஆசார்யன் என்று உணர வேண்டும். ஆசாரியனை மனிதனாக எண்ணாமல் பீதவாகடைப்பிரானே பிரமகுருவாக வந்து (பெரியதிரு 5.2.8) என்றபடி பகவதவதாரம் என்று கொள்ள வேண்டும்.

**கூரத்த ஆண்டாளின் பிரபாவம்:** கூரத்தாழ்வான் சிஷ்யன் வீர சுந்தரப்பிரம்மராயன், கூரத்தாழ்வான் மகனான பட்டருடன், விரோதம் பூண்டு, அவரை ஊரை விட்டே விரட்டியபோதிலும், அவன் இறந்து போன செய்திகேட்ட ஆண்டாள் மிகவும் வியாகூலப்பட, அதைக்கண்ட மற்ற முதலிகள் பட்டரைத் தொல்லைப்படுத்திய விரோதி இறந்ததற்கு நீர் ஏன் விசாரப்பட வேண்டும் என்று

கேட்டபொழுது, வீரசுந்தரன் நேரே ஆழ்வானுடைய சிஷ்யனாயி ருந்து ஆசார்யபுத்திரனாகிய பட்டரைத் துன்புறுத்தி அவர் திறத்தில் மகா அபராதம் செய்து பின்னர் அவரிடம் மன்னிப்பும் பெறாதே இறந்து போனான். அவனை யமபடர் அடித்துத் துவைத்து இம்சை செய்வார்கள் என்றுதான் நான் கவலைப்படுகிறேன். உங்களுக்கு அது தெரியவில்லை என்றாள்.

மற்றொரு நாள் ஆண்டாள் பட்டரிடம் சீர்பாத தீர்த்தம் முதலிய பிரசாதங்களைப் பெற்ற பொழுது, பிள்ளையை வணங்க லாமா என்று முதலிகள் வினவ, பிள்ளைகாள், ஏனைய ஆசாரியன் ஸ்வாமிகளை வணங்கலாம். தான் ஏறியருளப்பண்ணிக்கொண்ட எம்பெருமானுடைய தீர்த்தப்பிரசாதங்கள் கிரஹிக்கலாகாதா என்று பதில் கூறினார். ''மிலேச்சனும் பக்தனால் சதுர்வேதிகள் அனுர்வர்த் திக்கத்தக்க அறிவு கொடுத்துக் குல தெய்வத்தோடு சமமாகப் பூஜை கொண்டு தீர்த்த பிரசாதனம் என்ற திருமுகப்படியும் என்ற கருத் தைக்கூறி வெளியிட்டார், ஆசார்ய ஹ்ருதயத்தில் அழகிய மணவா ளப்பெருமாள். கூரத்தாழ்வான் நாராயண ராமானுஜ என்ற மந்திரங் கள் இரண்டுக்கும் வாசி ஒன்று. பந்த மோக்ஷங்கள் இரண்டுக்கும் பொதுவாயும் மற்றது மோக்ஷத்துக்கும் ஹேதுவாயுமிருக்கும் என்ற கருத்தில் சதுரா, சதுரக்ஷரி என்றருளிச் செய்தார். ஆகவேஸதாசார்ய னது லட்சணம் தன் சிஷ்யர்களைப் பயனன்றாகிலும் பாங்கல்லரா கிம் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்ள வேண்டியது. தன்னுடைய சிஷ்யனான நாலூரானும், தன்னுடைய விஷயத்திலே மகா பாதகத்தைப் பண்ணினவன் என்று தெரிந்தும், பகவானிடத் தில் நான் பெற்ற பேறு நாலூரானும் பெற வேண்டும் என்று வரம் கேட்ட, பகைவனிடத்தும் பரிவு காட்டிய கூரத்தாழ்வான் போன்ற பண்பாளர்களும் உள்ளனர். ஆழ்வார் திருநகரியில் மாமு னிகள் வாழ்ந்த இடமான ஓலைமச்சில் நடுஇரவில் அவர் தூங்கிக் கொண்டு இருக்கும் நேரத்தில் தீயிட்டுக் கொழுத்திய பாபிகளை அரசன் தண்டிக்கச் சொல்ல, மாமுனிகள் தலையிட்டு அவர்களது உயிர்களைக் காப்பாற்றினார் என்ற வைபவம் பெரிய ஜீயரது அமானுஷ்யமான கிருபையைக் காட்டுகிறது. சிற்ற வேண்டா சிந்திப்பே அமையும் என்கிறபடியே, தேவுமற்றறியேன் என்றிருக் கும் ஸ்ரீமான்களான அதிகாரிகள் யாவர் யாவர் எனில் பெரியாழ் வார் திருமகளாரான ஆண்டாள், ஆழ்வார் திருவடிகளில் ஆஸ்ர யித்த மதுரகவிகள், நாதமுனிகள் திருவடிகளில் குருகைக்காவலப் பன், ஆளவந்தார் திருவடிகளில் தெய்வவாரியாண்டான், எம்பெரு மானார் திருவடிகளில் வடுகநம்பி, நம்பிள்ளை திருவடிகளில்

பின்பழகிய பெருமாள் தாஸர்பிள்ளை யோகாச்சாரியர் திருவடிக ளில் கூர குலோத்தம தாசர் திருவாய் மொழிப்பிள்ளை திருவடிக ளில் நம் ஜீயர், நம் ஜீயர் திருவடிகளில் முதலிகள் பலருமாவர்.

ஆகவே மந்திரமும் தேவதையும் பலமும் பலானுபந்திகளும் பல ஸாதனமும் ஐஹிக போகமும் எல்லாம் ஆசார்யனே என்று நினைக்கக்கடவன் என்று பிள்ளை லோர்காச்சார்யர் அருளியபடி உறங்கும் பெருமாளான அரங்கனை விட உலவும் பெருமாளான ஆசார்யனே நமக்கு அந்திமோபாய நிஷ்டைக்கு பிரமாணமாக அனுசந்திக்கக் கூடியதாயிருக்கும். ஏத்தி இருப்பாரை வெல்லுமே அவர்தமைச் சாத்தியிருப்பார்தவம் என்னுமாப்போல, பரதாழ் வான் ஏத்தியிருந்தார். அவரைச் சார்த்தியிருந்து உய்ந்து போனார் சத்ருக்கனாழ்வார். ஏத்தியிருந்தார் நம்மாழ்வார். அவரைச்சாற்றி இருந்தார் மதுரகவிகள். ஏத்தியிருந்தார் பெரியாழ்வார். அவரைச் சாற்றியிருந்தார் நாச்சியார். ஆகவே ஆச்சார்யர்களுக்கு ஏற்படும் மகத்துவம் அவர்களது சிஷ்யர்களுக்கும் தாமாகவே வந்தமையும் எனக்காண்கிறோம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

### ஆழ்வார்கள் பிரபாவம்:

பொய்கை முனி பூதத்தார் பேயாழ்வார் தண்
பொருநல் வருங்குருகேசன் விட்டுச் சித்தன்
துய்யகுலசேகரன் நம் பாண நாதன்
தொண்டரடிப்பொடி மழிசை வந்த ஜோதி,
வையமெலாம் மறைவிளங்க வாள்வேலேந்தும்
மங்கையர்கோன் என்றிவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளியவோதி
தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே.

### ஆசாரியார்கள் பிரபாவம்

என்னுயிர் தந்தளித்தவரைச் சரணம் புக்கு.
யானடைவேன் அவர் குருக்கள் நிரைவணங்கி,
பின்னருளால் பெரும்பூதூர் தந்த வள்ளல்
பெரியநம்பி ஆளவந்தார் மணற்கால்நம்பி
நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக்கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனை நாதன்
இன்னமுதத்திருமகள் என்றிவரை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே.

அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ,
சடகோபன் தண் தமிழ் நூல் வாழ- கடல் சூழ்ந்த
மண்ணுலகம் வாழ, மணவாள மாமுனியே!
இன்னுமொரு நூண்றாண்டிரும்

நானிலமுந்தான் வாழ நான்மறைகள் தாம் வாழ
மாநகரின் மாறன் மறைவாழ - ஞானியர்கள்
சென்னியணிசேர் தூப்புல் வேதாந்த தேசிகனே
இன்னுமொரு நூற்றாண்டிரும்.

**ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.**

## வைஷ்ணவ ஜனதோ என்று தொடங்கும் நர்ஸிமேத்தா எழுதிய பாடலின் தமிழாக்கமான நாமக்கல் கவிஞரது பாடல்

வைஷ்ணவன் என்போன் யார்?

வைஷ்ணவன் என்போன் யாரெனக்கேட்பின் வகுப்பேன் அதனைக்கேட்பீரே? (வைஷ்)

1. பிறருடைய துன்பம் தனதென எண்ணும்
பெருங்குணத் தவனே வைஷ்ணவனாம்.
உறுதுயர் தீர்த்ததில் கர்வங்கொள்ளான்
உண்மை வைஷ்ணவன் அவனாகும்.
உறவென மனிதர்கள் உலகுள யாரையும்
வணங்குவன் உடல், மனம், சொல் இவற்றால்.
அறமெனத் தூய்மை காப்பவன் வைஷ்ணவன்
அவனைப் பெற்றவன் அருந்தவத்தான் (வைஷ்)

2. விருப்பும் வெறுப்பும் விலக்கிய நடுநிலை
விளங்கிட ஆசைகள் விட்டவனாய்
ஒருப்புடன் அந்நிய மாதரைத் தாயென
உணர்வோன் வைணவன். தன் நாவால்
உரைப்பதிற் பொய்யிலன், ஒரு போதும் அவன்
ஊரார் உடைமையைத் தொடமாட்டான்.
வளர்ப்புற குணமதை வகிப்பவன் எவனோ
அவனே உண்மை வைஷ்ணவனாம்

3. மாயையும் மோகமும் அணுகாதவனாய்
மனத்தினில் திடமுள வைராக்யன்
நாயகனாகிய ஸ்ரீராமன் திரு
நாமம் கேட்டதும் மெய்மறந்து
போயதில் பரவசம் அடைகிற அவனுடைப்
பொன்னுடல் புண்ணிய தீர்த்தங்கள்,
ஆயன யாவையும் அடங்கிய க்ஷேத்திரம்,
ஆகும் அவனே வைஷ்ணவனும்

4. கபடமும் லோபமும் இல்லாதவனாய்க்
காமக்ரோதம் களைந்தவனாய்த்
தபசுடை அவனே வைஷ்ணவன் அவனைத்
தரிசிப்பவரின் சந்ததிகள்
சுபமடைவார்கள் எழுபத்தோராம்
தலைமுறை வரையில் சுகமுறுவர்
அமரப் புனிதம் அடைகுவர் பிறப்பெனும்
அலைகடல் நீந்திக்கரை சேர்வர் (வைஷ்)

# அரும்பத உரைகள்

அடிச்சோதிக்கு எழுந்தருளி — இறந்த போனபின்
ஆர்த்தி — மணவாள மாமுனிகள் எழுதிய நூல்
அனுசந்திக்க — பாட, பாராயணம் செய்ய
ஆஹி — ஆசார்ய ஹிருதயம்; எழுதியவர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்
நியமத்தோடு — ஒழுக்க முறையோடு
ஸிம் ஹாஸனாதிபதி — மதத்தலைவர்
தேகப்பிராப்தி — மரணம்
சௌளனம் — முடியிறக்குதல்
யஞ்ஞோபவீதம் — பூணூல் அணிதல்
சம்ஸ்காரங்கள் — சடங்குகள்
திரு ஆலவட்டம் — விசிறி வீசுதல்
பஞ்சம குலம் — மிகத்தாழ்வான குலம்
வியாஜ்யத்தோடு — காரணத்தோடு
சாத்தின, சாத்தாத முதலிகள் — பிராமணர், பிராமணரல்லாத வைஷ்ணவர்கள்
ஸ்ரீபக்ஷநிரசனம் — விரோதிகளை அடக்குதல்
மங்களாஸாஸனம் — வாழ்த்தியருளுதல்
அங்கீகரித்து — ஏற்றுக்கொண்டு
அஜ்ஞானப்பரதமான சரீரம் — அறிவின்மையைத்தரும் உடல்
அதிகாரம் — தகுதி
அநாதிகாரி — தகுதியற்றவன்
அநர்த்தப்படுதல் — கேடு அடைதல
அநஸூயை — பொறாமையின்மை
அநுகுணமாக — பொருத்தமுற
அநுவர்த்திக்க — பின்சென்று வேண்டிக்கொள்ள
அந்தரங்கரான — இதயத்தில் இடம் பெற்றவரான
அந்திமஸ்ம்ருதி — இறுதியில் நினைவு
அந்திமோபாயம் — இறுதியான நெறி (ஆச்சார்ய அபிமானம்)
அந்திமோபாய நிஷ்டன் — இறுதியான நெறியில் ஊக்கமுடையவன்

| | | |
|---|---|---|
| அந்வயித்து | — | தொடர்புகொண்டு |
| அபிமத சிஷ்யர் | — | மிகவும் இஷ்டமான சிஷ்யர் |
| அபேக்ஷை | — | விருப்பம் |
| அப்ராக்ரதம் | — | பிரக்ரதிக்கு எதிரான இயல்பு |
| அப்ராக்ருத சரீரம் | — | பரமபதத்து அழிவற்ற உடல் |
| அம்சம் | — | பங்கு |
| அலேகம் | — | எழுதப்படாத ஓலை |
| அஹங்காரம் | — | 'யான்' என்றிருப்பது |
| ஆசார்யத்வம் | — | ஆசாரியனாயிருக்கும் தன்மை |
| ஆசார்யாபிமானம் | — | ஆசாரியன் சிஷ்யனிடத்துக் கொள்ளும் அன்பு |
| ஆஸ்ரயித்தல் | — | பற்றுக்கோடாகக் கொள்ளுதல் |
| ஆத்மவான் | — | ஆன்ம அறிவை உடையவன் |
| ஆனந்த மக்நராய் | — | ஆனந்தத்தில் மூழ்கியவராய் |
| இஷ்ட விநியோகம் | — | விருப்பப்படிபயன் கொள்கை |
| இஹலோக பரலோகங்கள் | — | இம்மை மறுமை உலகங்கள் |
| உசிதமான ஸ்தலங்கள் | — | பொருந்திய இடங்கள் |
| உத்தாரகம் | — | கரையேற்றுவது |
| உத்தேச்யம் | — | இலக்கு |
| உபகாரஸ்ம்ருதி | — | செய்ந்நன்றியறிதல் |
| உபத்ரவம் | — | ஊறுபாடு |
| உபயவிபூதி | — | விண்ணுலகும் மண்ணுலகும் |
| உபேக்ஷித்து | — | வெறுத்து |
| ஏகாந்தம் | — | தனிமை |
| ககனம் ககநாகாரம், ஸாகர ஸாகரோபம் | — | வானம், நாகலோகம், கடல், பாதாளம் |
| கூடஸ்த்தராக | — | முதல்வராக |
| க்ருதஜ்ஞர் | — | செய்நன்றி மறவாதவர் |
| கிருபாமாத்ர ப்ரஸன்னா சார்யன் | — | கிருபையினாலே மகிழ்ச்சி அடையும் ஆசார்யன் |
| க்ருஷிபரம் பரைகள் | — | அடுத்தடுத்துச் செய்த முயற்சிகள் |
| சர மோபாயம் | — | அந்திமோபாயம், ஆசார்யபக்தி |
| சரீர ஸமன் | — | உடலுக்கு ஒப்பாவான் |
| சரீரிஸமன் | — | ஆத்மாவுக்கு ஒப்பாவான் |
| சிஷ்யப் பிரசிஷ்யர்கள் | — | சிஷ்யர்களும் அவர்களுக்கு சிஷ்யர்களும் |

| | | |
|---|---|---|
| ஜ்ஞாநாதிகை | — | பேரறிவுடையாள் |
| சுஷ்கஹ்ருதயராய் | — | இதயத்துவற்றியவர் |
| ஜ்ஞானவ்ருத்தர் | — | அறிவால் முதிர்ந்தோர் |
| தத்காலவர்த்திக்கும் | — | அக்காலத்தில் வாழ்பவர்க்கும் |
| தத்வ ஸத்திதி | — | உள்ள தன்மை |
| தத்ஸம்பந்திகளும் | — | சம்பந்தம் உடையவர்களும் |
| தபதமுத்ராதாரணம் | — | திருவிலச்சினை பொறித்தல் |
| தர்க்ககோஷ்டி | — | சொற்போர் நிகழும் அவை |
| தர்சன ப்ரவர்த்தகர் | — | தரிசனத்தை வளர்ப்பவர் |
| தர்மஸமன் | — | தர்மத்திற்கு ஒப்பாவான் |
| தாத்பர்யம் | — | கருத்து |
| தாஸக்ருத்யம் | — | தாசர்களின் செயல் |
| திவ்யமங்களவிக்ரஹம் | — | திருமேனி |
| திவ்யஸூக்தி | — | தெய்வீகமான வார்த்தைகள் |
| திவ்யாஜ்ஞை | — | அரசன் ஆணை |
| தீர்த்தவாஸி | — | புண்ணிய தீர்த்தங்களில் நீராடி வாழ்பவன் |
| துல்யம் | — | சமம் |
| தேசாந்தரம் | — | வேறுதேசம் |
| த்யா ஜ்யோபாதேயங்கள் | — | விடவும் கொள்ளவும் தக்கவை |
| நித்யவிபூதி | — | பரமபதம் |
| நிரங்குச ஸ்வதந்த்ரனாய் | — | தடையற்ற உரிமையுடையோனாய் |
| நிர்வாஹகர் | — | நிர்வகிப்பவர் |
| நிஷ்டை | — | ஊன்றியிருத்தல் |
| நைச்யாநு ஸந்தானம் | — | நீசனேன் என்று அனுசந்தித்தல் |
| பந்தம் | — | பிரவித்தளை |
| பயாநுதாபம் | — | அச்சமும் கழிவிரக்கமும் |
| பரிபவித்து | — | அவமானப்படுத்தி |
| பஹூமானம் | — | ஸன்மானம் |
| பாஷண்டி | — | அவைதீகர் |
| பாஷ்யகாரர் | — | எம்பெருமானார், ராமானுஜர் |
| பிரதிஜ்ஞை | — | உறுதி |
| பிரத்யுபகாரம் | — | பிரதியாகச் செய்யும் உதவி |
| பிரமாணம் | — | சான்று |
| புத்திவிசேஷம் | — | சீரிய அறிவு |
| ப்ரகிருதிமான் | — | உலகில் உழல்பவன் |

| | |
|---|---|
| ப்ரணாமம் | தண்டன் ஸமர்ப்பித்தல் |
| ப்ரஸாதித்தருளி | வழங்கி |
| ப்ராக்ருத சரீரம் | இவ்வுடற்பிறவி |
| ப்ராதா | உடன்பிறந்தோன் |
| பராந்தர் | மயங்கியவர் |
| ப்ராப்யபூமி | இலக்கான இடம் |
| ப்ரீதரானார் | மகிழ்ச்சியடைந்தார் |
| ப்ருத்யர்கள் | தாசர்கள் |
| மமகாரன் | எனது என்றிருப்பவன் |
| மாதூகரம் | பிக்ஷை |
| மாயாவாதி | எல்லாம் பொய் என்பவன் |
| மிதுனம் | சேர்த்தி |
| முகோல்வாஸம் | முகமலர்ச்சி |
| மூர்த்திகரித்து | உருவெடுத்து |
| யதனம் | முயற்சி |
| யாத்ருச்சிகமாக | தற்செயலாக |
| ஸாதநானுஷ்டாமை | கருவியைப் பயன்படுத்துதல், மேற்கொள்ளுதல் |
| ஸாத்விகை | ஸாதுவானவள் |
| ஸித்தோபாயம் | முயன்று பெற வேண்டியதன்றி முன்பே உள்ளதான வழி |
| ஸ்வஜாதீய புத்தி | தன்னுடைய ஜாதி என்ற அறிவு |
| ஸ்வானுவ்ருத்திப்பரசன்னாசார்யன் | நம்மால் பணிவிடை செய்யப் பெறுவதால் மட்டும் மகிழ்ச்சியடையும் ஆச்சார்யன் |
| விபவா | அவதார மூர்த்திகள் |
| அர்ச்சை | கோயில்களில் எழுந்தருளியுள்ள, திருமேனிகள் |
| முனித்திரயம் | பிரபந்தம் பாடுதல் அவசியமா என்ற சர்ச்சை |
| தோளுக்கினியான் | பெருமாள் எழுந்தருளும் வாகனம் |
| கோயிலொழுகு | கோயில் நடைமுறைகளைப் பற்றிக் கூறும் நூல் |
| மன்வந்தரம் | ஒருமனுவின் ஆட்சிக்காலம். எத்தனையோ சதுர்யுகங்களைக் கொண்டது |

| | | |
|---|---|---|
| ஸுஷும்நை | — | பிரணாயாமம் செய்யும் பொழுது உயிர்சக்தி நிற்கும்நாடி |
| விஷ்ணுகிரந்தி | — | முடிச்சுக்கள் (தடைகள்) |
| ருத்ர கிரந்தி | — | முடிச்சுக்கள் (தடைகள்) |
| விரஜாநதி | — | வைகுண்டம் போகும் ஆத்மா. மூழ்கி சுத்த சத்வமய தேகம் பெறும் நதி |
| சத்ரசாமராதிகள் | — | பூஜைக்குரிய உபகரணங்கள் |
| உபநயனம் | — | பூணூல் அணிவித்தல் |
| ஸித்தித்திரயம் | — | ஆத்மஸித்தி, ஈஸ்வர ஸித்தி, ஸம்வித்சித்தி என்று ஆளவந்தார் அருளிய நூல்கள் |
| சங்க்திஸந்நிவேசம் | — | விளக்கம் |
| குருபரம்பரரா பிரபாவம் விவரணம் | — | பின் பழகிய பெருமாள் ஜீயர் அருளியது |
| பெரிய திருமுடியடைவு | — | மணவாளமாமுனிகள் சிஷ்யரான கந்தாடையண்ணன் குமாரரான கந்தாடைநாயன் அருளியது |

**ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.**